# உரைச்சொற் களஞ்சியம்

மணிவாசகர் பதிப்பகத்தின்
வெள்ளிவிழா வெளியீடு

1810




டாக்டர் சா. கிருட்டினமூர்த்தி,
எம்.ஓ.எல்., பி.எட்., பிஎச்.டி,, டிப். இன். லிங்.




மணிவாசகர் பதிப்பகம்
சிதம்பரம்

1985 — 25/-

முதற்பதிப்பு: செப்டம்பர், 1985

உரிமை செறிவு

பதிப்பாசிரியர் :
பேராசிரியர் ச. மெய்யப்பன், எம். ஏ.

விலை ரூ. 25-00




கிடைக்குமிடம்
மணி வாசகர் நூலகம்
12-B, மேல சன்னதி சிதம்பரம்-608 001
14, சுங்குராம் தெரு, பாரிமுனை, சென்னை-600 001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600 001
28-A, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625 001
3/4 ராஜ வீதி கோய்முத்தூர்-641 001
சென்னை போன்: 512996, சிதம்பரம் போன்: 2799

அச்சிட்டோர்: கற்பகம் அச்சகம், சென்னை - 600 002
தொலைபேசி : 847174

57-3
KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA

# சொல்வளம்

ச. மெய்யப்பன் எம்.ஏ.,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மணிவாசகர் பதிப்பகம் **'உரையாசிரியர்கள்'** எனும் அரிய பெரிய நூலை வெளியிட்டது. அது அறிஞர்களின் பாராட்டுதல்களைப் பெற்றது. பரிசும் பெற்றது. பல பதிப்புக்களையும் பெற்றது. அண்மையில் 'உரை மரபுகள்' எனும் அரிய நூலையும் வெளியிட்டது. இப்போது 'உரைச்சொற் களஞ்சியம்' எனும் இந்நன்னூலையும் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறது. உரையாசிரியர்கள் வரிசையில் பல நூல்களை வெளியிட்டு, பலரின் பாராட்டுதல்களையும் போற்றுதலையும் பெற்று வருகிறது.

அகராதியியலுக்கும் மணிவாசகர் பதிப்பகத்தின் கொடை பெரியது. மானிடவியல் கலைச்சொல் அகராதி, மொழியியல் கலைச்சொல் அகராதி, மூலிகை அகராதி, எதிர்ப்பத அகராதி, ஐம்பொறி அகராதி என பல்வகை அகரமுதலிகளை சீரோடும் சிறப்போடும் பதிப்பித்துப் பெருமைபெற்ற நிறுவனமாக மணிவாசகர் பதிப்பகம் திகழ்கிறது. இவ்வரிசையில் 'உரைச்சொற் களஞ்சியம்' மலர்கிறது.

சொல்தொகுதி, அகர வரிசை, சொல் விளக்கம் சொல்லாக்கம், சொல் படைப்பு என இந்நாளில் விரிந்துவரும் மொழியியல் துறையில் சொற்களஞ்சியம் பலவகைப் பயனைத்தரும் என்பது என் நம்பிக்கை. இவ்வகையில் அறிஞர் இளங்குமரன் அவர்கள் எழுதிய 'உரையாசிரியர்கள் கண்ட நுண்பொருள்' முதனூல் ஆகும். முன்னோடியும் ஆகும். அதன் வழியில் வளர்ந்து வரும் நூல்கள் பல. அதனை வெளியிட்ட **சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் தமிழ்க் காப்புக்கழகம்**. துறைதோறும் தமிழுக்கு வளம் சேர்க்கும் பல்கலைக்கழகம். சொல்லாய்வுக்கு கழகம் அளித்த நூல்கள் பல. கழகப் புலவராகிய **இளங்குமரன்** அவர்கள் சொல்லாய்வில் சிறப்பிடம் பெறுகிறார். பாவாணர் வழியில் அடிச்சொல் வேர் ஆராய்ச்சி, ஆழமாய் வேரோடியுள்ளது. அகலமாய் விரிந்துள்ளது. அறிஞர் **மதிவாணன்,** டாக்டர் **இராசேந்திரன்,** அறிஞர் **அருளி,** இன்னும் பலர் சொல்லாய்வில் சாதனைகள் பல புரிந்துள்ளனர். அவ்வகையில் சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் குறிப்பிடத்தக்கவராகிறார்.

முப்பதுகளில் சென்னைப் பல்கலைக்கழக லெக்சிகன் அறிஞர்களின் கூட்டு முயற்சியால் உருவெடுத்தது. அகர வரிசை இந்நாளில் அறிவியல் அணுகுமுறையில் அமைகிறது. தமிழ்ச் சொற்களை வடசொற்கள் என பிறழை உணர்ந்த காலமும் உண்டு. வடமொழிக்கண் தமிழ்ச்சொற்கள் உள எனச் சொல் லவும் நாணினர்; கூசினர். ஐம்பதுகளில் அறிஞர்கள் **எமனோ, பர்ரோ** அவர்களின் ஆய்வேடுகள் ஆயிரமாயிரம் சொற்கள் வடமொழிக்குச் சென்ற வரலாற்றினை விளக்கியுள்ளன. பாவாணர் ஆராய்ச்சிக்கு மேனாட்டறிஞரின் ஒப்புதல் சான்றுகள் பல்கின. பாவாணர் வழியில் ஆய்வாளர்களும் பல்கினர். வேர்ச் சொல் ஆய்வு இன்று, விரிந்து கிளைத்துச் செழித்துள்ளது. அவ்வகையில் இந்நூல் சொல்லின் பொருளை அறிவதற்கும் பொருளை விளங்கிக் கொள்வதற்கும் வேறுபாடு உணர்வதற்கும் விளக்காய் அமைகிறது. இந்நூலைத் தோகுத்த டாக்டர் சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்றவர். டாக்டர் பட்ட ஆய்விற்கு இளம்பூரணரை ஆராய்ந்தவர். பயிலும்போதே கல்வியில் ஆர்வமும் ஆய்வில் வேட்கையும் உடையவராகத் திகழ்ந்தவர். ஆய்வு மாணவராக அமைந்த நாளில் கருமமே கண்ணாய் எடுத்த பணியை குறித்த நாளில் முடிக்கும் பெற்றியர்; ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொருளின் ஆழ அகல நுட்பம் காண்பதில் வல்லவர். தொகைப் படுத்துவதிலும் வகைப்படுத்துவதிலும் வல்லவர். பன்நூல் பயிற்சி மிக்கவர். உழைப்புக்கஞ்சாத இயல்பினர். உரையாசிரி யர்களுடன் கொண்ட உறவை இந்நூல் நன்கு விளக்குகிறது. என் மாணவராகிய அவருக்கு ஒளிமயமான எதிர்காலம் அமைய வாழ்த்துகிறேன்.

அவரது ஆய்வு முன்னுரையும், பன்மொழிப் புலவர் சதாசிவம் அவர்களின் கருத்துரையும், அறிஞர் மதிவாணன் அவர் களின் மதிப்புரையும் நுண்பொருள் விளக்க ஆசிரியர் கழகப் புலவர் இளங்குமரனார் ஆய்வுரையும் இந்நூலின் பன்முக நலங்களை, பல்வகைப் பயன்களை பல்லாற்றானும் பாராட்டு கின்றன. அறிஞர் பெருமக்கள் அனைவரின் ஆய்வுரைகளும் இத்தொகுப்பின் சிறப்புக்கு கட்டியம் கூறுகின்றன.

தமிழ் மக்களின் நெடுங்காலக் கனவினை நினைவாக்கும் **தமிழ்ப் பல்கலைக்கழகத்தின்** ஐந்தாவது ஆண்டினைக் கொண் டாடும் இந்நாளில், அங்கு பணி செய்யும் ஆய்வாளர் கிருஷ்ண மூர்த்தி அவர்களின் அரிய நூல் வெளிவருவது களிபேருவகை நல்குகிறது.

# கருத்துரை

பன்மொழிப்புலவர் மு. ச. சிவம்,
ஆசிரியர் ''வளரும் தமிழ்'', ஈரோடு.

தமிழில் சிறப்பகராதிகள் பெருகி வரும் இக்காலத்தில் மணிவாசகர் பதிப்பகம் வெளியிடும் 'உரைச் சொற்களஞ்சியம்' என்ற இச் சிறப்பகராதி ஒரு தனியிடத்தைப் பெறுகிறது. பண்டைய இலக்கண, இலக்கிய உரையாசிரியர்கள் அருஞ் சொற்கள், கலைச்சொற்கள், மரபுத்தொடர்கள் முதலியன வற்றிற்குக் கூறிய விளக்கவுரைகளைத் தொகுத்துத் தருகின்றது. இவ்வகராதியின் துணைகொண்டு பழைய இலக்கியங்களில் காணப்பெறும் கருத்துகளுக்குத் தக்க விளக்கங்களைப் பெறலாம்.

**கலைச் சொல்லகராதி, இலக்கியச் சொல்லகராதி, மரபுச் சொல்லகராதி** ஆகிய மூன்று அகர முதலிகளும் ஒருங்கிணைந்த சொற்களஞ்சிய நூல் இஃது. முற்கால இலக்கியங்களைப் பயிலும் மாணவர்கட்கும், ஆராய்ச்சியாளர்கட்கும் அருந்துணை நல்க வல்லது.

ஒரு சொல்லுக்குப் பல்வேறு உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் இந்நூலில் ஒரே இடத்தில் காணப்பெறுகின்றன. எடுத்துக்காட்டு:

சொல் (பக்கம் 132),

தொகை (பக்கம் 153), நாண் (பக்கம் 160),

நிறை (பக்கம் 165), நோக்கு (பக்கம் 169).

ஒரே உரையாசிரியர் வெவ்வேறு பொருள்களைத் தருவதையும் இவண் காணுகின்றோம். 'அங்கதம்' என்ற சொல்லுக்குப் பேராசிரியர் மூன்றிடங்களில் தரும் விளக்கங் களை ஈண்டு ஓரிடத்திலேயே காணப் பெறலாம். கலைச் சொற்கள் இடம் நோக்கிப் பொருள் வேறுபாடுகள் எய்து மாகலின் வெவ்வேறு பொருள்களைப் பெற்றுள்ளன.

சில சொற்களுக்குப் பொருள் கூறும் பான்மையிலிருந்தே உரையாசிரியர்களின் இலக்கியத் திறன் வெளிப்படுகின்றது. எடுத்துக்காட்டுகள்: **இயல்பு வழக்கு**—எப் பொருட்டு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச் சொல்லாற் கூறுதல் (ஆறு. நன். 267). **முதல் நூல்**—குற்றங் கெடுத்து முற்ற உணர்ந்த நற்றவத்தோன் கொற்றதாகும். (யாப். பாயிரம்) **இன்சொல்**—கேள்வியினும் வினையினும் இனியலாய சொல் (பரிமேல். குறள். 387). **மானம்**: எஞ்ஞான்றும் தன் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துதி உயிர் வாழாமையும் ஆம். (பரிமேலழகர்). **இன்னா செய்யாமை**—தமக்கு இன்னாதவற்றைப் பிறர்க்குச் செய்யாமை (மணக்குடவர்). **ஈதல்**—இல்லென இரந்தோர்க்குக் கொடுத்தல் (இளம்பூரணர்) **திரு**—கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் (பேராசிரியர்).

சில சொற்களின் **வரையறைகள்** உள்ளத்தில் பதிந்து ஓதற்கினிதாய் உவகை பயக்கின்றன.

எ-டு: **ஆசுகவி**—கொடுத்த பொருளும் தொடுத்த சூழலும், அடுத்த தொடையும் வழுவாமற் கருத்துப் பாடுவான்.

(யாப். 96). **துறவறம்**—நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும், புறப்பற்றும் அற்று இந்திரிய வசமறுத்து முற்றத் துறத்தல் (அடியார்க்கு நல்லார்). **நிறைகாவல்**—காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகுதல் (இறையனார் களவியலுரை 27). **பெண்மை**—கட்புலனாயதோர் அமைதித் தன்மை (நச்சினார்க்கினியர்).

வெவ்வேறு உரையாசிரியர்களின் உள்ளப் பாங்கினை வெளிப்படுத்தும் பகுதிகளையும் ஒருங்கே காணலாம். உரையாசிரியர்களின் கருத்து, நடை இவற்றை ஒப்பிட்டு ஆய்வு மேற்கொள்வார்க்கு இவை பெருந்துணை புரியும்.

1. **உயர்ந்தோர்** : உயர்ந்தோராவர் பார்ப்பாரும் அரசருமே. (இறை 36). உயர்ந்தோர் என்ற வழிக் குலத்தினால் உயர்ந்தாரையும் காட்டும், கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும், செல்வத்தான் உயர்ந்தாரையும் காட்டும். (இளம். தொல். பொருள். 37).

2. **ஒழுக்கம்** : உயர்ந்தோர் ஒழுகின நெறியில் ஒழுகுதல் (மணக்குடவர். குறள் 140.)

57-3

தங்குலத்திற் கேற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம் (நச். தொல். பொருள். 152).

அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரம்மச்சரியம் முதலிய நிலைகளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல் (பரிமேலழகர்).

இந்நூல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள 'உரையாசிரியர் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம்' என்ற அகராதியைப் பெரிதும் ஒத்தது.

நம் தமிழ் நாட்டில் அகராதிகள் என்றாலே எப்போதாவது பார்ப்பதற்குரிய நூல் அல்லது ஆராய்ச்சியாளர்க்கு மட்டும் பயன்படும் நூல் என்ற எண்ணம் இருந்து வருகிறது. ஆனால் மற்ற நூல்களைப் போலவே அகராதிகளும் முதலிலிருந்து முடிவுவரை படித்ததற்குரியனவே என்பது என் கருத்து. பல்வேறு பொருள்களைப் பற்றிய செய்திகள் கலந்து வருவதால் அகராதிகளைப் படிக்கும்போது சோர்வு ஏற்படுவதில்லை என்பது என் பட்டறிவு. பொதுவாக நூலகர்கள் பார்வை நூல் (Reference Book) என்ற பெயரைக் கொடுத்து நூலகத்தில் பலரும் தீண்டத்தகாத ஓர் இடத்தை ஒதுக்கிக் கொடுத்து அகராதிகள் அனைவர் கைகளுக்கும் எட்டாமல் செய்து விடுகின்றனர். இத்தகைய சிறப்பகராதிகள் அனைத்தும் மற்ற பொது நூல்களைப் போலவே அனைவர்க்கும் எளிதில் கிடைக்கும்படி செய்யுமாறு நூலகர்களை வேண்டிக் கொள்கிறேன்.

சொற்பொருள்களை எளிதில் அறிந்து கொள்ளும் வாசலில் இந்நூலின் அச்சமைப்பு முறை அமைந்துள்ளது, பிழைகளின்றி நூல்கள் அச்சிடுவதையே குறிக்கோளாகக் கொண்ட **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை** அடியொற்றிச் செல்லும் **மணிவாசகர் பதிப்பகத்தை** அறிஞர்கள் பாராட்டுவர். இது போன்ற தமிழுக்கு ஆக்கமான பல புதிய அகர முதலில் படைப்புகளை மணிவாசகர் பதிப்பகம் தொடர்ந்து அளிக்க முன் வருமாக.

அரிய நூல்களைப் பதிப்பிப்பதில் ஆர்வம் மிக்கவர் செயல் திறம் மிக்க செம்மல் தமிழுக்குப் பல்துறை நூல்களை அளிப்பதில் பல்லாற்றானும் வழிவகுக்கும் பேராசிரியர் ச. மெய்யப்பனாருக்கும் நம் பாராட்டு உரியது.

# மதிப்புரை

அறிஞர் இரா. மதிவாணன்
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்குநர்

மணிவாசக பதிப்பகத்தார் மணிமணியான நூல்களை வெளியிடுவதில் ஆர்வம் காட்டுபவர் என்பது யாவரும் அறிந்த உண்மை. தமிழ் ஆய்வாளர்க்கும் புலவர்க்கும் மட்டுமன்றி தமிழ் நலம் நுகர விரும்பும் யாவர்க்கும் காணக் கிடைத்த பெட்டகமாக அகரமுதலியமைப்பில் உரைச் சொற்களஞ்சியம் என்னும் நூலை மணிவாசக பதிப்கபத்தார் வெளிட்டிருப்பது மட்டற்ற மகிழ்ச்சி யளிக்கிறது,

நூலாசிரியரின் உள்ளக்கிடக்கையை உள்ளவாறுணரும் உரையாசிரியர்களின் அரிய சொற்பொருள் விளக்கங்களின் தொகுப்பாக விளங்குகிறது இந்நூல். தொகுப்பாசிரியரின் முயற்சி மெச்சத்தக்கது.

இனிவரும் நூற்றாண்டில் அறிவியல் தொழில் நுட்பம், கலை, வரலாறு ஆகிய எத்துறையாயினும் அத்துறையில் வேண்டப்படும் செய்திகளுக்கு மக்கள் கலைக் களஞ்சியங்களையும் அகரமுதலிகளையும் கணிப்பொறிகளையும் நாடுவார்களே யன்றி உரிய பொத்தகங்களைக் தேடி மணிக்கணக்கில் பக்கங் களைப் புரட்டிக் கொண்டிரார். **வருவதுணரும் பெற்றியே வெற்றியின் அடையாளம்.** என்பதற்கேற்ப உரையாசிரியர்களின் புலமை நுட்பங்கள் வடித்துத் தரப்பட்டுள்ளன.

இதற்கு உரைச் சொற்களஞ்சியம் என்பதிலும் உரைச்சொற் கோவை, உரைச்சொல் வரிசை எனப் பெயரிட்டிருக்கலாம்.

பொதுவாக, எந்த அகராதியிலும் காணக் கிடைக்காத பொருள் விளக்கங்கள் உரையாசிரியர்களின் விளக்கத்தில் கிடைக்கும். பழைய அகராதிகள் அனைத்தும் பெரும்பாலும் தனிமொழிகளுக்குப் பொருள் கூறுகின்றனவேயன்றி தொடர் மொழிகளுக்கும் மரபுவினைகளுக்கும் பொருள் கூறுவதில்லை. மொழியின் அழகே மரபுவினைகளிலும் தொடர்மொழிகளிலும் அமைந்திருத்தலை அவர்கள் அறிந்திலர்.

இதுவரை வெளிவந்த அகரமுதலிகளில் விடுபட்டுப்போன சொல் விளக்கங்களும் இதில் இடம்பெற்றுள்ளன. சான்றாக, 53ஆம் புறப்பாடலில் **தெற்றி** என்னும் சொல்லுக்கு "கை கோர்த்தாடும் குரவை" என்று பழைய உரையாசிரியர் பொருள் கூறியிருக்கிறார். கொடுகொட்டி, கொடுங்கொட்டி என்னும்

சொந்த பொருள் வேறுபாடுகள் இந்நூலில் நன்கு தரப் பட்டுள்ளன.

பழைய உரையாசிரியர் சில சொற்களுக்குத் தாமாகவே புது விளக்கங்களைத் தந்துள்ளர். அத்தகு விளக்கங்கள் வெளிவந்துள்ள பல அகரமுதலிகளில் காணமுடியவில்லை. உரைச்சொற் களஞ் சியத்தில் அத்தகு விளக்கங்களையும் காட்டியுள்ளார். சான்றாக, '**நம்பி**' என்னும் சொல்லுக்கு 'நம்' முதனிலையாக 'நமக்கு இன்னான்' என்று பொருள்பட வரும் உயர்ச்சிச் சொல்லினை நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணியின் 1909 பாடலில் கூறியிருப்பதைக் காட்டலாம். இவ்வாறு பல அரிய தொகுப்பு களின் மூலம் இவ்வுரைச் சொற்களஞ்சிய தொகுப்பாசிரியர் முயன்று வெற்றி பெற்றுள்ளார்.

தமிழிலக்கியங்களில் பயிலப்பெறும் பொருள்களுக்கு அல்லது கருத்துகளுக்கு அண்டைத் திரவிட மொழிகளில் காணும் விளக் கங்கள் அணி சேர்ப்பதால் உரைச் சொற்களஞ்சியத் தொகுப் பாளர் உரையாசிரியர்கள் எடுத்தாண்ட தலைப்புச் சொற் களுக்கு அண்டைத் திரவிட மொழிகளில் காணப்படும் விளக்கங் களையும் இயலின் முயன்று சேர்த்திருக்கலாம். சான்றாக. காஞ்சிரங்காய் நஞ்சானதென்று.

> '' **இனிய உளவாக இன்னாத கூறல்**
> **கனியிருப்பக் காய்கவர்ந் தற்று** ''

என்னும் குறள் விளக்கத்தில் பரிமேழகர் வரைந்திருக்கிறார். (காஞ்சிரங்காய் என்னும் சொல்விளக்கம் இந்நூலில் விடு பட்டுள்ளது).

கன்னட இலக்கிய வானில் பழமையான நூலாகக் கருதப் படும் வட்டாராதனையில் இச்சொல் இடம்பெறுகிறது. இன்றும் காசரகாய் என்னும் பெயரில் கன்னட நாட்டு மலைகளில் காஞ்சிரங்காய் காணப்படுகிறது. உண்டால் இனிக்கும் என்றும் உண்டாரைக் கொல்லும் நச்சுத் தன்மையுடையதென்று அறியப் படுகிறது.

இன்னாததும், பேசுவோர் நோக்கில் அப்பொழுதைக்கு இனிதாக இருந்து அவர்களை அழிக்கவல்லது என்னும் உவமை இப்பொருள் விளக்கத்திற்கு மிகப் பொருந்துகிறது. சொல் விளக்கங்கள் தெளிவுபடும்போது பொருள்விளக்கமும் புலப் படுகிறது.

ஆதலின், இத்தகு தமிழ்த்தொண்டு தமிழின் வளர்ச்சிக்கு அடிமணையாகும். தொகுப்பாசிரியரையும் பதிப்பகத்தாரையும் உளங்கனிந்து பாராட்டுகிறோம். உயரிய பணிகளை அயராது செய்க என வேண்டி வாழ்த்துகிறோம்.

# ஆய்வுரை

புலவர் இரா. இளங்குமரன்
பாவாணர் ஆராய்ச்சி நூலகம், திருநகர், மதுரை,

'ஆய்தல்' என்பது இருவகை வழக்கிலும் இயலும் சொல்.

கல்லார் வாயிலும் 'கீரை ஆய்தல்', 'காய் ஆய்தல்' என்னும் வழக் குண்மை கண் கூடு.

கீரை ஆய்தல் என்பது என்ன?

பழுத்த இலையும் அழுகிய தழையும் அகற்றி, நாரும் நரம்பும் விலக்கி, தூசியும் தும்பும் போக்கி, நறுவிய மெல்லிய பதனிலை கொள்ளலே கீரை ஆய்தலாம்.

அவ்வாறே, சொண்டும் சூனும் விலக்கி, வெம்பியதும் சம்பியதும் அகற்றி, காறலும் கறணையும் போக்கி, நல்லன நயத்தன கொள்ளலே காய் ஆய்தலாம்.

காய்கறிப் பொருள் ஆய்வு இத்தகைத் தெனின், நூலாய்வு இதனினும் நுணுகியதும் மேம்பட்டதும் அன்றோ!

ஆய்தல் நுணுக்கப் பொருளது.

" ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். "

என்றார் தொல்காப்பியர் (உரி. 32).

'ஆய்தல்' என்பது உள்ளதன் நுணுக்கப் பொருளது என்றமை கண்டு, 'ஆய்தம்' என்னும் எழுத்தின் குறியீட்டைத் தெளியலாம். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்பதற்கும் நுண்ணிதாக, "எல்லா எழுத்தும் பொருள் குறித் தனவே" என்னும் குறியும் கொள்ளலாம் போலும் இவ்வாய் தப்பொருள் வழியே.

ஆய்தல் நுணுக்கம், 'ஆயிழை' 'ஆய் மலர்' 'ஆய் தொடி' என வரும் எண்ணிறந்த ஆட்சிகளால் புலப்படும். அறிவாளர்

'ஆயறிவாளர்' எனவும், ஆய்வுத் திறம் கைவருதல் 'ஆய்வரல்' எனவும் முந்தையோர் ஆட்சியுள் உண்மை ஆய்தல் பொருளை மேலும் விளக்கும்.

'ஆய்வு' நுணுக்கமானது எனின், அந்நுணுக்கத்தினும் நுணுக்கத்தை விளக்க ஒரு முன்னொட்டு ஒட்டினர். அஃது 'ஆர்' என்பதாம்.

அழகு, அமைதி, அருமை, ஒலி, ஒளி, நிறைவு, பிணிப்பு முதலிய பலபொருள் தரும் 'ஆர்' என்னும் சொல் நுண்மைப் பொருளும் தரும். மேலும், நுண்மைக்கும் நுண்மைப் பொருள் தருவதாய் முன்னொட்டாகவும் நிற்கும்.

**" கருதல் ஆராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅ. "**

எனத் தொல்காப்பியரும்,

**" அனைவரையும் ஆராய்வது ஒற்று. "**

எனத் திருவள்ளுவரும் ஆராய்வை ஆள்வர்.

இனி, ஆய்வாளர் நீர்மை இரு திறத்தன. ஒன்று, தாம் ஆய்தல்; மற்றொன்று பிறர் ஆய்வுக்குக் கருவிகள் உருவாக்கித் தருதலும் வழிகாட்டுதலுமாம். நீரின் தன்மை 'நீர்மை' யாவது போல் ஆய்வாளர் நீர்மையும் அன்னதேயாம்! தான் உணவா வதுடன் மற்றை உணவுகளை ஆக்கித் தருவதும் நீரின் நீர்மையே அல்லவோ!

'உரைச் சொற் களஞ்சியம்' என்னும் இத்தொகை நூல் ஆய்வாளர்க்கு அரிய கருவி நூலாம். இதனைத் தொகுத்துதவிய அறிவர் திரு. **கிருட்டின மூர்த்தியார்** பாராட்டுக் குரியராம்.

நூலாசிரியர்க்கு ஒப்பாகப், பண்டை உரையாசிரியர்களும் விளங்கியமை ஆய்வாளர் அறிந்ததே. அந்நிலையில், உரை யாசிரியர்கள் வழங்கியுள்ள தமிழ்க் கொடை அளப்பரும் வளப் பெரு நிதியமாகத் திகழ்கின்றது. அவர்கள், அகர முதலியில் காணப்படும் பொருள் அளவுக்கோ, சொற்களுக்கு உரை கூறி அமைந்தனர்?

சொல்லாட்சியை நுணுகி யாய்ந்து, இடமும் பொருளும் இனிதின் உணர்ந்து, கூற்றும் மாற்றமும் தேர்ந்து, ஒத்தாங்கு இயலும் உத்தி நலமும் உணர்வு வீறும் பொதுள, தடை விடை நயங்கள் தழைப்ப, உவமையும் காட்டும் ஒன்ற, இலை மறை காயாய் இருந்தவற்றை அங்கையிற் கனியாய் அருளிய வள்ளன்மையாளர் உரையாசிரியர்களாம்! அம்மட்டோ, மூல

நூல்களை அழிந்து படாமல் காத்த முனைவர்களும் அவர்களேயாம்!

ஆயின், அவர்கள் பொருள் வளக்கொடை தொட்ட தொட்ட இடத்தெல்லாம் துலங்குமோ? துலங்குவதும் உண்டு! ஒரு நூறு பக்கம் புரட்டி ஆய்ந்தேங்கும் பொழுதில் மின்னொளி போல ஓரிரு விளக்கம் காட்டுவதும் உண்டு! ஆகலின், பன்னூல்களின் பல்லாயிரம் பக்கங்களைப் புரட்டிக் கண்டடையும் கவின்மணி களைக் களஞ்சியமாக்கிக் கையகத்துப் பொருளாக வைத் திருத்தல், தொகுப்பின் அருமையை உணர்வார்க்கு எளிதில் புலப் படுவதாம். அத்தொகுப்பும், அகர முறைப்படி அமைக்கப் படுவதால், ஆய்வாளர் 'உழைப்பினைச் சுருக்கி உரத்தினைப் பெருக்கும் பேரேந்தாகி விடுதல் கண் கூடாம்!

ஒரு பார்வையில் ஓரிடத்தில் ஒரு சொல் பற்றிய பலப்பல உரையாசிரியர்கள் விளக்கங்களையெல்லாம் அயர்ப்பின்றிக் காண வாய்க்கும் அருமையைத் தரும் இத்தகு தொகுப்பு, எத்துணைப் பாராட்டுக்கும் வரவேற்புக்கும் உரியது, எத்தகு பயன்பாடுடையது—என்பதை ஆய்வில் தோய்ந்தார் நொடி தோறும் உணர்வர்!

இவ்வுரைச் சொற் களஞ்சியத்தில், தொல்காப்பியம், நன்னூல், நேமிநாதம், இலக்கண விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, நம்பியகப் பொருள், இறையனார் களவியல், தண்டியலங்காரம், மாறனலங்காரம், வீரசோழியம், பிரயோக விவேகம், தொல் காப்பியச் சூத்திர விருத்தி, பத்துப்பாட்டு, கலித்தொகை, புறநானூறு, திருக்குறள், சிலப்பதிகாரம், சிந்தாமணி, திருக் கோவையார் ஆகிய நூல்களின் பழைய உரைகளில் காணப்படும் சொல் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன.

'அசை நிலை' என்பதற்கு உரையாசிரியர்கள் அறுவர் வழியே விளக்கங்கள் ஏழு தரப்பெற்றுள்ளன.

'கற்பு' என்பதற்கு ஏழு விளக்கங்கள் காட்டப்பெற்றுள்ளன. இவற்றுள் ஓர் உரையாசிரியரே இருவகை விளக்கமும், மூவகை விளக்கமும் தருவதை அறிய வாய்க்கின்றது.

'சொல்' என்பதற்கு அமைந்துள்ள விளக்கங்கள் ஏழு எனினும், அவையெல்லாம் ஒருவர் தந்த ஒரு பொருளைத் தழுவி வருவது, 'ஆய்வு வளர்ச்சி ஆய்வு'க்குத் துணைபுரிவதாம்.

இவ்வாறே 'அளபெடை', 'இடைச் சொல்', 'தகுதி' 'தொகை' முதலியன பல்வேறு ஆய்வுக்கு இடமளிப்பனவாக உள்ளன.

உரைச் சொற் களஞ்சியம் போலும் பணி தமிழ் வளம் பெருக்குவதாக அமைதல் எதிர் நோக்கக் கூடியதே. இதில், தமிழ் இலக்கண இலக்கிய நூல்களின் உரைகளில் இடம் பெற்றுள்ள வையே எனினும், 'அநபிகித கருத்தா', அபிகித கருத்தா, அவதி ஞான வரணீயம், அவதி தரிசனா வரணீயம் முதலான சொல் விளக்கங்கள் தமிழ் வளம் சேர்ப்பதாக இல்லை.

எண்வகை மணங்களை அறநிலை, ஒப்பு முதலாகக் களவியல் தருவனவற்றை இணைத்து, 'பிரமம்' 'பிரசாபத்தியம்' முதலிய வற்றை விலக்கியோ, அடைப்புக் குறிக்குள் தந்தோ தமிழ் வளமாக்கி இருக்கலாம். இக்குறிப்பு, ஆசிரியர் பணிநலம் சிறக்கவும், முழுதுறு தமிழ் வளமாகவும் எதிர்காலப் பணி புரியத் தூண்டும் ஏந்துரையாம்.

தொகுப்பாசிரியர் ஆர்வம், அரவணைப் போடு வரவேற்கத் தக்கது. அவர்தம் உழைப்பு, பாராட்டிப் போற்றத் தக்கது. இத்தகு பணியை எவர் மேற் கொண்டு செய்யினும் மேலும் மேலும் பெருகத் தக்க பணியாகவே அமைதல் ஒருதலை. அரிய தொண்டில் தலைப்பட்டு நிலைப் பட்டுள்ள தொகுப்பாசிரியரும், அழகிய கட்டமைப்புடன் கவினுற வெளியிட்டுள்ள **மணிவாசகர் பதிப்பகத்தாரும்** தமிழ் நெஞ்சங்களின் வாழ்த்துக்கும் பாராட்டுக்கும் உரியர்.

# முன்னுரை

தமிழுலகில் உரைகள் சிறப்பிடம் பெறத் தக்கன. அவை மூலநூலை எளிமைப் படுத்துவதற்கு மட்டும் எழுந்தவை அல்ல; பல்வேறு கூறுகளை விளக்கப்படுத்தவுமாகும். **இறையனார் களவியல் உரை** தொட்டு நமக்குக் கிடைத்துள்ள இலக்கண இலக்கிய உரைகள், அத்தகைய கருத்துகளைப் பல நிலைகளில் நின்று விளக்க முற்படுகின்றன. பலநிலைகளில் ஒன்றுதான் சொல்விளக்கம் கூறுதலாகும். சொல்லுக்கு நேர் பொருளைச் சொல்லளவில் கூறுவதோடு அமையாமல் தொடரளவில் விளக்கமாகக் கூறுதல் அச்சொல்லிற்குரிய பொருளைத் தெளிவாகப் புலப்படுத்தும் என்பதில் ஐயமில்லை. அதுவும், அவ் விளக்கம் வரையறுத்தாற்போல இற்றெனக் கிளக்கும் தன்மையதாய் அமையும்பொழுது சிறப்புடையதாக அமைகிறது. அத்தகைய சிறப்புக் கூறு பண்டைய உரையாசிரியர்களுக்கே உரிய ஒன்று ஆம். அவர்களேயன்றி அவற்றிற்குரிய விளக்கங்களை வேறு எவராலும் சொல்லவியலாது என்னும் வகையில் அவை அமைந்துள்ளன. அவ்வாறாக அமைந்துகிடந்த சொல் விளக்கங்களையெல்லாம் தொகுத்து முறைப்படுத்தித் தருவதுதான் இவ் '**உரைசொற் களஞ்சியம்** என்னும் நூலாகும்.

1978 முதல் 1983 முடிய இளம்பூரணர் உரையை டாக்டர் பட்டத்திற்கு ஆய்வு செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்பொழுது இளம்பூரணர் உரையில் பொதிந்து கிடந்த சொல் விளக்கங்கள் என்னைக் கவர்ந்தன. அவற்றைத் தொகுத்துப் பார்த்த அளவில் ஏனைய உரைகளில் உள்ளவற்றையும் தொகுத்துப் பார்க்க வேண்டும் என்ற வேட்கை என்னுள்ளத்தில் எழுந்தது. அவ்வாறு தொகுக்கப் பெற்று முறைபடுத்தப் பெற்ற பணியே இது.

இம் முயற்சி முதன் முயற்சியன்று. புலவர் இரா. இளங் குமரன் அவர்களால் தொகுத்தளிக்கப் பெற்றுத் தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பெற்ற 'உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை விளக்கம் என்னும் நூலே இம்முயற்சிக்கு முன்னோடியாகும். அரிய தொரு நூலாகத் திகழும் அதன் முன்னுரையில்,

> '' ஆங்காங்குக் கிட்டிய சிற்பங்களைத் தொகுத்து வைத்து எழிலும் ஏற்றமும் மிக்க கலைக்கோயிலைத் தஞ்சையில் உருவாக்கி விடவில்லையா! அத்தகைய இனிய—பயன்மிக்க—பணியே இது. முற்ற முடிந்த பணியன்று; தொடக்கப் பணியே; அன்றித் தூண்டற் பணியும் ஆம்.''

என்று அவர்களே குறிப்பிட்டுள்ளார்கள். இவ் **உரைச் சொற் களஞ்சியம்** தோன்றுதற்கு அன்னாரின் நூலே தூண்டற் கருவி; இந்நூல் அதனால் பெற்ற துலங்கலேயாகும்.

இந்நூல் முப்பத்து மூன்று இலக்கிய இலக்கண உரைகளைக் கொண்டு உருவாகியுள்ளது. பெயர் தெரிந்த உரையாசிரியர் களாக இருபதின்மரும் பெயர் தெரியாத உரையாசிரியர் களாக ஐவருமாக இருபத்தைந்து பேர் எழுதிய உரைகளில் கிடைத்த சொல் விளக்கங்கள் இந்நூலுள் இடம் பெறுகின்றன. 1751 சொற்களுக்குரிய 2484 விளக்கங்கள் தொகுக்கப் பெற்று நிரல்படுத்தப் பெற்றுள்ளன. இந்நூலுக்கு இலக்கண இலக்கிய உரைகள் மட்டும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. அவை **இறை யனார் களவியல் உரை** தொடங்கிப் **பிரயோக விவேகம்** ஈறாக உள்ள உரை நூல்களாகும்.

அவ்வுரைகளில், 'என்பது', 'என்றது', 'யாதோவெனின்', 'யாவையோ எனின்,' 'ஆவது,' என்ற வெளிப்பாட்டு முறைகள் வழிக் கூறப்பட்டுள்ள விளக்கங்கள் அவ்வாய்பாடுகள் நீக்கித் தரப்பட்டுள்ளன.

நூலுள் தொகுத்துத் தரப்பெற்றுள்ள விளக்கங்கள் யாவும் உரைகளின் காலமுறைக்கேற்ப இயன்றவரை அமைக்கப் பெற் றுள்ளன. இக்காலமுறை அமைப்பு ஆய்வுக்குப் பயன்தருவதாக அமையும். பிற்கால உரைநடை நூல்களில் (கட்டுரைகளில்) காணப்பெறும் சொல்விளக்கங்கள் இதனுள் இடம்பெறவில்லை. நூல் பதிப்பாசிரியரின் குறிப்புரைகளாக வருவனவும் (கோபா லையரின் குறிப்புரை நீங்கலாக) இடம் பெறவில்லை.

ஒரு சொல் பல பொருண்மைகளில் பயிலப்பெறும் பாங்கு கருதி, அவ்வாறு வருவனவற்றிற்கு இசை பற்றிய சொல் என்றும் (இ) நாடகம் பற்றிய சொல் என்றும் (நா) இனம் பிரித்துக்

காட்டப் பெற்றுள்ளது. மேலும் இந்நூலைப் பயன் கொள் வாரின் எளிமை கருதிச் சுருக்கக் குறியீட்டில் உரையாசிரியர் பெயர் முன்னும் நூற்பெயர் பின்னுமாக அமைக்கப் பெற்றுள்ளது.

உரையாசிரியர்கள் பலரும் தத்தமக்கே உரிய தனித்தன்மை யில் கூறுகின்ற பொருள் விளக்கங்கள் எண்ணி மகிழத் தக்கன வாதலோடு ஆழ்ந்து நோக்கத் தக்கனவாகவும் அமைகின்றன. இத்தகைய அரியகலை உரையாசிரியர்களுக்குக் கைவரப்பெற்ற கலையாக அமைந்துள்ளது.

தொல்காப்பிய உரியியல் ஒரு சொல்லுக்கு ஒரு பொருளை யும், ஒரு சொல்லுக்குப் பல பொருளையும், பல சொற்களுக்கு ஒரு பொருளையும் கூறி நிற்கின்றது. நிகண்டுகள் இத்தன்மை களை உட்கொண்டே யாக்கப்பெற்றுள்ளன. இவையெல்லாம் சொல்லுக்குரிய பொருளைச் சொல்லளவில் மட்டுமே தருகின்றன. தொடரளவில் வரையறுத்தாற்போலக் கூறு கின்ற தன்மை அரிதாகவே காணப்படுகின்றது. 'பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல்' என்பது போன்ற சங்கத் தொடர்கள் சொல்லுக்குரிய பொருளைத் தொடரளவில் தரு கின்ற முயற்சியை வெளிப்படுத்தி நிற்கின்றன. 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை எனும் பிற்காலத் தொடரும் அம்முயற்சி யைச் சார்ந்ததே.

இவ்வாறு அரிதாகவும் சிறப்பாகவும் அமைந்த கலையை உரையாசிரியர்கள் நன்கு வெளிப்படுத்தியுள்ளனர். சொல்லுக்கு வரையறுத்த விளக்கம் கூறுவதென்பது முழுமை பெறாததும் இயலாததும் ஆகும். எனவேதான் ஒரு சொல்லுக்குரிய விளக்கங்கள் பலரால் பலபடியாகக் கூறப்படுகின்றன. இருப் பினும் அவரவர்கள் தங்கள் தங்கள் புலமைக்கேற்ப விளக்கம் தர முயன்றுள்ளனர்.

பெரும்பான்மையும் சொல்லுக்குரிய விளக்கம் தருதல் என்பது காட்டலாகும் பொருள், காட்டலாகாப் பொருள் எனும் இருவகைப் பொருள் தன்மையுடைய சொற்களுக்கே நிகழக் கூடும். காட்டலாகும் பொருள் தன்மையுடைய சொற்களுக்கு விளக்கம் கூறும்பொழுது கட்புலனுக்கு எட்டிய அவற்றின் பல்வேறு பண்புகளை வைத்து அவற்றிற்குரிய விளக்கத்தை வரையறுத்துக் கூறவியலும். சான்றாகப் 'பாடகம்' என்ற சொல்லுக்கு வரையறுத்த விளக்கம் கூறவந்த நச்சினார்க்கினியர், "மகளிர் காலிற் பாடகம் ஒரு கம்பியாய்ப் பலமுடக்காலே போக்கும் வரவும் உண்டானாற் போலத் தோன்றிக் காலை

விடாதே கிடப்பது'' (நச். சீவ. 510) என்று கூறுவர். இதனுள் பாடகம் என்ற காட்டலாகும் பொருளாகிய ஓர் அணிகலன் கட்புலனாகும் அதனுடைய பண்புகளை வைத்தே வரை யறுத்துக் கூறப்பட்ட தன்மை நன்கு விளங்கும்.

காட்டலாகப் பொருள் தன்மையுடைய சொற்கள் உணர்வு அடிப்படையில் அவற்றின் உட்பண்புகளை வைத்து வரை யறுத்துக் கூறப்படுகின்றன. அவ்வாறு கூறவியலாத நிலையில் உள்ள சொற்கள் கட்புலனாகும் பொருளால் உவமை கூறப்பட்டு விளக்கப்படுகின்றன. அன்பாவது 'தான், வேண்டப்பட்ட பொருளின் கண் தோன்றும் உள்ள நிகழ்ச்சி' (இறை. 1) என்பதும், அருளாவது 'ஒன்றின் துயர் கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம் '(பழை, புறம். 5) என்பதும் உட்பண்பு களை வைத்துக் கூறப்படும் விளக்கங்களாகும். சுரிதகம் என்பது 'ஓரிடத்து ஓடாநின்ற நீர் குழியானும் திடரானும் சார்ந்த விடத்துச் சுரிந்தோடும் அதனைச் சுரிந்து என்றும் சுழி என்றும் வழங்குவதுபோல் தான் கலியோசையாய் வாராநின்றது வெள்ளையானும் ஆசிரிய மானுமாய்த்தக்கதொரு பொருளை உட்கொண்டு நிற்பது' என்று கூறப்படும் விளக்கம் உவமையால் விளக்கப்படுவதாகும்.

மேற்கண்ட இருவகைப் பொருள்களையும் விளக்கும் முறை களால் அவை தக்க விளக்கங்களால் முன்னிறுத்திக் காட்டப் பெறுகின்றன என்பதில் ஐயமில்லை.

தமிழ் உரையாசிரியர்கள், சொல்விளக்கம் கூறுகின்ற இக்கலையை உரைப்போக்கிற்கு எவ்வித ஊறும் நேரா வண்ணமும் மேலும் சுவையூட்டும் வண்ணமும் மேற்கொண் டுள்ளனர். பல்வேறு வகைகளில் அவர்தம் சொல் விளக்கங்கள் அமைந்திடினும் குறிப்பிடத்தக்க கீழ்க்கண்ட மூவகைகளில் அவற்றைப் பிரித்துக் காணவியலும்.

அ. வரையறை கூறுதல்,

ஆ. வகை கூறுதல்,

இ. வேறுபாடு கூறுதல்.

**வரையறை** கூறுதலாவது ஒன்றன் பண்பை வரையறுத்தாற் போலக் கூறுவதாகும். விளக்கிக் கூறுகின்ற தன்மையையும் இதனுள் அடக்கலாம் 'பரத்தையர்' என்ற சொல்லுக்கு இளம்பூரணர் கூறுகின்ற விளக்கம் அவர்க்குரிய பண்பைச் சுருங்கிய சொற்களால் தெளிவாக விளக்குகின்றது. ''ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும்

பொருளும் வெஃகிற ஒருவர் மாட்டும் தங்காதார்'' (இளம். தொல். பொருள். 149) என்ற அவ்விளக்கம் அதற்குரியாரை ஓவியமாக்கிக் காட்டுகின்றது. இதனால் அவர்களது தோற்றப் பொலிவும், கலைத் திறமையும், காமத்திளைப்பும், உண்மைப் பண்பும் ஒருசேரக் காட்டப் பெறுகின்றன.

அதைப் போன்றே புகழ் என்ற சொல்லுக்கு, ''ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத் தந்து பூமியுள்ளளவும் நிற்பது'' என்று அடியார்க்குநல்லார் கூறுவதும் (சிலம்பு. 11: 114), 'பெண்மை' என்ற சொல்லுக்குக் ''கட்புலனாயதோர் அமைதித் தன்மை'' என்று நச்சினார்க்கினியர் கூறுவதும் (தொல். சொல். 57), 'வறுமை' என்பதற்குப் ''போகம் துய்க்கப் பெறாத பற்றுள்ளம்'' என்று பேராசிரியர் கூறுவதுமாகிய விளக்கங்கள் எண்ணி மகிழத்தக்கன.

சில சொற்கள் முன்பின் அமைந்த உடனிகழ்ச்சியைக் கூறி வரையறைப்படுத்தப் பெறுகின்றன. இதனால் அவற்றின் உண்மைநிலை தெற்றென விளக்கமுறும் தன்மையைப் பெறும். பூவின் ஒருநிலை போது என்பது. இந்தப் 'போது' என்பது 'அலர்கின்ற முகை' என நச்சினார்க்கினியரால் விளக்கப் பெறுகின்றது (நச். சீவ. 1228). ''கோபத்தின் பின்னாகச் சிறிது பொழுது நிற்பது சினம்'' (நச். திருமுரு. 135) என்று சினமும், ''பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்'' (நச். திருமுரு. 132) என்று செற்றமும் உடனிகழ்ச்சி கூறப்பெற்று விளக்கப் பெறுகின்றன.

**வகைகூறுதல்** என்பது ஒன்றற்குரிய விளக்கத்தைக் கூறுமுகத் தான் அதன் இயல்புகளை வெளிப்படுத்த வேண்டி அதனுடைய வகைகளைக் கூறுதலாகும். ''நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும் அளவே சிரித்தலும் பெருகச் சிரித்தலுமென மூன்றென்ப'' (பேரா. தொல். பொருள். 251) எனப் பேராசிரியர் கூறும் சிரிப்பு வகை வகைகூறுதலில் அடங்கும். ''வேட்கை பிறவாப் பருவத்தாரும் 'பிறக்கின்ற பருவத்தாரும், பிறந்த பருவத்தாரும் என மூவகையர்'' (நச். சீவ. 2529) எனப் பெண்கள் வகைப்படுத்தப்படுதல் குறிப்பிடத் தக்கதாகும்.

அது போன்றே **வேறுபாடு கூறுதல்** என்பதும் விளக்கம் தரும் வகையில் தனிப்பண்பைக் கொண்டுள்ளது. இதனால் ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்திக் காட்டும் தன்மை புலப்படு கின்றது. ''சொல் நிகழாதே முகிழ் முகிழ்த்துச் சொல்லுவது''

அம்பல் என்றும் (இறை. 22), ''இன்னானோடு இன்னாளிடை இதுபோலும் பட்டது என விளங்கச் சொல்லி நிற்பது'' அலர் என்றும் (இறை. 22) கூறப்படுவதன் மூலம் குறிப்பு, கூற்று ஆகிய இரு வேறுபாட்டு நிலைகள் தோன்றுகின்றன.

மேற்கூறப்பெற்றவை போன்ற சொல் விளக்கங்கள் மட்டு மன்றி தேவையான வாழ்க்கை விளக்கங்களும் உரைகளிடத்து இடம் பெறுகின்றன. அத்தகைய விளக்கங்கள் வாழ்வின் பட்டறிவுத் தன்மையை வெளிப்படுத்தவல்லன; வாழும் முறையை அறிவிக்க வல்லன. ''மகளிரிருந்து இல்லறத்தை நிகழ்த்துதற்கு வேண்டுவன தேடி வருதல் ஆடவர் பணி'' (நச். சீவ. 1502) என்று ஆடவர் கடமை வரையறை செய்யப்படு கின்றது. ''அறம் பொருள் இன்பங்களை வழாமல் தன் குலத் திற்கேற்ற மனைவாழ்க்கையைத் தலைமகள் நடத்துதல்'' (இளம். தொல். பொருள். 144) என்று தலைமகள் கடமையும், ''துன்பத்தினைத் தலைமகன் வந்த வழிக் கூறுவாளாயின் தனக்குப் புணர்ச்சியில் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறியவதனாற் பயனில்லையாம். அதனைக் கலவியிறுதி யினும் புலவியினும் கூறப்பெறும்'' (இளம். தொல். பொருள். 231) என்று அவள் வாழும் நயமும் கூறப்படுகின்றன. இவை விளக்கப்பட வேண்டியவையாதலால் இவையும் ஆங்காங்கே இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

இலக்கணம் பற்றிய பல குறியீட்டுச் சொற்களும், நாடகம் பற்றிய கலைச்சொற்களும் உரையாசிரியர்கள் கூறும் வகையில் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. இலக்கண நூல்களில் பெரும் பாலான இலக்கணக் குறியீட்டுச் சொற்களுக்குரிய விளக்கங்கள் காணக் கிடைக்கவில்லை. அவையெல்லாம் உரையாசிரியர் களால்தாம் விளக்கப் பெறுகின்றன. அத்தகைய விளக்கங்களை ஓரிடத்துத் தொகுத்துக் காண்பது ஆய்வாளர்களுக்குப் பெரும் பயன் தருவதாக அமையும்.

ஒரு சொல் பற்றிய விளக்கங்கள் உரையாசிரியர்களின் கால முறைப்படி அமைக்கப் பெற்றிருப்பதால் அவர்களின் அச்சொல் பற்றிய கருத்து, மனவளர்ச்சி நிலைகளை அறியவியலும். குறிப் பாகப் 'பைசாசம்' என்ற சொல்லுக்குரிய பல விளக்கங்கள் இத் தன்மையை விளக்கும்.

> மூத்தாள் மாட்டும், துயின்றாள் மாட்டும், களித் தாள் மாட்டும் சார்வது. (இறை. 1)

> துஞ்சினாரோடும், மயங்கினாரோடும், களித்தா ரோடும், செத்தாரோடும், விலங்கினோடும் இழி

தகுமரபில் யாருமில்லா ஒரு சிறைக்கண் புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம். (யாப். 96)

பைசாமாவது களித்தார் மாட்டும் துயின்றார் மாட்டும் கூடுதல். (இளம். தொல். பொருள். 89)

மூத்தார் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடை மாறு தலும் பிறவுமாம். (நச். தொல். பொருள். 92)

துயின்றோள் மாட்டும் களித்தோள் மாட்டும் சென்று சேர்வது. (நம்பி. 117)

இவ்வைவரின் விளக்கங்களும் அச்சொல் பற்றிய பல கருத்து மாற்றங்களைக் காலத்திற்கேற்பத் தாங்கி நிற்கின்றன. உரை யாசிரியர்கள் தம் பல்வேறு புலமைக் கூறுகளும் இத்தொகுப்பு நூலுள் பொதிந்து கிடக்கின்றன. அவை நூலைப் பயன் கொள்ளுவார்க்குப் பல நிலைகளிலும் துணை நிற்கக் கூடும்.

இத்தொகுப்பு நூலுள் சமயம் தத்துவம் பற்றிய உரை நூல்கள் இடம் பெறவில்லை. அவை இனிவரும் பதிப்புகளில் சேர்த்துக் கொள்ளப் பெறும்.

எந்நேரமும் தமிழ்ப் பணியையே தன் பணியாகக் கொண்டு அரிய நூல்களை வெளியிட்டு வரும் பேராசிரியர் ச. மெய்யப்பன் அவர்கள் எனது கன்னி முயற்சிக்கு உருவங் கொடுக்க இசைந்தார்கள். அவர்களுக்கு என்றும் நன்றியுடையேன். சொல் விளக்கங்களை நான் தொகுக்கும் காலத்தில் என் உடனிருந்து உதவியும் நூல்கள் பல நல்கியும் துணையாய் நின்ற என் நண்பர்களுக்கு என் நன்றி. அவர்களுக்கு என் நன்றி யறிதலைப் புலப்படுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆராய்ச்சியாளர்க்கும் தமிழறிஞர்க்கும் இந்நூல் ஒரு பார்வை நூலாகத் திகழும் என நம்புகிறேன்.

— சா. கிருட்டினமூர்த்தி

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத். | — அகத்திணையியல் |
| அடி. | — அடியார்க்குநல்லார் |
| அதி. | — அதிகாரம் |
| அரும். | — அரும்பதவுரை |
| ஆறு. | — ஆறுமுகநாவலர் |
| இலக். | — இலக்கணக் கொத்து |
| இலக்க. | — இலக்கணவிளக்கச் சூறாவளி |
| இளம். | — இளம்பூரணர் |
| இறை. | — இறையனார் களவியல் உரை |
| எழுத்து. | — எழுத்ததிகாரம் |
| கல். | — கல்லாடனார் |
| கலி. | — கலித்தொகை |
| காரி. | — காரிரத்ந கவிராயர் |
| குறிஞ். | — குறிஞ்சிப்பாட்டு |
| கோபா. | — கோபாலையர் |
| சாமு. | — சாமுண்டி தேவநாயனார் |
| சிலம்பு. | — சிலப்பதிகாரம் |
| சிவ. | — சிவஞானசுவாமிகள் |
| சிறு. | — சிறுபாணாற்றுப்படை |
| சீவ. | — சீவகசிந்தாமணி |
| சுப்பி. | — சுப்பிரமணிய தீட்சிதர் |
| சுவாமி. | — சுவாமிநாத தேசிகர் |
| செய். | — செய்யுளியல் |
| சேனா. | — சேனாவரையர் |
| சொல். | — சொல்லதிகாரம் |
| சொல்ல. | — சொல்லணியியல் |
| தண்டி. | — தண்டியலங்காரம் |

திரு. — திருக்கோவையார்
திருக். — திருக்குறள்.
திருமுரு. — திருமுருகாற்றுப்படை
தெய். — தெய்வச்சிலையார்
தொல். — தொல்காப்பியம்
தொல் சூ. — தொல்காப்பியச் சூத்திரவிருத்தி
நச். — நச்சினார்க்கினியர்
நம்பி. — நம்பியகப்பொருள்
நன். — நன்னூல்
நெடு. — நெடுநல்வாடை
நேமி. — நேமிநாதம்
ப. — பக்கம்
பட். — பட்டினப்பாலை
பதி. — பதிகம்
பரிமே. — பரிமேலழகர்
பழை. — பழையவுரை
பாயி. — பாயிரம்
பிரயோ. — பிரயோக விவேகம்
புறப். — புறப்பொருள் வெண்பாமாலை
புறம். — புறநானூறு
பெரும். — பெரும்பாணாற்றுப்படை
பேரா. — பேராசிரியர்
பொது. — பொதுவணியியல்
பொரு. — பொருவணியியல்
பொருள். — பொருளதிகாரம்
மணக். — மணக்குடவர்
மது. — மதுரைக்காஞ்சி
மயிலை. — மயிலைநாதர்
மலை. — மலைபடுகடாம்
மாற. — மாறனலங்காரம்
முன். — முன்னுரை
யாப். — யாப்பருங்கலவிருத்தி
யாப். கா. — யாப்பருங்கலக்காரிகை
வீர. — வீரசோழியம்

# உரையாசிரியர்கள்

உரையாசிரியர்கள் சொற்களின் உண்மைப் பொருளை, நுண்பொருளை விளக்கினர். அதனால் சொல் வரம்பும், பொருள் வளமும், பொருள் ஆழமும் பொருள் வரம்பும் வரையறுக்கப் பெற்றன. 1968-ல் மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்ட 'உரையாசிரியர்' என்னும் அரிய ஆய்வு நூலில் பேராசிரியர் மு. வை. அரவிந்தன் அவர்கள் தொகுத்த சொற்கோவை:

## 1. சேனாவரையர்

உணவு, அணிகலன், இசைக்கருவி, படை ஆகியவற்றில் அக்காலத் தமிழ் மக்கள் பெரிதும் தேர்ச்சி பெற்று விளங்கினர் என்பதைப் பின்வரும் உரைப்பகுதி விளக்கும்:

அடிசில் என்பது, உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்னும் நால்வகைக்கும்;

அணி என்பது, கவிப்பன, கட்டுவன, செறிப்பன, பூண்பன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும்;

படை என்பது, எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும்;

இயம் என்பது, கொட்டுவன, ஊதுவன, எழுப்புவன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும் பொதுவாகலின், அடிசில் அயின்றார் மிசைந்தார் எனவும், அணி அணிந்தார் மெய்ப் படுத்தினார் எனவும், இயம் இயம்பினார் படுத்தார் எனவும், வழங்கினார் தொட்டார் எனவும் பொது வினையால் சொல்லுக.

## 2. பேராசிரியர்

மொழிபெயர்ப்பு — பிறபாடையாற் செய்யப்பட்ட பொருளைத் தமிழ் நூலாகச் செய்வது (மர - 97).

வனப்பு — பெரும்பான்மையும் பல உறுப்புத் திரண்ட வழிப் பெறுவதோர் அழகு (செய் - 235).

அரற்று — அழுகையன்றிப் பலவும் சொல்லித் தன் குறை கூறுதல்; அது காடுகெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல் போல வழக்கினுள்ளோர் கூறுவன (மெய் - 12).

கனவு — வாய்வெருவுதல். அதனானும் அவன் உள்ளத்து நிகழ்கின்றது ஒன்று உண்டு என்று அறியப்படும் (மெய் - 12).

தத்தை — பெருங்கிளி; **கிளி** — சிறு கிளி (மர - 98).

கொலை — அறிவும் புகழும் முதலாயினவற்றை கொன்று உரைத்தல் (மெய் - 10).

கொச்சகம் : ஒப்பினாகிய பெயர்; ஓர் ஆடையுள் ஒரு வழி அடுக்கியது கொச்சகம் எனப்படும்; அதுபோல ஒரு செய்யுளுள் பல குறள் அடுக்கப்படுவது கொச்சகம் எனப் பட்டது (செய் - 121). இக்காலத்தார் அதனைப் பெண்டிர்க்கு உரிய உடை உறுப்பாக்கியும் கொய்சகம் என்று ஆக்கலின் என்பது (152).

## 3. நச்சினார்க்கினியர்

### கலித்தொகை உரை

1. கொடுங்கொட்டி : கொடுகொட்டி என விகாரமா யிற்று. கொடுங் கொட்டி என்றார், (சிவபெருமான்) எல்லா வற்றையும் அழித்து நின்று ஆடுதலின்.

8. முக்கோல் (அந்தணர்) : அரி அயன் அரன் என்னும் மூவரும் ஒருவர் என்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த கோல், காணேம் அல்லேம் கண்டனம் என்றதனால் அங்ஙனம் போகின்றவரை அறிந்து விலக்கல் அறம் அன்று என்று போந்தேம் ஆகக் கொள்க.

37. உண்கண் : மையுண் கண்.

40. உலக்கை வயின் வயின் ஓச்சி : உலக்கையை என்னிடத்தும் நின்னிடத்தும் உயர்த்தி.

50. நல் கூர்ந்தார் செல்வ மகள் : பிள்ளையான் மிடிப் பட்டாருடைய செல்வத்தை உடைய மகள்.

108. ''கட்குத்திக் கள்வன்'' என்றது விழித்திருக்க மிண்டையைக் கொள்வான் என்னும் பழமொழி.

115. குடம் சுட்டும் நல்லினம்-இன்னதனைக் குடம் பால் போதும் என்று கருதப்படும் பசு இனம்.

129. "தொல்லூழி தடுமாறி, தொகல் வேண்டும் பருவத்தால் பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்"

"பல உலகங்களில் உயிர்கள் எல்லாம் பழையதாகிய ஊழிக் காலத்தே பிறந்து இறந்து திரியும்படி, அயனாய் நின்று படைத்த முதல்வன் அரனாய் அவ்வுயிர் எல்லாம் தன்னிடத்தே வந்து தொகுதலைத் தான் விரும்பும் ஊழி முடிந்த காலத்திலே தன்னிடத்திலே மீட்டு ஒடுக்கிக் கொள்கிறவனைப்போல."

133. பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்— "பொறை என்று சொல்லப்படுவது பகைவரைக் காலம் வரும் அளவும் பொறுத்திருத்தலை.

33. ஈர் — ஈர்க்குமரம்.

75. அஞ்சி அச்சுறுத்தலும் என்றார் போல 'அச்சு' என விகாரமாய் நின்றது.

84. பரத்தைமை, பரத்தை என நின்றது; "தன் வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும்" என்றார் ஆசிரியர் ஆகலின்.

41. கண்ணி — தலைமாலை.

94. 'நடுவுயர்ந்து' என்றது, நோன்புயர்ந்தது என்றாற் போல் நின்றது.

## 4. பரிமேலழகர்

தானம் : அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல்.

தவம் : மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின.

விரதம் : இன்ன அறம் செய்வல் எனவும், இன்ன பாவம் ஒழிவல் எனவும் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வன. (துறவற இயல் - முன்னுரை)

மன் உயிர் : உயிர்கள் எல்லாம் நித்தம் ஆதலின் மன் உயிர் என்றார்.

வரைவின் மகளிர் : தம் நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவு இல்லாத மகளிர் (வரைவின் மகளிர் - அதிகாரம்).

மானம் : எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம்.

குறி எதிர்பை : அளவு குறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே எதிர் கொடுப்பது.

ஊழ் : அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருள் கிளவி (ஊழ் - அதிகாரம்).

நிறைமொழி — அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் மொழி.

பிதிரர் படைப்புக் காலத்து அயனால் படைக்கப்பட்ட தோர் கடவுட் சாதி; அவர்க்கு இடம் தென்திசை ஆதலின் தென்புலத்தார் என்றார்.

எச்சம் (இசை என்னும் எச்சம்) : என்றார், செய்தவர் இறந்து போகத் தான் இறவாது நிற்றலின்.

முறை வேண்டினார் — வலியரான் நலிவு எய்தினார். குறை வேண்டினார் — வறுமையுற்று இரந்தார்.

ஏக்கறுதல் — ஆசையால் தாழ்தல்.

ஒளி (மன்னர்) — உறங்கா நிற்கவும் தாம் உலகம் காக்கின்ற அவர் கடவுள் தன்மை.

ஒளி — தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதல் உடைமை.

ஆற்றல் — மனவலி.

பாடு — கண்ட அளவிலே பகைவர் அஞ்சும் பெருமை.

(மடி) தற்றுதல் — இறுக உடுத்தல்.

வன்பாடு — முருட்டுத் தன்மை; அஃதாவது ஓராது செய்து நிற்றல்.

சிறங்கணித்தல் — சுருங்குதல்.

நாண் — இழிவாயின செய்தற்கண் விலக்குவது. ஆண்மை ஒன்றற்கும் தளராது நிற்றல்.

# உரைச்சொற் களஞ்சியம்

## அ

| | |
|---|---|
| அஃறிணை | அஃறிணை யென்பது அல்திணை யென்ற வாறு. அல்லதும் அதுவே; திணையும் அதுவே. உயர்திணை அல்லாத திணை அஃறிணை. (இளம். தொல். பொருள். 1) இழிதிணை என்றவாறு. (மயிலை. நன். 260) |
| அக்கரச்சுதகம் | ஒரு பொருள் பயப்பதொரு சொற்கூறி அதனில் ஒவ்வொரு எழுத்தாக நீக்க வெவ்வேறு பொருள் பயக்கப் பாடுவது. (பழை. தண்டி. சொல்ல. 7) |
| அகச்சுவை | அகச்சுவையாவன இராசதம், தாமதம், சாத்துவிதமென்பன. (அடி. சிலம்பு. 3:12) |
| அகப்பா அகவல் | அகப்பொருளைத் தழுவி ஐயீருறுப் பினவாய் வஞ்சி விரவாது வந்து முடியும். (யாப். நூ. 77) |
| அகப்பொருள் | அகப்பொருளாவது போக நுகர்ச்சி யாகலான் அதனான் ஆய பயன் தானே அறிதலின் அகம் என்றார். (இளம். தொல். அகத். முன்.) |
| அகம் | அகமாவது புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனவும் கைக்கிளை பெருந்திணை என எழு வகைப்படும். (இளம். தொல். அகத்.முன்.) |
| | ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் |

ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார்.
(நச். தொல். பொருள். 1)

**அகலங்கூறல்**
சூத்திரப் பொருளைத் தூய்மை செய் தற்குக் கடாவும் விடையும் உள்ளுரைத்து விரித்துரைத்தல். (நம்பி. 1)

சூத்திரத்தில் பொருளைச் செய்தற்குக் கடாவும் விடையும் உள்ளுறுத்தி விரித்தல். (காரி. மாற. 65.)

**அகலவுரை**
சூத்திரத்துப் பொருளைத் தூய்மை செய் தற்குக் கடா விடை உள்ளுறுத்து உரைக்கும் உரையெல்லாம் அகலவுரை.
(இறை. 1)

**அகவல் துள்ளல்**
வெண்சீர் வெண்டளையும் கலித்தளையும் விரவலான் வருவது அகவல் துள்ள லோசை. (யாப். கா. 22)

**அகவலோசை**
அகவலோசை மூன்று வகைப்படும். ஏந்திசை அகவலும் தூங்கிசை அகவலும் ஒழுகிசை அகவலும் என. (யாப். கா. 72)

அகவுதலில்லாத ஓசையாம். இதனைப் பிற நூலாசிரியர் செப்பலோசை என்ப. அகவுதல் என்பது தொழில்.
(இளம். தொல். செய். 78)

அகவிக் கூறுதலான் அகவலெனக் கூறப் பட்டது. அஃதாவது கூற்றும் மாற்றமு மாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல் லாம் வரையாது சொல்லுவதோராறும் உண்டு. அதனை வழக்கிலுள்ளார் அழைத்தலென்று சொல்லுப.
(பேரா. தொல். 393)

அகவிக் கூறலின் அகவலாயிற்று. அஃதாவது கூற்றும் மாற்றமுமாகி ஒருவன்

கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல்லாம் வரையாது கூறுவது. அதனை வழக்கினான் அழைத்தல் என்ப. அங்ஙனம் கூறுமிடத்துத் தொடர்ந்துகிடந்த ஓசை அகவலாம். (நச். தொல். செய். 86)

**அகவற்றூங்கல்** ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது அகவற்றூங்கலோசை. (யாப். கா. 72)

**அங்கதம்** அங்கதம் என்பது வசை.
(பேரா. தொல். 436)

இல்லாதன சொல்லி நகைப் பொருட்டாகச் செய்யினும் அங்கதச் செய்யுளெனப்படும். (பேரா. தொல். 441)

முகவிலக்கு முதலாகிய விலக்குறுப்பாகியும் பிறவற்றான் அவை பொருளாக வருவன. (பேரா. தொல். 430)

**அங்கியற் பொருள்** அங்கியற் பொருளாவது (அந்)நிலத்தில் அங்கமாம் பொருள். (கருப்பொருள்.) (வீர. [illegible]4)

**அச்சம்** குறிப்பு இன்றியே தோன்றும் நடுக்கம். பெண்மையின் தான் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. (இறை. 2)

அச்சமாவது தீமை வருமென்று அஞ்சுதல். (இளம். தொல். பொருள். 88)

அச்சமென்பது பயம்.
(பேரா. தொல். 251)

காணாததொன்றுக் கண்டவிடத்துப் பெண்டிரிடத்து நிகழ்வது. (நம்பி. 35)

**அசக்கு தரிசனாவரிணீயம்** கண்ணொழிந்த நான்கு இந்திரியங்களினாலும் அறிவும் அறிவுக்கு முன் காணும் காட்சியை மறைப்பது. (நச். சீவ. 3081)

**அசுணமா** இசையறிவதொரு விலங்கு.
(நச். சீவ. 1402)

அசுபம் — தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீராயிருக்கும் இவ்வுடம் பென்று கருதின கருத்து. (நச். சீவ. 3077)

அசும்பு — சிறு திவலை. (பேரா. திரு. 14:2)

அசுரம் — கொல்லேறு கொண்டான் இவளை எய்தும், வில்லேற்றினான் இவளை எய் தும், திரிபின்றி எய்தான் இவளை எய்தும், மாலை சூட்டப்பட்டான் இவளை எய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பது. இஃது அரும்பொருள் வினை என்பது. (இறை. 1)

இன்னது செய்தாற்கு இவள் உரியள் என்ற விடத்து அன்னது செய்து எய்துவது. (யாப். 96)

வில்லேற்றினானாதல் திரிபின்றி எய்தா னாதல் கோடற்குரியனெனக் கூறியவழி அது செய்தாற்குக் கொடுத்தல். (இளம். தொல். பொருள். 89)

கொல்லேறு கோடல் திரியின்றி எய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல். (நச். தொல். பொருள். 92)
(பார்க்க: ஆசுரம்)

அசை — அசையாவது தாக்கி எழுதல். அசை ஒரு மாத்திரை; அதற்கு வடிவு. எ. (அடி, சிலம்பு. 3:16)

அசை (இ) — அசைந்து நிற்றலின் அசையாயிற்று. (நச். தொல். செய். 3)

அசைச் சொற்கள் — சொல்லொடு சொல் தொடர்புபடும் வாய்பாட்டாற் தொடராது பிறிதோர் வாய்பாட்டால் தொடுப்பினும் பொருட் டொடர்பு உண்டாயிற் பொருளியையும் வழி அசைச்சொற்கள் திரியாது நின்ற நிலையே பொருள்படும் (இளம். தொல். பொருள். 193)

அசைத்தல் — சார்த்துதல். (சேனா. தொல். சொல். 250)

**அசைநிலை** பொருளுணர்த்தாது பெயரொடும் வினையொடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்றலின் அசைநிலையாயிற்று.

சார்ந்த மொழியை வேறுபடுத்து நிற்றலின் அசைநிலை சொல்லாயின.
(சேனா. தொல். சொல். 250)

தாஞ்சார்ந்த சொற்களின் பொருளை உணர்த்தியும் அச்சொற்களை அசைத்தும் நிற்றலின் அசைநிலையும் பொருள் குறித்தனவே. (நச். தொல். சொல். 157)

பொருளுணர்த்தாது சொற்களை அசைத்து நிற்பன.
(நச். தொல். சொல். 79)

அசைநிலையாவது தனிவரும்.
(தெய். தொல். சொல். 267)

அசைநிலையாவது செய்யுளின்பங்குறித்து வரும். (தெய். தொல். சொல். 417)

அசைநிலையென்பது வேறு பொருளுணர்த்தாது பெயர்ச் சொல்லோடும் வினைச் சொல்லோடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது.

அசைத்தல்-சார்த்தல். (ஆறு. நன். 420)

**அசையந்தாதி** ஓரடியுள் இறுதிச்சீருள் ஈற்றசையும் மற்றையடியின் முதற்சீரின் முதலசையும் ஒன்றத்தொடுப்பது. (பேரா. தொல். 411)

**அசைவு** தளர்ச்சி. அது தன்னிலையிற்றாழ்தல். (இளம். தொல். பொருள். 249)

பண்டை நிலைமை கெட்டு வேறொருவராகி வருந்துதல். (பேரா. தொல். 253)

**அஞ்சலி (நா)** இரண்டு கையும் பதாகையால் அகமொன்றுவது. (அடி. சிலம்பு. 3:18)

**அடக்கம்** மனமொழி மெய்களான் அடங்குதல். அது பணிந்த மொழியும், தானை மடக்கலும், வாய் புதைத்தலும் போல்வன.
(இளம். தொல். பொருள். 256)

உயர்ந்தோர் முன் அடங்கியொழுகும் ஒழுக்கம். அவை: பணிந்த மொழியும், தணிந்த நடையும், தானை மடக்கலும், வாய் புதைத்தலும் போல்வன. (பேரா. தொல். பொருள். 260)

**அடக்கமுடைமை** மனமொழி மெய்களான் அடங்கி ஒழுகுதல். (மணக். திருக். அதி. முன்.)

பொறிகள் ஐம்புலன்கள் மேல் செல்லாமை அடங்குதல். (இளம். தொல். பொருள்.74)

மெய்மொழி மனங்கள் தீநெறிக்கண் செல்லாது அடங்குதல். (பரிமே. திருக். அதி.13)

**அடக்கியல்** உள்ளுறுப்பின் பொருளையெல்லாம் ஒருவகையான் அடக்குமியல்பிற்றாகலின் அடக்கியல். (பேரா. தொல். பொருள். 444)

**அடவி** மலைசேர்ந்த காடு. (அடி. சிலம்பு. 14:56)

**அடி** பலவும் சிலவுமாகிய தளையொடு பொருந்திய சீர்களால் அடுத்து நடத்தலின் அடி என்பது காரணக்குறி. (யாப். 23)

சீர் இரண்டும் பலவுந் தொடர்ந்தாவதோர் உறுப்பு. (பேரா. தொல். 313)

சீர் இரண்டும் பலவுந் தொடர்ந்ததோர் உறுப்பு. (நச். தொல். செய். 1)

**அடி அளபெடைத் தொடை** அடிதோறும் முதற்சீர்க்கண் அளபெடுத்து ஒன்றிவரத் தொடுப்பது. (யாப். 41)

**அடி நிரல்நிறை** அடிதோறும் முதற்சீர்க்கண்ணே நிரல் நிறுத்தல். (யாப். 95)

**அடிமறிப்பொருள் கோள்** பெரும்பான்மையும் நாலடிச் செய்யுட் கணல்லது இப்பொருள்கோள் வாராது. (சேனா. தொல். சொல். 407)

**அடிமறிமண்டிலம்** எல்லா அடியும் ஒத்துவரும் பாட்டினையே அடிமறிமண்டில ஆசிரியம் என்று வழங்குப. இதனுள் யாதானும் ஓரடியை முதலு முடிவுமாக உச்சரித்தாலும் ஓசையும் பொருளும் வழுவாது வருதலின் அடிமறி மண்டிலம். (இளம். தொல். செய். 113)

| | |
|---|---|
| **அடிமறிமண்டில வெளி விருத்தம்** | அடிதோறும் பொருள் அற்று மண்டிலமாய் வருவன. (யாப். 68) |
| **அடிமறிமொழிமாற்று** | வேண்டிற்று ஓரடி முதலாகச் சொன்னாலும் பொருள் கொண்டு நிற்றல். (யாப். 95) |
| **அடிமுரண்** | அடிதோறும் மறுதலைப்படத் தொடுப்பது. (யாப். 38) |
| **அடிமோனை** | அடிதோறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது. (யாப். 35) |
| **அடியாகு எதுகை** | இரண்டாமெழுத்து ஒன்றுதல். (பேரா. தொல். பொருள். 405) |
| **அடியெதுகை** | இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது... இரண்டாம் எழுத்தின் மேல் ஏறிய உயிர் ஒன்றி வந்தாலும் மூன்றாம் எழுத்து ஒன்றி வந்தாலும் எதுகையாகும். (யாப். 36) |
| **அடிவகை** | இயற்சீரான் வருவதனை இயற்சீரடி எனவும், ஆசிரிய உரிச்சீரான் வருவதனை ஆசிரிய வுரிச்சீரடி எனவும், இயற்சீர் விகற்பத்து வருவதனை இயற்சீர் வெள்ளடி எனவும், வெண்சீரான் வருவதனை வெண்சீரடி எனவும், நிரையீற்று வஞ்சிச்சீரான் வருவதனை நிரையீற்று வஞ்சியடியென வும், உரியசை யீற்றான் வருவதனை உரியசையீற்று வஞ்சியடி எனவும், ஓரசைச் சீரான் வருவதனை அசைச்சீரடி எனவும் வழங்கப்படும். (இளம். தொல். செய். 48) |
| **அடை** | அடையென்பது ஒரு பொருளது குணம். (இளம். தொல். சொல். 26) |
| | அடையென்பது பண்பு. பண்பு எனினும், குணம் எனினும், விசேடமெனினும் ஒக்கும். (நேமி. 36) |
| **அடைநிலை** | முன்னும் பின்னும் பிறவுறுப்புக்களை அடைந்தன்றி வாராது. (பேரா. தொல். பொருள். 444) |

முன்னும் பின்னும் பிறவுறுப்புக்களை அடைய நிற்றலின் அடைநிலை.
(நச். தொல். செய். 132)

**அணங்கு** — பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதி னெண்கணனும் நிரயப் பாலரும் பிறரும் அணங்குதற்றொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினாரும் உருமிசைத் தொடக்கத்தினவுமாகும்.
(பேரா. தொல். பொருள். 256)

**அணிந்துரை** — நூலினது பெருமை முதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரை.
(சிவ. நன். 1)
நூலினது பெருமை முதலியன விளங்க அலங்கரித்துச் சொல்வது. (ஆறு. நன். 1)

**அணு** — அணு என்றது ஒலியினது நுட்பத்தை.
(சிவ. நன். 58)

**அத்திரி** — கோவேறு கழுதை. (நச். சீவ. 1773)

**அதிகாரச் சூத்திரம்** — ஆற்றொழுக்கு; அரிமான் நோக்கம், சார்ச்சி வழி ஒழுகுதல், தவளைப்பாய்த்து என்பனவற்றுள் ஒன்று ஏற்கும் வகையால் இயைந்து பொருள் விளைப்பது.
(யாப். பாயிரம்.)

**அதிகாரம்** — பல ஒத்துக்கொண்டது ஓர் அதிகாரம்.
(இறை. 1)

முறைமை.
(இளம். தொல். எழுத்து. 1; பேரா. தொல். பொருள். 665)

ஒரு பொருள் நுதலி வரும் பல ஒத்தினது தொகுதியை. (சேனா. தொல். சொல். 1)
வேந்தன் இருந்துழியிருந்து தன் நிலம் முழுவதும் தன்னாணையின் நடப்பச் செய்வதுபோல ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஒத்துக்களும் தன் பொருளே நுதலிவரச் செய்வது.
(சிவ. நன். அதி. முன்.)

**அதிசயம் மூன்று** — சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீ காதிசயம்.
(அடி. சிலம்பு. 10:160; நச். சீவ. 2813)

| | |
|---|---|
| **அதிசயவணி** | உயராததை வியந்துரைப்பது. (காரி. மாற. 239) |
| **அதிர்வு** | (யாழின்) நரம்பைச் சிதற வுந்தல். (அடி. சிலம்பு. 8:29) |
| **அந்தணர்** | அந்தத்தை அணவுவார் அந்தணர்...... வேதாந்தத்தையே நோக்குவார் என்றவாறு. (நச். திருமுரு. அடி. 96) |
| | வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பார். (நச். திருமுரு. அடி. 474) |
| | வேந்தனைக்கொண்டு ஆறங்கங்களையும் அறிய வல்லார். அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றது; வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார் என்றவாறு. (நச். கலி. கடவுள் வாழ்த்து.) |
| | காசாயம் போர்த்த குழாங்கள். (நச். கலி. 126:4) |
| | அழகிய தட்பத்தினை உடையார் என ஏதுப்பெயர். (பரிமே. திருக். 30) |
| அந்நப் போதிகை | (யானையின்) பின்னங்காலிற் (கட்டப்படும்) சங்கிலி. (நச். சீவ. 1831) |
| அந்நாதி யுவமை | ஒரு செய்யுளகத்துப் பல பொருட்குப் பல உவமை வந்தால் முதலே உவமஞ் செய்த உவமேயப் பொருட் பெயரினை ஆகுபெயராதல் அன்மொழித்தொகைப் புறத்து வந்த பெயராதலாக்கித் துணித்து நிறீஇ அவ்வுவமேயப் பெயரினை அந்தாதித்து உவமானப் பெயராக்கி உவம உருபு கொடுத்துப் பின்னர் அதன்மேல் வரும் உவமேயப் பொருளோடு புணர்த்து நிகழ்த்துவது. (காரி. மாற. 101) |
| அநபிகித கருத்தா | வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாகியே நிற்பது. (கோபா. பிரயோ. 14) (பார்க்க: அபிகிதகருத்தா) |
| அநியமச் சிலேடை | சிலேடித்த பொருள் நியமஞ் செய்யாதே மற்றும் ஒரு பொருள் சொல்லுவது. (வீர. 170) |

**அநியம வுவமை** — நியமித்த உவமையை விலக்கிப் பிறிதுமோருவமை புணர்ப்பது.
(காரி. மாற. 101)

**அநுவாதம்** — அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்டதொன்றனை வேறொன்று விதித்தற் பொருட்டுப் பின்னரு மெடுத்தோதுதல்.
(சிவ. தொல். சூ. ப. 28)

(பொருளை) ஒரு நிமித்தத்தால் பின்னரும் எடுத்துக் கூறுவது. (சுப்பி. பிரயோ. 50)

**அநேகாங்கவுருவகம்** — ஒன்றன் அங்கம் பலவற்றையும் உருவகம் செய்வது. (பழை. தண்டி. பொரு. 10)

ஒன்றின் அங்கம் பலவற்றையும் உருவகம் செய்வது. (காரி. மாற. 120)

**அபயவத்தம் (நா)** — இருகையும் சுகதுண்டமாக நெஞ்சுற நோக்கி நெகிழ்ந்து நிற்பது.
(அடி. சிலம்பு. 3:18)

**அபானவாயு** — அபானவாயு மலமூத்திரங்களைப் பெய்விக்கும். (அடி. சிலம்பு. 3: 26)

**அபிகித கருத்தா** — வினமுதல் என்று தெரியப்பட்டு வினை முதலாய் நிற்பது. (கோபா. பிரயோ. 14)

**அம்பணம்** — தரகர் அளக்கும் மரக்கால்.
(அடி. சிலம்பு. 14: 209)

**அம்பல்** — பெரும்போதாய்ச் சிறிது நிற்க அலரும் எனநிற்பது.

சொல் நிகழாதே முகிழ் முகிழ்த்துச் சொல்லுவதாயிற்று. இன்னதின் கண்ணது என்பது அறியலாகாது. (இறை. 22)

**அம்பலம்** — பலருங் கூத்துக் காணுமிடம்.
(நச். சீவ. 2112)

**அம்பு** — அம்பு சூழ்தலின் அம்பென்று உலகிற்குப் பெயராயிற்று; ஆகுபெயர்.
(நச். சீவ. 2332)

**அம்போதரங்கம்** — அம்போதரங்க உறுப்பு எனினும், அசையடி எனினும், பிரிந்திசைக் குறள் எனினும், சொற்சீரடி எனினும் எண் எனினும் ஒக்கும். (யாப். 83)

அம்போதரங்கம் எனினும், அசையடி எனினும், பிரிந்திசைக் குறள் எனினும், சொற்சீரடி எனினும், எண் எனினும் ஒக்கும். (யாப். கா. 38)

அம்போதரங்கம் எனினும், அசையடி எனினும், பிரிந்திசைக் குறளடி எனினும், சொற்சீரடி எனினும், எண் எனினும் ஒக்கும். (வீர. 115)

நீர்த்திரை போல வரவரச் சுருங்கி வருதலின் அம்போதரங்கம். (பேரா. தொல். பொருள். 452)

**அம்மை** சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளிய வாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லப்படுவது. (யாப். 95)

சிலவாய் மெல்லியவாய சொற்களால் ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லியது. (யாப். கா. 58)

அம்மை யென்பது குணப்பெயர். அமைதிப் பட்டு நிற்றலின் அம்மை என்றாயிற்று. (பேரா. தொல். பொருள். 547)

அமைதிப்பட்டு நிற்றலின் அம்மை யாயிற்று. (நச். தொல். செய். 235)

**அமிர்தம்** கட்கினிதாகிய மென்மையும் தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தடுக்கும் மென்மையும் உடையது. (நச். சீவ. 5)

**அயல்மயங்கிசைக் கொச்சகம்** பிற பாவினோடு மயங்கி வருவது. (யாப். 86)

**அர்ப்பாயம் (நா)** அருளில்லாதோர் தலைமக்களாய்ப் பெண் ணுடைத்தாய் வாரம் போலியாவது. அர்ப் பீடமெனினு மொக்கும். (வீர. 104)

**அரங்கின் அளவு** எழுகோல் அகலத்தினையும், எண்கோல் நீளத்தினையும் ஒரு கோல் குறட்டுயரத் தினையும் வாய்தல் இரண்டினையும் உடைத்தாதல். (நச். சீவ. 672)

**அரங்கம்** நாடகமாடுமிடம். (நச். சீவ. 2112)

| | |
|---|---|
| அரசன் கடமை | ஒருநாள் முதலன பத்து நாழிகையும் அறத்தின் வழியொழுகிப் பின்பத்து நாழி கையும் இறையின் முறைமை கேட்டுச் செய்த பொருளைப் பரிசிலர்க்குக் கொடுத்து மகிழ்ந்திருத்தல். (பழை. புறம். 69) |
| அரசியல்பு | பாலக்கிரகாரிட்டம் பன்னீராண்டளவும் உண்டாகையினாலே அதற்குச் சாந்தி யாகப் பன்னீராண்டு கடமை கொள்ளா தொழிதல் அரசியல்பு. (நச். சீவ.252) |
| அரமங்கையர் | தேவப் பெண்களுக்குப் பொதுப்பெயர் (பேரா. திரு. 25: 20) |
| அரளம் (நா) | பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரல் முடக்கி ஒழிந்த விரன் மூன்றும் நிமிர்ந்து வளைவது. (அடி. சிலம்பு. 3: 18) |
| அரற்று | அழுகையன்றிப் பலவுஞ் சொல்லித் தன் குறை கூறுதல். (பேரா. தொல். பொருள். 260) |
| அராகம் | அராகம் எனினும், வண்ணகம் எனினும், அடுக்கியல் எனினும், முடுகியல் எனினும் ஒக்கும். (யாப். 84) |
| | அராகம் எனினும், வண்ணகம் எனினும், முடுகியல் எனினும், அடுக்கியல் எனினும் ஒக்கும். (யாப். கா. 40) |
| | அராகம் எனினும் அடுக்கியல் எனினும் முடுகியல் எனினும் வண்ணகம் எனினும் ஒக்கும். (வீர. 115) |
| | ஈரடியானும் பலவடியானும் குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது...பெருமைக் கெல்லை ஆறடி. (இளம். தொல். செய். 117) |
| | அறாது கடுகிச் சேறல். (பேரா. தொல். பொருள். 464 |
| | குறிலிணை பயின்ற அடி அராகமெனப் படும். (பேரா. தொல். பொருள் 433) |
| | தாமே வேறுசில அடியாகி வருவன. (பேரா. தொல். பொருள். 434) |

கோவை ... நிலையம்
1810
031
கோவில்பட்டி-630307



அறாது கடுகிச் சேறல். பிறிதொன்று பெய்து ஆற்றவேண்டுந் துணை செய்ய தாகிய பொன்னை அராகித்து என்ப வாகலின் இதுவும் ஒப்பினாகிய பெயர்; மாத்திரை நீண்டுந் துணிந்து வாராது குற்றெழுத்துப் பயின்று உருண்டு வரு தலின். (நச். தொல் செய். 152)

**அரிமா நோக்கு** சிங்கம் நோக்குமிடத்து முன்னையாரையும் பின்னையாரையும் நோக்குவது போல இறந்ததனோடும் எதிர்வ த னோ டு ம் இயைபுபடக் கிடப்பது. (இறை. 4)

முன்னும் பின்னும் கூறுகின்ற இரண்டு சூத்திரத்தினையும் இடை நின்ற சூத்திரம் நோக்குதல்.
(இளம். தொல். பொருள்.656)

சிங்கநோக்கம். சிங்கம் நோக்குமிடத்து முன்னையாரையும் பின்னையாரையும் நோக்குவது போல இறந்த சூத்திரத்தி னோடும் எதிர்ந்த சூத்திரத்தினோடும் இயைபுபடக் கிடப்பது. (மயிலை. நன் 18.)

**அரும்பாலை (இ)** உழை குரலாக அரும்பாலை பிறக்கும். (யாப். 96)

**அருவுடம்பு** பத்துவகை இந்திரிய உணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோடும் கூடிய மனம். இது நுண்ணுடம்பு எனவும் படும்.
(பரிமே. திருக். 345)

**அருள்** பிறர் வருத்தத்திற்குப் புரியும் கருணை (இளம். தொல். பொருள். 256)

ஒன்றின் துயர் கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம். (பழை. புறம். 5)

எல்லா வுயிர்க்கும் இடுக்கண் செய்யாத தன்மை. (பேரா. தொல். பொருள். 273)

அருள் அன்பிற்குக் காரணமாய் மனத்து நிகழ்வது. (நச். கலி. 15:9)

**அருளல்** மக்கள் முதலிய சுற்றத்தாரை அருளுதல். (பேரா. தொல். பொருள். 260)

**அருளுடைமை** யாதானுமோருயிர் இடர்ப்படின் அதற்குத் தன்னுயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துமாறு போல வருந்தும் ஈரமுடைமை. (மணக். திருக். அதி. முன்.)

யாதானு மோருயிர் இடர்ப்படுமிடத்துத் தன்னுயிர் வருந்தினாற்போல வருந்தும் ஈரமுடைமை.
(இளம். தொல். பொருள். 74)

தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை.
(பரிமே. திருக். அதி. 25)

பார்க்க: அருள்; அருளல்.

**அல்லகுறி** குறியல்ல என்றவாறு. அதனை முன்றில் என்பது போலக் கொள்க. (நம்பி.159)

**அல்வழி** எழுவாயும், விளியும், உவமத்தொகையும், உம்மைத் தொகையும், பண்புத்தொகையும், இருபெயரொட்டுப் பண்புத்தொகையும், முற்றும் இருவகை எச்சமும், இடையும் உரியும் என இவை.
(இளம். தொல். எழுத். 114)

அல்வழியாவன உருபுகள் தொக்கும் விரிந்தும் நில்லாது புணர்வன.
(நச். தொல். எழுத். 112)

**அலர்** அலர் என்பது இன்னானோடு இன்னாளிடை இது போலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது.

பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற் போல நிற்கும் நிலைமை.
(இறை. 22)

**அலர்தல்** மேன்மேல் மிகுதல். (பரிமே. திருக். 1144)

**அலி** அலி மூன்று வகைப்படும். ஆணுறுப்பிற் குறைவின்றி ஆண் தன்மை இழந்ததூஉம், பெண்ணுறுப்பிற் குறைவின்றிப் பெண் தன்மை இழந்ததூஉம், பெண்பிறப்பில் தோன்றிப் பெண்ணுறுப்பின்றித் தாடி தோற்றி ஆண் போலத் திரிவதூஉமென.
(தெய். தொல். சொல். 1)

ஆணவாய்ப் பெண்ணிழந்ததனை அலி (என்பர்). (சிவ. இலக்க. ப. 111)

பேடு, அழிதூஉ, அலி, மகண்மா என்பன ஒரு பொருட் கிளவி.
(சிவ. நன். 264) (பார்க்க: ஆண்பேடு)

**அலா பத்திரம் (நா)** சிறுவிரல் முதலாகிய ஐந்தும் வளைந்து மறிவது. (அடி. சிலம்பு. 3:18)

**அலை** வைதலும் புடைதலும்.
(இளம். தொல். பொருளியல். 10)

கோல்கொண்டலைத்தல் முதலாயின.
(பேரா. தொல். பொருள். 258)

**அவதிஞானா வரணீயம்** அதீதகதமான பரஞானத்தை மறைப்பது. அஃதாவது தன்னுடைய முற்பிறப்பை அறியுமறிவை மறைப்பது.
(நச். சீவ. 3081)

**அவதிதரிசனா வரணீயம்** அவதிஞானத்துக்கு முன்காணுங் காட்சியை மறைப்பது. (நச். சீவ. 3081)

**அவப்பிரபஞ்சம்** பரமசாதிகளாகிய இழசினர் மொழி.
(பழை. தண்டி. பொது. 25)

**அவயவவுருவகம்** அவயவத்தை உருவகஞ் செய்து அவயவியை வாளாவே கூறுவது.
(பழை. தண்டி. பொரு. 10)

அவயவமே உருவகஞ் செய்து அவயவியை வாளாது கூறுவது. (காரி. மாற. 120)

**அவயவவுவமை** அவயவத்தை உவமித்து அவயவியை வாளாது கூறுவது. (காரி. மாற. 101)

**அவயவியுருவகம்** அவயவியை உருவகஞ் செய்து அவயவங்களை வாளாவே கூறுவது.
(பழை. தண்டி. பொரு. 10)

அவயவியை உருவகஞ் செய்துஅவயவத்தை வாளாதே கூறுவது. (காரி. மாற. 120)

**அவலம்** இழிவுபற்றிப் பிறப்பது.
(இளம். தொல். பொருள. 245).

நெஞ்சில் தோன்றும் அவலம்.
(நச். மது. 489)

**அவா** பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை. (நச். தொல். எழுத். 288)

**அவிநயக்கூத்து (நா)** கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ் செய்யும் பலவகைக் கூத்து. (அடி. சிலம்பு. 3:12)

**அவிநயம் (நா)** கதை தழுவாதே பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி அவிநயிப்பது. (நச். சீவ. 672)

**அவிருத்த உருவகம்** ஒரு பொருட்குக் கூறுவனவாந் தன்மை பலவுங்கூட்டி உருவகஞ் செய்வது. (காரி. மாற. 120)

**அவிரோதச் சிலேடை** முன்னர்ச் சிலேடித்த பொருளைப் பின்னர் விரோதியாமற் சிலேடிப்பது. (பழை. தண்டி. பொரு. 51)

முன்னர்ச் சிலேடித்த பொருளைப் பின்னரும் விரோதியாமற் சிலேடிப்பது. (வீர. 170)

**அவினயம் (நா)** நிற்ற லியங்க லிருத்தல் கிடத்தலென் றத்தகு நான்கே யவினயக் களனே. (அடி. சிலம்பு. 14:152)

**அவை** நான்கு வகைப்படும்: நல் அவையும் தீ அவையும் குறை அவையும் நிறை அவையும் என. (யாப். 96)

**அவையடக்கியல்** (அவையிலுள்ளோர்) அடங்குமாற்றால் தன்னை யிழித்துக் கூறி அவரைப் புகழ்தல். அவைக்கண் தானடங்குதல் (ஆகும்). (நச். தொல். செய். 111)

**அவையல் கிளவி** இழிந்தோர் கூறும் இழிசொற்களை நன்மக்களிடை மறைத்துக் கூறுதல். (நச். தொல். சொல். 442)

**அவையல் மொழி** அவையல் மொழியாவது இடக்கரடக்கிக் கூறுதல். (இளம். தொல். பொருள். 240)

**அழகு** இது ஒரு செய்யுறுப்பு. செய்யுட் சொல்லாகிய திரிசொல்லினால் ஓசையினியதாக நன்கு யாக்கப்படுவது. (யாப். 95)

செய்யுட் சொல்லாகிய திரிசொற்களான் ஓசை இனியதாகப் புணர்க்கப்பட்டது. (யாப். கா. 58)

**அழகு செய்தல்** மானிட மகளிர்க்குத் தாயர் பலரும் கைசெய்து பிறப்பிக்கும் அழகு. (நச். திருமுரு. 17)

**அழுக்காறாமை** பிறராக்க முதலாயின கண்டு பொறாமை யால் வருகின்ற மனக்கோட்டத்தைச் செய்யாமை. (மணக். திருக். அதி. முன்.)

பிறராக்க முதலாயின கண்டு பொறாமை யால் வரும் மனக்கோட்டத்தைச் செய் யாமை. (இளம். தொல். பொருள். 74)

பிறர் செல்வம் முதலாயினவற்றைப் பொறாமை. (நச். தொல். பொருள். 247)

**அழுகை** அவலத்தில் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247)

அவலம்; அஃது இருவகைப்படும். தானே அவலித்தலும், பிறரவலங் கண்டு அவலித் தலுமென. இவற்றுள் ஒன்று கருணை யெனவும் ஒன்று அவலமெனவும் படும். (பேரா. தொல். பொருள். 251)

**அழுதல்** பழைய தன்மை கெட்டு வருந்துதல். (நச். சீவ. 2781)

**அழைப்பு** பொருள் புணரா ஓசை. (பேரா. திரு. 12:102)

**அளகு** காட்டுக் கோழி. (நச். சீவ. 1778)

**அளபெடை** மாத்திரை குன்றலிற் சீர்குன்றித் தளை கெட நின்றவிடத்து, யாப்பழியாமைப் பொருட்டு வேண்டப்படுவது.

அளபெடைதான் இரண்டு வகைப்படும். உயிரளபெடையும் ஒற்றளபெடையும் என. (யாப். 2)

அளபெனினும் அளபெடையெனினும் புலுதமெனினும் ஒக்கும். (யாப். கா. 4)

அளபெடை ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ. (இளம். தொல். செய். 2)

அளபெடை எழுத்து ஒரு பொருள் உணர்த்தி ஓரெழுத்து ஒரு மொழியாய் நிற்கும். (இளம். தொல். எழுத்து. 8)

அளபெடை உயிர்மெய்யும் தமக்கு அடியாகிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வரும்.
(இளம். தொல். எழுத்து. 101)

கோட்டு நூறும் மஞ்சளுங்கூடிய வழிப் பிறந்த செவ்வண்ணம் போல நெடிலுங் குறிலுங் கூடிக் கூட்டத்திற் பிறந்த பின்னர்ப் பிளவுபடா வோசை அளபெடையாகும். (நச். தொல். எழுத். 6)

அளபெடை நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டிசைப்பது. (சிவ. தொல்சூ. ப. 51)

இயற்கை அளபெடை செயற்கை அளபெடை என இருவகைப்படும்.
(சுப்பி. பிரயோ. 5)

**அளபெடை (இடம்)** அளபெடைதான் நான்கு வகைப்படும். தனிநிலை அளபெடையும், முதல்நிலை அளபெடையும், இடைநிலை அளபெடையும், இறுதிநிலை அளபெடையும் என.
(யாப். 2)

**அளபெடை இயைபு** அளபெடையாய் வந்து இறுவாய் ஒப்பது.
(யாப். 40)

**அளவடி** பத்தும், பதினொன்றும், பன்னிரண்டும், பதின்மூன்றும், பதினாலுமென ஐந்து நிலம் பெறும். (இளம். தொல். செய். 37)

**அளவடி விருத்தம்** நான்கடியும் எழுத்தொத்து அலகு நிலை ஒவ்வாது வருவனவும், எழுத்தும் அலகும் தம்முளியையாது வருவனவும் அளவடி விருத்தம் எனப்படும். (வீர. 137)

**அளவழிச் சந்தம்** நாலெழுத்து முதலாக இருபத்தாறு எழுத்தின்காறும் உயர்ந்த இருபத்து மூன்று அடியானும் வந்து தம்முள் ஒவ்வாதும், எழுத்தலகு ஒவ்வாதும் வருவது. (யாப். 95)

**அளவழித் தாண்டகம்** இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவது. (யாப். 95)

**அளவழிப் பையுட் சந்தம்** அளவழிச் சந்தங்களிற் சீரொத்தும் மிக்கும் குறைந்தும் வருவது. (யாப். 95)

**அளவியற் சந்தம்** நாலெழுத்து முதலாக இருபத்தாறு எழுத்தின்காறும் உயர்ந்த இருபத்து மூன்று அடியானும் வந்து தம்முள் ஒத்தும், குருவும் லகுவும் ஒத்தும் வருவது. (யாப். 95)

**அளவியற் றாண்டகம்** இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்தும், குருலகுவும் ஒத்து வருவது. (யாப். 95)

**அளவு** அளவாவது தாக்கின வோசை நேரே மூன்று மாத்திரை பெறுமளவும் வருதல். அளவு மூன்று மாத்திரை; அதற்கு வடிவு-ஃ (அடி. சிலம்பு. 3 : 16)

**அளவை** நிறுத்தளத்தல், பெய்தளத்தல், நீட்டி யளத்தல், நெறித்தளத்தல், தேங்கமுகந் தளத்தல், சார்த்தியளத்தல், எண்ணி யளத்தல் என எழுவகைய. (இளம். தொல். எழுத். 7)

**அளி** அன்பு காரணத்தால் தோன்றும் அருள். (நச். தொல். பொருள். 247)

**அளைமறிபாப்புப் பொருள்கோள்** இறுதிச் சொல் முதலும் இடையும் சென்று மறிந்து பொருள் கோடல். (யாப். 95)

**அறங்கூறவையம்** தருமாசனத்தார் வழக்குரைக்கும் இடம். (அடி. சிலம்பு. 5 : 135)

**அறச்சிதைவு** பெரிய அறங்களைச் சிதைத்தலாவது; ஆன் முலை அறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும் பார்ப்பார் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல். (பரிமே. திருக். 110)

**அறத்தின் மண்டுதல்** படை பட்டபின் பெயராது சென்று இருபெரு வேந்தரும் பொருதல். (பழை. புறம். 62)

| | |
|---|---|
| அறம் | மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலும் ஆம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். (பரிமே. திருக். உரைப்பாயிரம்) |
| | குற்றம் தீர்ந்த நன்மை. (பரிமே. திருக். 292) |
| அறிபொருள் வினா | அறியப்பட்ட பொருளையே ஒரு பயன் நோக்கி அவ்வாய்பாட்டின் ஒன்றான் வினாவுவது. பயன் வேறறிதலும், அறிவுறுத்தலும் முதலாயின. (சேனா. தொல். சொல். 13) |
| அறியாப்பொருள் | எவ்வகையானும் அறியாப் பொருள் வினாவப் படாமையின் ஈண்டு அறியாப் பொருள் என்றது பொது வகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப் படாத பொருளையாம். (சேனா. தொல். சொல். 31) |
| அறியான்வினா | ஒரு புடையானும் அறியப்படாத பொருள் வினாவப் படாமையிற் பொது வகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப் படாமை நோக்கி அறியான் வினாவா யிற்று. (சேனா. தொல். சொல். 13) |
| அறிவர் | முக்காலமும் உணர்ந்தோரும் புலன் நன்குணர்ந்த புலமையோருமாவர். (நச். தொல். செய். 197) |
| | மூன்று காலமுந் தோன்ற நன்குணர்ந் தோரும் புலன் நன்குணர்ந்த புலமையோரு மாவர். (பேரா. தொல். பொருள். 509) |
| அறிவன் | அறிவன் என்றது கணியனை. இவர், பகலும், இரவும், இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும், மின்னும், ஊர்கோளும், தூமமும், மீன் வீழ்வும், கோள் நிலையும், மழை நிலையும் பிறவும் பார்த்துப் பயன் (கூறுவர்). (இளம். தொல். பொருள். 74) |

**அறிவு**

எப்பொருளாயினும் அப்பொருட்கண் நின்று அம்மெய்ம்மையை உணர்வது அறிவு. (இறை. 2)

நன்மை பயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிதல். (இளம். தொல். பொருள்.206)

அறிந்து செய்யப்படும் காரியம். (பேரா. திரு. 14 : 24)

நன்மை பயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிதல். (நச். தொல். பொருள். 209)

நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்தல். (நச். தொல். பொருள். 247)

தக்கதறிதல். (நம்பி. 35)

**அறுதொழில்**

ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல். (அரும். சிலம்பு. 23 : 70)

**அறுவகைத் துவர்ப்பு**

ஆசியம் இரதி அரதி சோகம் பயம் சுகுச்சை என்பன. (நச். சீவ. 3076)

**அன்பு**

தான் வேண்டப்பட்ட பொருளின்கண் தோன்றும் உள்ள நிகழ்ச்சி. (இறை. 1)

தான் கருதப்பட்ட பொருளின்கண் தோன்றும் வேட்கை. (இறை. 1)

பயின்றார் மாட்டுச் செல்லுங்காதல். (இளம். தொல். பொருள். 256)

தன்னான் புரக்கப்படுவார் மேலுளதாகிய காதல். (பழை. புறம். 5; நச். தொல். பொருள். 5)

அருட்கு முதலாகி மனத்தின் நிகழும் நேயம். அஃதுடையார்க்குப் பிறர்கட் துன்பங்கண்ட வழிக் கண்ணீர் விழுமாகலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கும். (பேரா. தொல். பொருள். 260)

தொடர்பு பற்றிச் செல்லும் அன்பு. (பரிமே. திருக். 757)

மனைவியர்கண்ணும் தாய் தந்தை முதலிய சுற்றத்தின் கண்ணும் மன மகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும். (நச். தொல். பொருள். 247) [பார்க்க: அருள்]

**அன்புடமை** — தன்னைச் சார்ந்தார்மாட்டுக் காதலுடையவனாதல்.
(மணக். திருக். அதி. முன்.) [பார்க்க: அருளுடைமை]

**அன்புடையார் குணம்** — சாவிற் சாதல், நோவினோதல், வேட்டல், பிரிவுநனி இரங்கல் என இவை. (இறை. 1)

**அன்மொழி** — தொக்க சொல் அல்லாத மொழி.
(சேனா. தொல். சொல். 412)

தொகைச்சொல் அல்லாதமொழி.
(சுப்பி. பிரயோ. 19)

**அன்மொழித் தொகை** — இரண்டு சொல்லும் பல சொல்லும் தொக்கக்கால் சொற்களை நோக்காதே பொருள் வேறொரு மொழியை நோக்குவது; அது வருமிடத்து யாவன் அவன் என்றும், யாது அது என்றும் இன்னன பிறவுங் கூறுதல். (வீர. 50)

பொருளின் வேறுபட்டு வருவது.
(தெய். தொல். சொல். 110)

இயைபு வேண்டாது இருமொழியும் தொக்க தொகையாற்றலால் பிறிது பொருள் உணர்த்தி நிற்பது.
(சிவ. நன். 290)

தொக்க இருமொழிப் பொருளுந் தராது புறமொழிப் பொருளைத் தருவது அன்மொழித் தொகை... அன்மொழித் தொகை விட்ட அன்மொழித் தொகையும் விடாத அன்மொழித் தொகையும் என இருவகைப்படும்... வடநூலார் விடாத அன்மொழித் தொகையை தற்குணசம் விஞ்ஞான வெகுவிரீகியென்றும், விட்ட

அன்மொழித் தொகையை அதற்குணசம் விஞ்ஞான வெகுவிரீகியென்றும் கூறுவர். (சிவ. தொல்சூ. ப. 65)

இயைபு வேண்டாது இருமொழியுந் தொக்க தொகை யாற்றலினாலே பிறிது பொருளுணர்த்தி இருமொழியிடத்து வருவதாம். (ஆறு. நன். 290)

**அனந்தல்** பறை கொட்டுவோர் கைபுண்படுதலின் மந்தமாக ஒலித்தல். (பழை. புறம். 62)

**அனுமானம்** புகை கண்டவழி நெருப்புண்மை கட்புலன் அன்றாயினும் அதன்கண் நெருப்பு உண்டென்று அனுமானித்தல். (இளம். தொல். பொருள். 571)

**ஆக்கஞ்செப்பல்** தன் நெஞ்சின்கண் வருத்தம் மிகுகின்ற படியைப் பிறர்க்குரைத்தல். (நம்பி. 36)

**ஆக்கம்** ஒன்றன் பரிணாமம். (இளம். தொல். பொருள். 251)

ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்கும். (சேனா. தொல். சொல். 19)

மேன்மேலுயர்தல். (பரிமே. திருக். 31)

**ஆகாயத்தின் குணம்** வெகுளி, மதம், மானம், ஆங்காரம், உலோப மெனவிவை. (அடி. சிலம்பு. 3:26)

**ஆகாரம்** குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. (பரிமே. திருக். 442)

**ஆகுபெயர்** ஒன்றன் பெயர் ஒன்றற்காய் நிற்றல். (இளம். தொல். சொல். 110)

யாதானுமோர் இயைபுபற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்காயது. (சேனா. தொல். சொல். 56, 114)

ஆக்கவாகும் பெயர் ஆகுபெயர் என்பதாயிற்று. (மயிலை. நன். 289)

யாதானும் ஒரு பொருத்தத்தினால் ஒன்றன் பெயர் ஒன்றதாக வருவது. (தெய். தொல். சொல். 110)

ஒப்புள்வழிச் சொல்வது ஆகுபெயர்.
(கல். தொல். சொல். 27)

ஒன்றன் பெயரான் அதனோடு இயைபு பற்றிய பிறிதொன்றனை உணர்த்தி ஒரு மொழிக்கண்ணதாம்.
(சிவ. நன். 290; தொல். சூ. ப. 65)

ஒன்றன் பெயரால் அதனோடு இயைபு பற்றிய பிறிதொன்றை உணர்த்தி ஒரு மொழியிடத்து வருவதாம்.
(ஆறு. நன். 290)

**ஆசனம்**

நிற்ற லிருத்தல் கிடத்த னடத்தலென் றொத்த நான்கி னொல்கா நிலைமை யொடின்பம் பயக்குஞ் சமய முதலிய அந்தமில் சிறப்பி னாசன மாகும்.
(அடி. சிலம்பு. 14 : 11)

பதுமம் வீரஞ்சிங்கம் பிரமம் பாத விலக்கண மஞ்சானு மண்டிதம் விதியு பங்கோற் பவுஞ்சுக மண்டிலம் மேலோர் விரும்பு மெய்யா சனமே. (நச். சீவ. 656)

**ஆசான்சாதி**

ஆசான்சாதி நால்வகையாவன. ஆசானுக்கு அகச்சாதி காந்தாரம், புறச்சாதி சிகண்டி, அருகு சாதி தசாக்கரி, பெருகு சாதி சுத்த காந்தாரம் என.
(அடி. சிலம்பு. 13 : 112)

**ஆசிடை எதுகை**

எதுகைத் தொடையுள் யரலழ என்னும் நான்கு ஒற்றும் வந்து மிகத் தொடுத்தல்.
(யாப். 37)

**ஆசிடை நேரிசை வெண்பா**

முதற்குறட்பாவினோடு தனிச்சொல் இடை வேறுபட்டு விட்டிசைப்பின் ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப்பட பற்றாசிட்டு விளக்கினாற் போல முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஒன்றும் இரண்டும் அடைகூட்டி உச்சரிக்கப்பட்டு இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவன ஆசிடைநேரிசை வெண்பாவாகும். (யாப். கா. 24)

| | |
|---|---|
| ஆசிரிய இணைக் குறட்டுறை | ஈரடி குறைந்து வருவன. (யாப். 76) |
| ஆசிரியத் தாழிசை | அளவடியான் வருதலானும் ஒத்து மூன்றாகி வருதலானும் இவ்வாசிரியர் மதத்தால் தரவின்றாகித் தாழிசை பெற்ற கொச்சக ஒருபோகு ஆசிரியத் தாழிசை யாகும். (இளம். தொல். செய். 175) |
| ஆசிரியத்துறை | நான்கடியாய் இடையிடை சீர் குறைந்து வரும். (இளம். தொல். செய். 175) |
| ஆசிரிய நிலை விருத்தம் | அடிமறியாகாது நிற்பன. (யாப். 77) |
| ஆசிரிய நேர்த்துறை | ஓரடி குறைந்து வருவன. (யாப். 76) |
| ஆசிரியப்பா | வெண்பா நிகர்த்ததாகிப் பிற தளையும் வந்து இனிய ஓசை உடைத்தாய் பரந்து வருதலின் அரசர் தன்மையது. (இளம். தொல். செய். 101) |
| | பெரும்பான்மை இயற் சீரானும் ஆசிரிய வுரிச்சீரானும் ஆசிரியத் தளையானும் அகவலோசையானும் நாற்சீரடியானும் சிறுபான்மை ஒழிந்த சீரானும் தளை யானும் அடியானும் வருவது. (இளம். தொல். செய். 113) |
| ஆசிரியப்பாவிற்குக் குட்டம் | குறளடி வஞ்சியும் சிந்தடி வஞ்சியும் பொருந்தி வருவது. (நச். தொல். செய். 115) |
| ஆசிரிய மண்டில விருத்தம் | அடிமறியாய் வருவன. (யாப். 77) |
| ஆசிரிய விருத்தம் | எண்சீரின் மிக்க சீரான் வந்த அடியெல் லாம் சிறப்பில. (யாப். கா. 36) |
| | அறுசீரடி முதலாகிய மிக்க அடியினான் நான்கடியும் ஒத்து வரும். (இளம். தொல். செய். 175) |
| ஆசிரியவுரிச்சீர் | உரியசையாகிய நேர்பு நிரைபு என்ற வற்றைத் தம்மினுறழ நான்கு சீராம்...... அவை ஆசிரிய உரிச்சீர் எனப்படும். (இளம். தொல். செய். 12) |

**ஆசிரியவுரிச்சீரடி.** ஆசிரிய வுரிச்சீரடியும் இருவகைப்படும். நேர்பு ஈறும் நிரைபு ஈறும் என. அவற்றுள் நேர்பீற்றுச் சீரை நேர்பு நேரு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்து வகைப்படும். நிரையீற்றுச் சீரும் அவ்வாறே நிரைபு நிரையு முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்து வகைப்படும்.
(இளம். தொல். செய். 48)

**ஆசினி** ஆசினி யென்பது ஒரு மரம். ஈரப்பலா வென்பாரும் உளர். (பழை. புறம். 158)

**ஆசுகவி** கொடுத்த பொருளும் தொடுத்த சூழலும் அடுத்த தொடையும் வழுவாமற் கடுத்துப் பாடுவான். (யாப். 96) (பார்க்க : கவி)

**ஆசுரம்** தலைமகட்குப் பொன்பூட்டிச் சுற்றத் தார்க்கு வேண்டுவன கொடுத்துக் கொள்வது. (நம்பி. 117)

**ஆடவர்பணி** மகளிரிருந்து இல்லறத்தை நிகழ்த்துதற்கு வேண்டுவன தேடிவருதல் ஆடவர்பணி.
(நச். சீவ. 1502)

**ஆண்டு** சிங்கவோரை முதலாகத் தண்மதிக்குரிய கற்கடவோரை ஈறாக வந்து முடியுந் துணை ஓர் யாண்டு.
(நச். தொல். பொருள். 6)

**ஆண்பேடு** தாடியும் பெண்ணுறுப்புப் பலவும் உடையது. (அடி. சிலம்பு. 6:57)

**ஆண்மை** ஆண்மைத் தன்மை. அஃதாவது ஆள்வினை உடைமையும் வலிபெயராமையும். (இளம். தொல். பொருள். 90)

ஆளுந்தன்மை. (நச். சீவ. 1165; நச். தொல். சொல். 57)

ஒன்றனையும் பாராது கடிதிற் செய்வது. (பரிமே. திருக். 383)

ஒன்றற்கும் சாராது நிற்றல்.
(பரிமே. திருக். 1133)

| | |
|---|---|
| **ஆண்மை திரிதல்** | ஆண்மைத் தன்மையில் திரிதலாவது விகாரமும் வீரியமும் நுகரும் பெற்றியும் பத்தியும் பிறவும் இன்றாதல். (அடி. சிலம்பு. 6:56) |
| **ஆணை** | ஆணையென்பது ஆக்கினை; வடமொழித் திரிபு. (இளம். தொல். செய். 186) |
| **ஆதிதீபகம்** | ஆதி தீபகமாவது முதலின்கண் நின்ற சொல் எல்லாவிடத்தும் பொருள் கொள நிற்பது. (வீர. 150) |
| **ஆதி விளக்கு** | சூத்திரத்தினால் ஆதியின் அமைத்த பொருள் அந்தத்தளவும் ஓடுதல். (இளம். தொல். பொருள். 656) |
| **ஆய்தம்** | ஆய்தம் என்பது அஃகெனம். அஃகேனம் எனினும், ஆய்தம் எனினும், தனிநிலை எனினும், புள்ளி எனினும், ஒற்றெனினும் ஒக்கும். (யாப். கா. 4) |
| | ஆய்தத்திற்குக் குற்றெழுத்துச் சார்பே யெனினும் தலைவளியாற் பிறத்தலின் உயிரோடு புணர்ந்த வல்லெழுத்துச் சார் பாகவே பிறக்குமென்பது கொள்க. (இளம். தொல். எழுத்து. 101) |
| | ஆய்தமென்ற ஓசைதான் அடுப்புக்கூட்டுப் போல மூன்று புள்ளி வடிவிற்று. (நச். தொல். எழுத். 2) |
| **ஆர்ப்பு (இ)** | மாத்திரை யிறந்த சுருதி; ஓங்கவிசைத்தல். (அடி. சிலம்பு. 8:29) |
| **ஆர்வம்** | பெறாததன்மேல் நிகழும் ஆசை. (நச். சீவ. 3038) [பார்க்க : பற்று] |
| | தம் நெஞ்சு கருதின பொருள்கள் மேற் றோன்றின பற்றுள்ளம். (நச். மது. 489) |
| **ஆரபடி (நா)** | ஆரபடியாவது பொருள் பொருளாக வீர ராகிய மானிடர் தலைவராக வருவது. (அடி. சிலம்பு. 3.13) [பார்க்க : ஆரவடி] |
| **ஆரவடி (நா)** | ஆரவடியாவது அதிகெம்பிர சந்தர்ப்ப மாய் நிப்பியா பாண்டவாவுரை சுவைத் தல் உபாங்கமாவது. (வீர. 104) |

ஆராய்ச்சி — ஒரு பொருளைக் குறித்து அதன் இயல்பு எத்தன்மைத்தென ஆராய்தல்.
(இளம். தொல். பொருள். 256)

ஒரு பொருளை நன்று தீதென்று ஆராய் தல். (பேரா. தொல். பொருள். 260)

ஆராய்தல் (இ) — ஆரோகண அவரோகண வகையால் இசை யைத் தெரிவது. (நச். சீவ. 657)

ஆரிடம் — ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற் குளம்பினவாகச் செய்து அவற்றிடை நீரிற் கொடுப்பது. (இறை. 1)

ஏறும் கொணர்ந்து நிறீஇ அவற்றின் முன்னர்க் கைக்கு நீர்ப்பெய்து கொடுத் தல். (யாப். 96)

ஆரிடமாவது ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனேறும் வாங்கிக் கொடுப்பது.
(இளம். தொல். பொருள். 89)

தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற் கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ் வீரென நீரிற் கொடுப்பது.
(நச். தொல். பொருள். 92)

ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனே றும் வாங்கிக் கொண்டு கன்னியை அலங் கரித்துத் தீமுன்னர்க் கொடுப்பது.
(நம்பி. 117)

ஆரிடம் (செய்யுள்) — ஆரிடம் என்பது உலகியற் செய்யுட்கு ஓதிய உறுப்புக்களின் மிக்கும் குறைந்தும் நடப்பன. அவ்வாரிடச் செய்யுள் பாடு தற்கு உரியர் ஆக்குதற்கும் கெடுத்தற்கும் ஆற்றலுடையார் ஆகி, முக்காலத்துப் பண்பும் உணரும் இருடிகள் எனக் கொள்க.
(யாப். 93)

ஆள்வினை — காதலர்ப் பிரிந்து ஒரு கருமம் முடிப்ப தனின் மிக்க ஆள்வினையில்லை.
(இறை. 35)

| | |
|---|---|
| **ஆள்வினை உடைமை** | ஆள்வினை யுடைமையாவது முயற்சி யுடைமை. (மணக். திருக். அதி. முன்.) |
| | இடைவிடாத மெய்ம்முயற்சி உடை யனாதல். (பரிமே. திருக். அதி. 62) |
| **ஆற்றாமை** | பிறிது எவ்வுணர்வும் இன்றி அவ்வாற் றாமை தானே ஆவது. (இறை. 3, 30) |
| **ஆற்றொழுக்கு** | ஆற்றுநீர் தொடர்பறாது ஒழுகுமாறு போலச் சூத்திரங்களும் தம்முள் இயைபு படக் கிடப்பது. (இறை. 4) |
| | ஆற்றுநீர் தொடர்வறாது ஒழுகுமாறு போலச் சூத்திரங்களும் தம்முள் இயைபு பட்டொழுகுவது. (மயிலை. நன். 18) |
| **ஆறங்கம்** | உலகியற் சொல்லை ஒழித்து வைதிகச் சொல்லை ஆராயும் **நிமித்தமும்**, அவ்விரண் டையும் உடனாராய்ந்த ஐந்திரத் தொடக்கத்து **வியாகரணமும்**, போதாய னீயம் பரத்துவாசம் பரமார்த்தம் பரமாத்திரையம் முதலிய **கற்பங்களும்**, நாராயணீயம் வராகம் முதலிய **கணித மும்**, எழுத்தாராய்ச்சியாகிய **பிரமமுஞ்** செய்யுளிலக்கணமாகிய **சந்தமுமாம்**. (நச். கலி. கடவுள் வாழ்த்து; நச். தொல். பொருள். 75) |
| **ஆறும் ஏழும்** | நாடிய நட்புபகை செலவு நல்லிருக்கை<br>கூடினரைப் பிரித்தல் கூட்டலா-றீடிலா<br>வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூது பொரு<br>ளீட்டங்கள் காமமிவை யேழு.<br>(சாமு. புறப். 225) |
| **ஆனந்தம்** | ஆனந்தம் ஆறுவகைப்படும். எழுத் தானந்தமும், சொல்லானந்தமும், பொரு ளானந்தமும், யாப்பானந்தமும், தூக் கானந்தமும், தொடையானந்தமும் என. பாட்டுடைத் தலைவனையே கிளவிப்படக் கிளவித் தலைவனாகக் கூறுவது. (யாப். 96) |
| **இகத்தல்** | இகத்தல் என்பது ஒன்றின் இறத்தல் என்ற வாறு. (இறை. 20) |

**இகலின்பம்** உலகிலுள்ள இன்பங்களுக்கு மாறாகிய இன்பம்; அஃதாவது வீட்டின்பம். (நச். சீவ. 3024)

**இகழ்ச்சி விலக்கு** இகழ்ந்து விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**இங்கிதம்** குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில். (பரிமே. திருக். 442)

குறிப்பின்றன்மை. (நச். சீவ. 765)

**இசும்பு** வழுக்குதல், இசும்பு, ஏற்று, இழிவு முதலாயின குற்றம் என்பாரும் உளர். (பேரா. திரு. 14:149)

**இசைநிறை** செய்யுட்கண் இசை நிறைந்து நிற்றலின் இசை நிறையாயின. (சேனா. தொல். சொல். 250)

சொற்கள் ஓசை நிறைந்து நின்றே பொருளுணர்த்த வேண்டுதலின் இசை நிறையும் பொருளுணர்த்திற்றேயாம். (நச். தொல். சொல். 157)

இசை நிறைத்தற் பொருட்டு ஒரு சொல் லோடு ஒட்டிவரும். (தெய். தொல். சொல். 267)

இசை நிறையாவது பாட்டுக் குறித்து வரும். (தெய். தொல். சொல். 417)

வேறு பொருளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது. (ஆறு. நன். 420)

**இசைப்பா** இசைப்பா பத்து வகைப்படும். செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவ பாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்று வரி, கானல், விரிமுரண், தலைபோகு, மண்டிலம் என. (அடி. சிலம்பு. 6:35)

**இசைமை** இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழி வருவன செய்யாமை. (பேரா. தொல். பொருள். 257)

**இசையானந்தம்** அவலமுற்றிருந்தோர்க்கு இசையாகிய பஞ்சமும், குறிஞ்சியும், பியந்தையும்,

பாலை யாழும், காந்தரா பஞ்சமும், இவற்றொடு பியந்தை யாழும் தலைவனைப் புகழ்ந்த பாடாண் பாட்டிற்கும் இசையாகி வரப் புணர்ப்பது. (யாப். 96)

**இசையெச்சம்** எஞ்சிய இசைப்பொருளுணர்த்தலான் இசையெச்சம்.
(சேனா, தொல். சொல். 416)

ஒன்று சொல்ல அச்சொல்லானே வேறொரு பொருளிசைத்தல். அஃதாவது இரட்டுற மொழிதலென்றவாறு.
(மயிலை. நன். 359)

ஒரு சொல் ஒரு பொருளன்றிப் பிறிதுமொருபொருளை இசைக்குமாறு வருவது.
(தெய். தொல். சொல். 422)

பெயர் வினை இடை வரி என்னும் நால் வகைச் சொல்லுள் ஒன்றும் பலவும் தனித்தும் தொடர்ந்தும் வருவது.
(சிவ. நன். 360)

வாக்கியங்களில் அவ்வவ் விடத்திற்கேற்ப ஒரு சொல்லும் பல சொல்லுமாக வருவித்துரைக்கப்பட்டு வருவதாம்.
(ஆறு. நன். 360)

**இடக்கர்** சபையிலே சொல்லத்தகாத சொல்.
(ஆறு. நன். 177)

**இடக்கரடக்கல்** இடக்கர் என்பது மறைத்து மொழி கிளவி என்பவாகலின் இடக்கர் தோன்றாது அதனை மறைத்ததை இடக்கரடக்கல் என்பர். (சிவ. நன். 267)

சொல்லத்தகாத சொல்லை அவ்வாய் பாடு மறைத்துப் பிற வாய்பாட்டால் சொல்லல். (ஆறு. நன். 178)

நன்மக்களிடத்தே சொல்லத்தகாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்வது.
(ஆறு. நன். 267)

**இடக்கை (இ)** — ஆவஞ்சியெனினும், குடுக்கையெனினும், இடக்கை யெனினும் ஒக்கும்; அதற்கு ஆவினுடைய வஞ்சித் தோலைப் போர்த்தலால் ஆவஞ்சியென்று பெயராயிற்று. குடுக்கையாக அடைத்தலாற் குடுக்கை யென்று பெயராயிற்று. வினைக் கிரியைகள் இடக்கையால் செய்தலின் இடக்கை யென்று பெயராயிற்று.
(அடி. சிலம்பு. 3: 27)

**இடத்திணைவழு** — பான்மயக்கமன்றி இடமும் திணையும் மயங்குவது. (மயிலை. நன். 374)

**இடந்தலைப்பாடு** — முன் எதிர்ப்பட்ட இடம் நோக்கிச் செல்லுதல். (இறை. 3)

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிற்றை ஞான்றும் அவ்விடத்துச் சென்று எதிர்ப்படுதல்.
(இளம். தொல். பொருள். கள. முன்.)

**இடம்** — ஒருவர் கூற ஒருவர் கேட்கும் இடம் என்றவாறு. அவை தன்மை முன்னிலை படர்க்கை என்பன. (இறை. 56)

மூன்று இடமாவன: தன்மை முன்னிலை படர்க்கை என்பன.
(இளம். தொல். சொல். 1)

**இடம் (இரண்டு)** — இரண்டு இடமாவன: செய்யுளிடம் வழக்கிடம். (இளம். தொல். சொல். 1)

**இடர் எட்டு** — விட்டில் கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு நட்டம் பெரும் பெயல் காற்றெட்டு. (தாமு. புறப். 205)

**இடவழு** — ஓர் இடச்சொல் ஓர் இடத்துச் சொல்லோடு முடியும்
(சேனா. தொல். சொல். 11)

தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடமும் ஒன்றோடொன்று மயங்குதல் இடவழுவாம். (தெய். தொல். சொல். 11)

**இடுக்கண்** — மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கம் படவரும் இரக்கம்.
(பேரா. தொல். பொருள். 260)

**இடுகுறிப்பெயர்** ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடையோரானும் இட்ட குறியாகிய பெயர். வடநூலார் இடுகுறியை ரூடி என்பர். (சிவ. நன். நூ. 62)

இடுகுறிப் பெயராவது ஒரு காரணமும் பற்றாது வழங்கி வரும் பெயர். (ஆறு. நன். 62)

**இடைச்சொல்** இடைச்சொற்கள் பகவின்றியே நின்றிசைப்பனவும் உள. (இளம். தொல். சொல். 244)

காரகபத வேற்றுமையானும் கிரியாபத வேற்றுமையானும் விகற்பிக்கப்படாதே ஐ, ஆல் என்றும், மன் இசின் என்றும், மற்று ஆங்கு என்றும் இவை முதலாக வருவன. (வீர. 49)

மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச் சொல்லாயிற்று. பெயரும் வினையுமுணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப்படுப்பதல்லது தமக்கெனப் பொருளுடையவல்ல.

சார்ந்துவருதல் உரிச்சொற்கும் ஒத்தலின் தமக்கெனப் பொருளின்மை இடைச் சொற்கு சிறப்பிலக்கணமாம். (சேனா. தொல். சொல், 249)

முன்னும் பின்னும் நிற்குமேனும் பெரும்பான்மையும் இடையே நிற்றலின் இடைச் சொல்லென்றார். (நச். தொல். சொல். 251)

பெயரும் வினையும் போலத் தனித்தனி பொருள் உணர உச்சரிக்கப்படாது பெயர் வினைகளைச் சார்ந்து புலப்படும். பெயரும் வினையும் இடமாக நின்று பொருள் உணர்த்துதலின் இடைச்சொல் லாயிற்று. (தெய். தொல். சொல். 245)

பெயர் வினைகள் உணர்த்தும் பொருட்

குத்தான் இடமாக நிற்றலான் இடைச் சொல்லாயிற்று.
(கல். தொல். சொல். 251)

பெயர்ச்சொல் வினைச் சொற்களும் ஆகாது அவற்றின் வேறும் ஆகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றது.

தனித்து நடத்தலின்றிப் பெயர் வினை களிடமாக நடத்தலின் இடைச்சொல் என்பது காரணக்குறி. (சிவ. நன். 420)

பொருளையும் பொருளது புடைபெயர்ச்சி யையுந் தம்மானன்றித் தத்தங் குறிப்பி னுணர்த்துஞ் சொல் இடைச்சொல்.
(சிவ. தொல்சூ. ப. 51)

பெயர்ச்சொல் வினைச் சொற்களு மாகாது அவற்றின் வேறுமாகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் லெனப்பட்டன. தனித்து நடத்தலின்றிப் பெயர் வினைகளிடமாக நடத்தலின் இடைச் சொல்லெனப்பட்டன.
(ஆறு. நன். 420)

**இடைநிலை** முதனிலைப் பகுதிக்கும் இறுதிநிலை விகுதிக்கும் இடை நிற்றலின் இடைநிலை யாம். (சிவ. நன். 133)

**இடைநிலை அளபெடைத் தொடை** முதல் நின்ற சீரின் நடுநின்ற எழுத்து அளபெடுத்து ஒன்றிவரத் தொடுப்பது.
(யாப். 41)

**இடைநிலைப்பாட்டு** இடைநிலைப் பாட்டெனினும் தாழிசை யெனினும் ஒக்கும்.
(இளம். தொல். செய். 117)

**இடைப்பிறவரல்** உருபு ஏற்ற சொற்களும், முற்றுச் சொற் களும் பெயரெச்சச் சொற்களும் வினை யெச்சச் சொற்களும் நிலைமொழிகளாய் அமைய அவற்றுக்கும் அவை கொண்டு முடியும் வருமொழிச் சொற்களுக்கும் இடையே வேற்றுச் சொற்கள் பொருள் பொருத்தமுற வருதலாம்.
(கோபா. பிரயோ. 19)

**இடைப்புணர்முரண்** இடை இருசீரும் மறுதலைப்படத் தொடுப்பது. (யாப். 39)

இடையிருசீரும் ஒன்றத் தொடுப்பது. (இளம். தொல். செய். 98)

**இடையாகு இன்பா** தன்சீரும் தன்தளையும் பிற பாவின் சீரோடும் தளையோடும் மயங்கி வருவன. (யாப். 92)

**இடையாகு எதுகை** ஓரெழுத்தே வரத்தொடுப்பது. (யாப். 37)

**இடையாகு கழிநெடிலடி** ஒன்பதின் சீரடியும் பதின் சீரடியும் இடையாகு கழிநெடிலடி எனப்படும். (யாப். 25)

**இடையிட்ட அடியந்தாதி** எழுத்து அசை சீர்களால் இடையிட்டு வந்த அடி அந்தாதி இடையிட்ட அடியந்தாதி என்பர். (யாப். 52)

**இடையிட்டெதுகை** அடியிடையிட்டு எதுகை வருவது. (யாப். 37)

ஓரடியிடையிட்டுத் தொடுப்பது. (இளம். தொல். செய். 98)

**இடையினநடை** இடையெழுத்து மிகத் தொடுப்பது. (யாப். 53)

**இடையெழுத்து** இடை நிகரவாகி ஒலித்தலானும் இடை நிகர்த்தாய மிடற்று வளியாற் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது. (இளம். தொல். எழுத்து. 21)

இடை நிகர்த்தாய் ஒலித்தலானும் இடை நிகர்த்தாய் மிடற்று வளியாற் பிறத்தலானும் இடையெழுத்தாயிற்று.) (நச். தொல். எழுத். 21)

**இணை** முதலிரு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது. (இளம். தொல். செய். 98)

**இணைக்குறளாசிரியம்** இடையிடை முச்சீர்வரின் இணைக்குறளாசிரியம். (இளம். தொல். செய். 113)

**இணை நரம்பு (இ)** இரண்டு நரம்பு; என்னை? இணையெனப் படுவ கீழும் மேலும், அணையத் தோன்றும் அளவினவென்ப. (அடி. சிலம்பு. 8:33)

**இணை நிரல்நிறை** முதல் இருசீர்க்கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப். 95)

**இணையா வினைக்கை (நா)** இணையா வினைக்கை முப்பத்து மூன்று வகைப்படும். அவை பதாகை, திரிபதாகை, கத்தரிகை, தூபம், அரளம், இளம்பிறை, சுகதுண்டம், முட்டி, கடகம், சூசி, பதும கோசிகம், காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிர சூடம், பிசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மகரமுகம், வலம்புரி என. (அடி. சிலம்பு. 3:18)

**இதரவிதரவுவமை** பொருள் ஒருகால் உவமையாயும், உவமை ஒருகாற் பொருளாயும் ஒரு தொடர்ச்சிக் கண்ணே வருவது. (பழை. தண்டி. பொரு. 5)

**இம்மி** மத்தங்காய்ப் புல்லரிசி. (நச். சீவ. 495)

**இயம்புதல் வேட்கையுவமை** பொருளை இன்னது போலுமென்று சொல்ல வேட்கின்றது என் உள்ளம் என்பது. (பழை. தண்டி. பொரு. 5)

**இயல்பு** பொருட்குப் பின் தோன்றாது உடன் நிகழுந் தன்மை. (சேனா. தொல். சொல். 19)

ஒழுக்கம். (நச். குறிஞ். 15)

இயல்பு இயற்கை தன்மை என்பன ஒரு பொருட்சொற்கள். (ஆறு. நன். 151)

**இயல்பு வழக்கு** ஒரு காரணமின்றியே இயல்பாய் வருதலின் இயல்பு வழக்கென்றாயின. (மயிலை. நன். 266)

இலக்கணமுடையது, இலக்கணப் போலி, மரூஉ என்ற மூன்றும் தகுதி வழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல்

| | |
|---|---|
| | அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லார் கூறுதல் இயல்பு வழக்கு. (சிவ. நன். 267) |
| | எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லாற் கூறுதல். (ஆறு. நன். 267) |
| இயல் மயங்கிசைக் கொச்சகம் | கலிக்கு ஓதப்பட்ட உறுப்புக்களோடு மயங்கி வருவது. (யாப். 86) |
| இயற்கை | பெற்றி முதலியவற்றான் உணரப்படுவது. (சேனா. தொல். சொல். 245) |
| | பொருட்குப் பின் தோன்றாது உடன் நிகழுந் தன்மை. (சுப்பி. பிரயோ. 5) |
| இயற்கை அன்பு | காரணம் இன்றித் தோன்றும் அன்பு. (இறை. 2) |
| இயற்கைப் புணர்ச்சி | தலைமகனும் தலைமகளும் ... பொழிலிடத்து எதிர்பட்டுத் தெய்வமிடை நிற்பப் பான்மை வழியோடி ஓராவிற்கு இருகோடு தோன்றினாற்போலத் தம்முள் ஒத்த அன்பினராய் அவ்விருவர் ஒத்தார் தாமே கூடுங்கூட்டம். |
| | இயற்கைப் புணர்ச்சி யெனினும் தெய்வப் புணர்ச்சி யெனினும் முன்னுறு புணர்ச்சி யெனினும் காமப் புணர்ச்சி யெனினும் ஒக்கும். (பேரா. திருக். 1) |
| இயற்சிஃறாழிசைக் கொச்சகம் | ஈற்றடி குறையாது சில் தாழிசைகளால் வருவது. (யாப். 86) |
| இயற்சீர் | ஈரசைச்சீர் பிறிதாகாது எல்லாப் பொருள் மேலும் சொல்லப்படும் சிறப்புடைமை யானும் முதற்பா இரண்டினுள்ளும் பெரும் பான்மை இயன்று இனிது நடத்தலானும் இயற்சீர் என்பது காரணக் குறி. (யாப். 11) |
| | நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கினையும் தம்முளுறழப் பதினாறு அசைச் சீராம். அவற்றுள் இயலசையாகிய நேரும் நிரையும் தம்மின் உறழ நான்கு சீராம். அவை இயற்சீர் எனப்படும். (இளம். தொல். செய். 12) |

**இயற்சீர் வெண்டளை** — இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசை மாறு பட்டு வருவது இயற்சீர் வெண்டளை.
(இளம். தொல். செய். 48)

நிரையீற்றியற்சீர் நிற்ப நேர் வரினும் நேரீற்றியற்சீர் நிற்ப நிரை வரினும் இயற்சீர் வெண்டளையாம்.
(இளம். தொல். செய். 55)

**இயற்சீர் வெள்ளடி** — இயற்சீர் வெள்ளடியும் நேரீறும், நிரை யீறும் என இருவகைப்படும். அவற்றுள் நேரீறு நிரை நேர் முதலாகிய ஐந்து சீரோடும் உறழ ஐவகையாம். நிரையீறும் அவ்வாறே நேர்பு நேரு முதலாகிய ஐந்து சீரோடும் உறழ ஐவகையாம்.
(இளம். தொல். செய். 48)

**இயற்சீரடி** — இயற்சீரடி நேரீற்றியற்சீரடி எனவும் நிரையீற்றியற்சீரடி எனவும் இருவகைப் படும். நேரீற்றியற் சீரடியாவது நேரீறு நேர்முதலாகிய இயற்சீர் வருதலும், நேர்பு முதலாசிரிய வுரிச்சீா வருதலும், நேர் முதல் வெண்பா வுரிச்சீர் வருதலும், நேர் முதல் ஓரசைச்சீர் வருதலும் என ஐந்து வகைப்படும். நிரையீற்று இயற்சீரும் இவ்வாறே நிரை முதலாகிய ஐந்து சீரொடும் உறழ ஐந்து வகைப்படும்.
(இளம். தொல். செய். 48)

**இயற்சொல்** — தமிழ் வழங்கு நாட்டு விகார்மின்றித் தமிழியற்கை இலக்கணப்பாடு செவ்வ னுடைய சொல்.
(இளம். தொல். சொல். எச்ச. 1)

திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற் சொல்லாயிற்று.
(சேனா. தொல். சொல். 398)

அருமையானன்றி இயல்பாற் பொருளுண ருஞ் சொல். (சிவ. இலக்க. ப. 111)

இயல்பாற் பொருளுணரும் சொல்.
(ஆறு. நன். 272)

**இயற்பஃறாழிசைக் கொச்சகம்** — ஈற்றடி குறையாது பல தாழிசைகளால் வருவது. (யாப். 86)

| | |
|---|---|
| இயற்பெயர் | ஒரு பொருட்கு இடுகுறியாகி வழங்கும் பெயர். (தெய். தொல். சொல். 169) |
| இயற்றரவிணைக் கொச்சகம் | தரவு இரட்டித்துச் சுரிதகம் பெறாதது. (யாப். 86) |
| இயற்றரவு கொச்சகம் | தரவு ஒன்றாய்ச் சுரிதகம் பெறுவது. (யாப். 86) |
| இயைபிலுருவகம் | பல பொருளும் தம்முள் இயையாமை வைத்து உருவகம் செய்து உரைப்பது. (பழை. தண்டி. பொரு. 10) |
| இயைபு | ஞணநமன யரலவழள எனப்பட்ட பதினொரு புள்ளியீறாய் வந்த பாட்டு. (யாப். 95) |
| இயைபுருவகம் | பல பொருளை உருவகஞ் செய்யுங்கால் தம்முள் இயைபுடையவாக வைத்து உருவகஞ் செய்வது. (பழை. தண்டி. பொரு. 10) |
| | ஒரு தொடர்பினுட் பல பொருளையும் உருவகஞ் செய்யுங்கால் தம்முள் காரண காரியம் இயைபுடைத்தாக வைத்து உருவகஞ் செய்வது. (காரி. மாற. 120) |
| இரங்கல் | ஆற்றாமை. (இளம். தொல். பொருள். 16) |
| இரங்கல் விலக்கு | இரக்கந் தோன்றக் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12) |
| இரட்டைக் கிளவி | இரட்டைக் கிளவி யென்றது மக்க ளிரட்டை விலங்கிரட்டை போல வேற்றுமை யுடையனவற்றையன்றி இலை யிரட்டையும் பூவிரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையன வற்றை. (சேனா. தொல். சொல். 48; நச். தொல். சொல். 48) |
| இரட்டைத் தொடை | ஓரடி முழுவதும் ஒரு சொல்லே வருதல். (இளம். தொல். செய். 87) |
| | ஒரு சொல்லே நான்கு சீருமாகி வரு மென்பது. (பேரா. தொல். பொருள். 403) |

**இரண்டடி எதுகை** — முன் இரண்டடியும் ஓர் எதுகைத் தொடையாய் வந்து பின் இரண்டடியும் மற்றொரு திறத்தான் (வருவது). (யாப். 37)

முதலிரண்டடியும் ஒரெதுகையாய்ப் பின்னிரண்டும் ஒரெதுகையாகி வருவது. (இளம். தொல். செய். 98)

**இரத்தல்** — குறையுடையார் செய்யும் செய்கை. (இறை. 5)

**இரத்தினத் திரயம்** — நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்பன. (நச். சீவ. 374)

**இரவு** — இரவாவது பிறர்மாட்டுச் சென்றிரந்து கோடல். (மணக். திருக். அதி. முன்.)

**இராக்கதம்** — (தலைமகள்) தன்னினும் தமரினும் பெறாது வலிந்து கொள்வது. (இறை. 1)

ஆடை மேலிடுதல், பூமேலிடுதல், கதவடைத்தல் முதலியவற்றால் வலிதிற் கோடல். (யாப். 96)

தலைமகள் தன்னினும் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது.
(இளம். தொல். பொருள். 89;
நச். தொல். பொருள். 92; நம்பி. 117)

**இருக்கை** — திரிதரவுடையனவும், திரிதரவில்லனவும் என இரு பகுதிய. அவற்றுள் திரிதரவுடையன; யானை, தேர், புரவி, பூனை முதலியன. திரிதர வில்லன ஒன்பது வகைப்படும். அவை: பதுமுகம். உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம், ஏகபாதம் என இவை.
அடி. சிலம்பு. 8:26)

**இரு சொல்** — ஒரு பொருளையே யுணர்த்தி நிற்கும் இரண்டு சொற்கள் தம்மில் பிரிதலின்றி நிற்பது. (நச். தொல். சொல். 460)

**இருத்தல்** — தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல். (இளம். தொல். பொருள். 16)

| | |
|---|---|
| இருபிறப்பாளர் | உபநயனத்துக்கு முன்பு ஒருபிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரு பிறப்பினையுமுடைய அந்தணர். (நச். திருமுரு. 182) |
| இருபிறப்பு | இருபிறப்பு என்பது உபநயனத்துக்கு முன்னும் பின்னும். (அரும். சிலம்பு. 23:67) |
| இருபெயரொட்டு | இரண்டு பெயர் ஒட்டி நிற்பது. அது சொல்லப் பிறிதுபொருள் விளங்கும். அது வருமாறு. பொற்றொடி என்பது. (இளம். தொல். சொல். 110) |
| | இரண்டு பெயர் தொக்கு ஒரு சொன்னீர்மைப்பட்டு மற்றொரு பொருள் தரு பெயராகி வருவது. தெய். தொல். சொல். 110) |
| இருமனம் | ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தே உடைய மனம். (பரிமே. திருக். 920) |
| இருமுதல் நிரல்நிறை | இரு திறமும் முதலே சொல்லுதல். (யாப். 95) |
| இருமுற்று இரட்டை | ஓரடி முற்றெதுகையாய் மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வருவது. (யாப். 51) |
| இருவகை நிலம் (மெய்ப்பாடு) | சுவைப் பொருளும் சுவைத்தோனுமென. (பேரா. தொல். பொருள். 249) |
| இல்பொருளுவமை | முன்பில்லாததொன்றை ஒன்றற்கு உவமையாக்கி உரைப்பது. (காரி. மாற. 101) |
| இல்லறம் | இல்லறமாவது இல்லின்கணிருந்து தான முதலியன செய்தல். (மணக். திருக். இயல் முன்னுரை) |
| | இல்லறமென்பது கற்புடை மனைவியோடு இல்லின்கண் இருந்து செய்யும் அறம். (அடி. சிலம்பு. 14:11) |
| | தன்னை யொழிந்த மூவர்க்கும், துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும், தேவர்க்கும், முனிவர்க்கும், விருந்தினர்க்கும், சுற்றத்தார்க்கும், பிறர்க்கும் |

| | |
|---|---|
| | துணையாதலும், வேள்வி செய்தலும், சிலங்காத்தல் முதலியனவும் அருளுமன்பும் உடையனாதலும் பிறவும். (அடி. சிலம்பு. 14:11) |
| | இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்றி நெறிக்கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடும் செய்யப் படுவது. (பரிமே. திருக். உரைப்பாயிரம்) |
| **இல்வாழ்க்கை** | இல்லின்கண் இருந்து வாழ்வார் வாழுந் திறன். (மணக். திருக். அதி. முன்.) |
| **இலக்கணப் போலி** | இலக்கணப் போலி அடிப்பாட்டிற் றிரிக்கப்படா; தாமேயாய் நிற்கும். (மயிலை. நன். 266) |
| | நிலைமொழி வருமொழிகள் முன் பின்னாக மாறி நிற்பன இலக்கணப் போலி. (சிவ. நன். 267) |
| | இலக்கணமுடையதன்றிப் படைப்புக் காலத்து இலக்கணமுடையதோடு ஒருங்கு படைக்கப்பட்டது போல வருவது இலக் கணப்போலி. (சிவ. நன். 267) |
| | இலக்கண மில்லையாயினும் இலக்கண முடையது போல் அடிப்பட்ட சான்றோ ராலே தொன்று தொட்டு வழங்கப்பட்டு வருவது. (ஆறு. நன். 267) |
| **இலக்கணமுடையது** | இலக்கண நெறியால் வருவது. (சிவ. நன். 267) |
| | இலக்கண நெறியான் வருவது. (ஆறு. நன். 267) |
| **இலக்கணை** | ஒரு பொருளினது இலக்கணத்தை மற் றொரு பொருட்குத் தந்து உரைப்பது. அது விட்ட இலக்கணை, விடாத இலக் கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும். (சிவ. நன். 269) |
| | பெயராக வினையாக நிற்குஞ் சொற்கள் தத்தம் பொருளை உணர்த்தாது, பொருளின் சம்பந்தப் பொருளையும் தாற்பரியப் பொருளையும் அறிவித்தல். (சுப்பி. பிரயோ. 47) |

| | |
|---|---|
| இலதை | நடுவிரலும் சுட்டு விரலும் கூடிநிமிரப் பெருவிரல் அவற்றின் கீழ்வரை சேர ஒழிந்த இரண்டு விரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3: 18) |
| இலயம் (நா) | கூத்தில் தாளவறுதியைத் தொடங்கிக் காலமைத்த கூத்து. (நச். சீவ. 682) |
| இலாபந்தராயம் | இலாபத்தை இடையிலே விலக்குவது. (நச். சீவ. 3081) |
| இலேசு | சிறுமையாகிய ஊதியம். (நச். சீவ. 770) |
| இழவு | உயிரானும் பொருளானும் இழத்தல். (இளம். தொல். பொருள். 249) |
| | தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத் தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலியவற்றையும் இழத்தல். (பேரா. தொல். பொருள். 253) |
| இழிந்த கிழத்தியர் | இழிந்தாராவார்; அந்தணர்க்கு அரச குலத்தினும் வணிக குலத்தினும் வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், வணிகர்க்கு வேளாண் குலத்திற் கொடுக்கப்பட்டாரும். (இளம். தொல். பொருள். 149) |
| இழிப்பு | இழிக்கத்தக்கன கண்டுழி நிகழ்வது. (இளம். தொல். பொருள். 245) |
| இழிவு | பிறர் தன்னை எளியன் ஆக்குதல். (இளம். தொல். பொருள். 249) |
| இழைபு | வல்லொற்று யாதும் தீண்டாது செய்யுளியலுடை யாரால் எழுத்தெண்ணி வகுக்கப் பட்ட குறளடி முதல் பதினேழ் நிலத்து ஐந்தடியும் முறையானே உடைத்தாய் ஓங்கிய சொற்களான் வருவது. (யாப். 95) |
| இளம்பிறை | சுட்டு பேடு மநாமிகை சிறுவிரல் ஒட்டியகம் வளைய வொசித்த பெருவிரல் விட்டு நீங்கும் விதியிற் றென்ப. (அடி. சிலம்பு. 3: 18) |

| | |
|---|---|
| இளமை | காமச்செவ்வி நிகழ்வதோர் காலம். (நச். தொல். சொல். 57) |
| இளமை தீர்திறம் | இளமை நீங்கிய திறத்தின் கண் நிகழ்வது. அது மூவகைப்படும். தலைமகன் முதியனாகித் தலைமகள் இளையளாதலும், தலைமகள் முதியளாகித் தலைமகன் இளையனாதலும், இவ்விருவரும் இளமைப்பருவம் நீங்கியவழி அறத்தின் மேல் மனம் நிகழ்தலன்றிக் காமத்தின் மேல் நிகழ்தலும் என. (இளம். தொல். பொருள். 54) |
| இளவேனில் | சித்திரைத் திங்களும் வைகாசித் திங்களும். (இளம். தொல். பொருள். 11) |
| இளிவரல் | இழிப்பிற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247) |
| | இழிபு. (பேரா. தொல். பொருள். 251) |
| இளிவு | பிறரால் இகழப்பட்டு எளியனாதல். (பேரா. தொல். பொருள். 253) |
| இறந்த காலம் | தொழிலது கழிவு. (சேனா. தொல். சொல். 200; நச். தொல். சொல். 202) |
| இறுதிநிலை அளபெடைத் தொடை | முதல் நின்ற சீரின் இறுதி எழுத்து அளபெடுத்து ஒன்றிவரத் தொடுப்பது. (யாப். 41) |
| இறுதி விளக்கு | இறுதிநின்ற பொருள் இடையு முதலு நோக்குதல். (இளம். தொல். பொருள். 656) |
| இறுமாத்தல் | தாழாத உள்ளத்தராய்ச் செம்மாத்தல். (பேரா. திரு. 16: 49) |
| இறை | இறையெனப்படுவார் தந்தையரும் ஆசிரியரும் அரசரும் முதலாயினார். (பேரா. தொல். பொருள். 256) |
| இறைச்சி | கருப்பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது. (இளம். தொல். பொருள் 225) |

இறைச்சிப் பொருள் பிறிதுமோர் பொருள் கொளக் கிடப்பனவுங் கிடவாதனவும் என இருவகைப்படும்.
(இளம். தொல். பொருள். 226)

செய்யுளுள் உரைக்கப்படுகின்ற பொருட் புறத்தாகிய கருப்பொருள்.
(தெய். தொல். சொல். 189)

**இன்சொல்** — கேள்வியினும் வினையினும் இனியவாய சொல். (பரிமே. திருக். 387)

**இன்சொலுவமை** — பொருளினும் உவமைக்கு ஒரு மிகுதி தோன்றக் கூறி உவமித்து, இன்ன மிகுதி யுடையத்தெனினும் ஒப்பதன்றிச் சிறந்த தன்றென்பது. (பழை. தண்டி. பொரு. 5)

பொருளினு முவமைக்கோர் மிகுதி தோன்றக் கூறி உவமேயத்தினு மிகுதியுள வேனு மொப்பதன்றிச் சிறந்ததன்றென் பது. (காரி. மாற. 101)

**இன்பக்கடல்** — புணர்ச்சி யிறுதிக்கண் அவசத்தால் முலை யிடத் துயிலு ந் துயில். (நச். சீவ. 841)

**இன்பம்** — ஒருவனும் ஒருத்தியும் நுகரும் காமத் திற்குக் குலனும் குணனும் செல்வமும் ஒழுக்கமும் இளமையும் அன்பும் ஒருங்கு உளவழி இன்பம் உளதாம்.
(இளம். தொல். பொருள். 1)

பலவகை உயிர்கட்கும் வரும் இன்பம் இரு வகைப்படும். அவையாவன போகம் நுகர் தலும் வீடு பெறுதலும் என. அவற்றுள் வீடுபேறு துறவறத்தில் நின்றார்க்கல்லது எய்தல் அரிதாயிற்று. போக நுகர்தல் மனையறத்தார்க்கு எய்துவது.
(இளம். தொல். பொருள். 89)

**இன்புறல்** — நட்டராகிப் பிரிந்து வந்தோரைக் கண்ட வழி வருவதோர் மன நிகழ்ச்சி போல்வது.
(இளம். தொல். பொருள். 256)

**இன்னா செய்யாமை** — தமக்கு இன்னாதவற்றைப் பிறர்க்குச் செய்யாமை. (மணக். திருக். அதி. முன்.)

அஃதாவது தனக்கு ஒருபயன் நோக்கி யாதல், செற்றம் பற்றியாதல், சோர்வா னாதல் ஓர் உயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. (பரிமே. திருக். அதி. 32)

**இன்னிசையளபெடை** இசை நிறைக்க வரும் அளபெடையாவது குற்றெழுத்து நெட்டெழுத்தாக நீண்டு இன்னிசை நிறைத்தற் பொருட்டு அள பெடுப்பது. (ஆறு. நன். 91)

**இன்னிசை வெண்பா** இரண்டாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும், மூன்றாமடியின் இறுதி தனிச்சொல் பெற்று இரண்டு விகற்பத்தான் வருவன வும், பல விகற்பாகி அடிதோறும் ஒரூஉத் தொடை பெற்று வருவனவும், பிறவாற் றானும் நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட்டு நான்கடியான் வருவனவும் இன்னிசை வெண்பா எனப்படும். (யாப். கா. 26)

**இன்னியல் வஞ்சிப்பா** வேற்றடி விரவாத வஞ்சிப்பாக்கள் இன்னியல் வஞ்சிப்பா எனப்படும். (யாப். 90)

**இனக்குறள் வெண்பா** மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐந்து தொடை யானும் வருவது. (யாப். 59)

**இனஞ்சுட்டல்** இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல். (சேனா. தொல். சொல். 18)

**இனம்** ஒரு சாதிக்கண் அணைந்த சாதி இன மெனப்படும். (சேனா. தொல். சொல். 53)

ஒருவாற்றான் ஒத்தலும் ஒருவாற்றான் வேறாதலும் உடைமை பற்றியன்றே இனம் வழங்கப்படுவது. (சிவ. நன். 73; சிவ. தொல். சூ. ப. 33)

**இனமோனை** இனமோனை மூன்று வகைப்படும். வல்லின மோனையும் மெல்லின மோனையும் இடையின மோனையும். (யாப். 37)

| | |
|---|---|
| இனியவை கூறல் | கேட்டார்க்கு மனமகிழும் சொற்களைக் கூறுதல். (மணக். திருக். அதி. முன்.) |
| | மனத்தின்கண் உவகையை வெளிப்படுப் பனவாகிய இனிய சொற்களைச் சொல்லு தல். (பரிமே. திருக். அதி. 10) |

ஈ

| | |
|---|---|
| ஈகை | இல்லென இரந்து வந்தார் யாவருக்கும் வரையாது கொடுத்தல். (மணக். திருக். அதி. முன்.) |
| | வறியராய் ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். (பரிமே. திருக். அதி. 23) |
| ஈசுரசுங்கேதம் | சொல் இறைவனுடைய நியமத்தால் பொருள் உணர்த்துவது. (கோபா. பிரயோ. 18) |
| ஈதல் | இல்லென இரந்தோர்க்குக் கொடுத்தல். (இளம். தொல். பொருள். 74) |
| ஈமம் | பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு. (பழை. புறம். 231) |
| ஈவோர் | கற்கப்படுவோருங் கற்கப்படாதோரு மென விருவகையர். (நச். தொல். பாயிரம்.) |
| ஈற்றசை | சொல்லின் இறுதிக்கண் அசைநிலையாகி நிற்பது. (தெய். தொல். சொல். 252) |

உ

| | |
|---|---|
| உடம்படுமெய் | உடம்படு மெய்யாவன யகரமும் வகரமும் எனக் கொள்க. இகரவீறும் ஈகாரவீறும் ஐகாரவீறும் யகரஉடம்படுமெய் கொள் வன. அல்லனவெல்லாம் வகர உடம்படு மெய் கொள்வன. ஒன்றென முடித்தல் என்பதனான் விகாரப்பட்ட மொழிக் கண்ணும் உடம்படுமெய் கொள்க. (இளம். தொல். எழுத். 141) |
| | உயிரீற்றின் முன் உயிர்முதல்வரின் உயிரோடு உயிர்க்கு மயக்கமின்மையின் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்கும். |

ஆதலின் உடம்படாத அவ்விரண்டும் உடன்படுதற்பொருட்டு இடையே வரும் மெய் உடம்படுமெய்யாகும்.
(சிவ. நன். 162)

உடம்படுமெய் யென்பது நிலைமொழி யீற்றினும் வருமொழி முதலினும் நின்ற உயிர்களை உடம்படுத்தும் மெய். உடம் படுத்தலெனினும் உடன்படுத்தலெனினும் ஒக்கும். வருமுயிருக்கு உடம்பாக அடுக்கும் மெய்யெனினும் பொருந்தும்.
(ஆறு. நன். 162)

**உடம்பின் தன்மை** — உடம்பிற்கு மூன்றரை கோடி மயிர் உளவாகலின். (நச். சீவ. 309)

**உடம்பு** — உடம்பு என்றது பொதுவகையான் உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப் படும். (பரிமே. திருக். 345)

மனம் புத்தி ஆங்காரமும் பூத தன்மாத் திரையுமாகி வினையினாற் கட்டப்பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்ப தோர் நுண்ணிய உடம்பு.
(தெய். தொல். சொல். 55)

**உடல் அளவு** — சரீரத்தளவு தன்கையால் தொண்ணூற் றாறு அங்குலம். (அடி. சிலம்பு. 3:26)

**உடன்படல் விலக்கு** — உடன்பட்டார் போல விலக்குவது.
(பழை. தண்டி. பொரு. 12)

**உடனிகழ்ச்சிப் பொருள்** — வினை கொண்டு முடியும் பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ் வதாகவுடைய பொருளாம்.
(ஆறு. நன். 297)

உடனிகழ்ச்சிப் பொருள் தலைமைப் பொருளும் தலைமையிற் பொருளுமென இருவகைப்படும். அவற்றுள் தலைமைப் பொருளாவது வினை கொண்டு முடியும் பொருளின் உயர்வுடையது. தலைமையிற் பொருளாவது வினை கொண்டு முடியும் பொருளின் இழிவுடையது.
(ஆறு. நன். 297)

**உடனிலைச் சிலேடை** ஒரு பாட்டு இரண்டு வகையாற் பொருள் கொண்டு நிற்பது. (பேரா. திரு. 1:1)

**உடனுறை உவமம்** உடனுறைவ தொன்றைச் சொல்ல அதனானே பிறிது பொருள் விளங்குவது. (இளம். தொல். பொருள். 238)

**உடைமை** யாதானுமொரு பொருளை உடையனாதல். (இளம். தொல். பொருள். 256)
செல்வம். (பேரா. தொல். பொருள். 260)
உடைமையாவது உடைமைத் தன்மையும் உடைமைப் பொருளுமென இருவகைப் படும். (நச். தொல். சொல். 215)

**உடைமைத் தன்மை** தன் செல்வத்தை நினைந்தின்புறுவதற் கேதுவாகிய பற்றுள்ளம்.
(நச். தொல். சொல். 215)

**உடைமைப் பொருள்** ஒன்றற்கு ஒன்றுரிமை செய்து நிற்பது. அஃது இப்பொருளினுடையது இப்பொருளென்றும், இப்பொருள் இப்பொருளினுடையதாயிருந்த தென்றும், இப்பொருளையுடையதாயிருந்தது இப்பொருளென்றும் மூவகைப்படும்.
(நச். தொல். சொல். 215)

**உண்மை** ஒரு பொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடு இன்றித் தானொன்றேயாய்ப் பலவகைப் பட்ட பொருள் தோறும் நிற்பது.
(சிவ. நன். 321)

**உண்மை இன்பம்** மனம் பொருந்தியவழிப் பரத்தையர் மாட்டும் இன்பம் உளதாகும். மனம் பொருந்தாதவழி மனைவியர் மாட்டும் இன்பம் இன்றாம்.
(இளம். தொல். பொருள். 219)

**உண்மை யுவமை** உவமையைக் கூறி மறுத்துப் பொருளினையே கூறி முடிப்பது.
(பழை. தண்டி. பொரு. 5)

**உணர்வு** அறிவு. (இளம். தொல். பொருள். 90)
அறிவுடைமை, அஃதாவது உலகியலாற் செய்யத்தகுவது அறிதல்.
(பேரா. தொல். பொருள். 273)

| | |
|---|---|
| | மதி ஞானாவரணீயம், சுருதஞானாவரணீயம், அவதி ஞானாவரணீயம், மனப்பரியய ஞானாவரணீயம், கேவல ஞானாவரணீயம் என ஐவகைப்படும். (நச். சீவ. 3081) |
| **உணவு (வகை)** | பயறும் உழுந்தும் கடுகும் கடலையும் எள்ளும் கொள்ளும் அவரையும் துவரையுமாம். (பேரா. தொல். பொருள். 633) (பார்க்க: எண்பதன், கூலம்) |
| **உத்தமத் தோற் கருவிகள்** | மத்தளம், தண்ணுமை, இடக்கை, சல்லிகையென்பன. (அடி. சிலம்பு. 14 : 151) |
| **உத்தமர்** | உத்தமராவார் கழிய நெடுமையும் கழியக் குறுமையும் இல்லோர். (அடி. சிலம்பு. 3 : 100) |
| **உத்தாரமடங்கம் (நா)** | உத்தாரமடங்கமாவது மக்கள் பலரைத் தலைவராகப் பெரும் பொல்லாத பேருடைத்தாய்ப் பெண்களாலாற்றப் பட்டுச் சந்தியைந்துமுடையது. (வீர. 104) |
| **உத்தி** | உத்தி யென்பது வடமொழிச் சிதைவு. அது சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது. (இளம். தொல். பொருள். 656) |
| **உதானன்** | உதானன் கண்டத்தானத்தில் நிற்கும். (அடி. சிலம்பு. 3:26) |
| **உந்தி** | யாழகத்து ஒருறுப்பு. (நச். மலை. 34) |
| **உபசர்க்கம்** | பெயர் வினைகளின்முன் பொருள் வேறுபடுத்தும் வேறுபடுத்தாதும் வரும் இடைஉரிச்சொற்கள். (கோபா. பிரயோ. 45) |
| **உபயாங்கம் (இ)** | இரண்டிற்கும் (கீதம், நிருத்தம்) வாசிப்பது. (அடி. சிலம்பு. 3 : 14) |
| **உபயானுகம் (இ)** | இரண்டுக்கும் (கீதம், நிருத்தம்) வாசித்தல். (அரும். சிலம்பு. 3 : 14) |
| **உபயோகாந்தராயம்** | அனுபவிக்கும் பொருள்களை விலக்குவது. (நச். சீவ. 3081) |

**உபலக்கணம்** மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல். (கோபா. பிரயோ. 5)

**உபாயம்** முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று. அவை: கேள்வி, விமரிசனம், பாவனை என்பன. (பரிமே. திருக். 357)

**உபாய விலக்கு** விலக்குவதனை ஒருபாயம் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**உம்மையெச்சம்** உம்மை கொடுக்க வேண்டும் வழி அஃது எஞ்சி நிற்றல்.
(தெய். தொல். சொல். 422)

**உய்த்துணர் நிரல்நிறை** உய்த்துணர் நிரல்நிறையாவது உய்த்துணரவைப்பது. (யாப். 95)

**உய்யானம்** அரசர் விளையாடும் காவல் சோலை.
(அடி. சிலம்பு. 14: 127)

**உயர்ந்தோர்** உயர்ந்தோராவார் பார்ப்பாரும் அரசருமே (ஆவர்) (இறை. 36)

(அந்தணர்) ஒழுக்கத்தானும் குணத்தானும் செல்வத்தானும் ஏனையரினும் உயர்புடையராதலின் உயர்ந்தோர்.
(இளம். தொல். பொருள். 28)

உயர்ந்தோர் என்றவழிக் குலத்தினால் உயர்ந்தாரையும் காட்டும், கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும், செல்வத்தான் உயர்ந்தாரையும் காட்டும்.
(இளம். தொல். பொருள். 3)

உயர்ந்தோரெனப்படுவார் அந்தணரும் அவர் போலும் அறிவுடையோரும்.
(பேரா. தொல். பொருள். 647)

**உயிர்ப்பு** வேண்டிய பொருளைப் பெறாவழிக் கையறவெய்திய கருத்து.
(பேரா. தொல். பொருள். 260)

**உயிர் மோனை** முதலெழுத்தாகி வந்து உயிரெழுத்து மற்றையடியினும் வருவது.
(இளம். தொல். பொருள் 407)

**உரிச்சொல்** இடைச்சொல்லே போல உரிச்சொல்லும் தாமாக நில்லா. பெயரும் வினையும்

அடைந்து பொருள் வேறுபடுதலுமுடைய.
(இளம். தொல். சொல். 448)

இசை குறிப்பு பண்பென்னும் பொருட்குத் தாமே யுரியவாதலின் உரிச்சொல்லா யிற்று... பெரும்பான்மையும் செய்யுட்கே உரியவாய் வருதலின் உரிச்சொல்லா யிற்று என்பாரும் உளர்.
(சேனா. தொல். சொல். 297)

உரிய சொல் யாது அஃது உரிச்சொல்.
(மயிலை. நன். 441)

பெயரையும் வினையையும் சார்ந்து பொருட் குணத்தை விளக்குவது
(நச். தொல். சொல். 299)

ஒரு வாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்குத் தானும் உரித்தாகி வருவது.
(தெய். தொல். சொல். 292)

குணப்பண்புந் தொழிற் பண்புமாகிய பொருட் பண்பை யுணர்த்துஞ் சொல் உரிச்சொல். (சிவ. தொல். சூ. ப. 51)

செய்யுட்கு உரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டன ஆதலின் இவற்றிற்கு உரிச்சொல் என்பது காரணக்குறி.
(சிவ. நன். 442)

உரிச்சொல் ஆவது பொருளும் தானும் பேதம் இன்றி அபேதம் ஆதற்குரிய சொல். (சுப்பி. பிரயோ. 18)

**உரிப்பொருள்** திணைக்கு உரியபொருள். அவை யாவை யோஎனின் புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் அவற்றின் நிமித்தமும் எனஇவை. (இறை. 1)

மக்கட்கு உரியபொருள். அஃது அகம் புறம் என இருவகைப்படும்.
(இளம். தொல். அகத். முன்.)

**உரு** உரு என்பது உட்கு; அது பயிலாத பொருளைக் கண்டுழி வருவதோர் மன

| | |
|---|---|
| | நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 243) உருவாவது உட்கு. (நச். தொல். பொருள். 247) |
| உருத்திரம் | அவமதிப்பாற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 245) |
| உருபு புணர்ச்சி | வேற்றுமையுருபு வெளிப்பட்டு நிற்பப் புணரும் புணர்ச்சி. (ஆறு. நன். 238) |
| உருபு மயக்கம் | தன் பொருளில் தீர்ந்து செல்லும் உருபு மயக்கம். (நச். தொல். சொல். 85) தன் பொருளில் தீர்ந்து பிறிது ஓர் உருபின் பொருட்டாதல். (சுப்பி. பிரயோ. 15) |
| உருவகம் | ஒருசாராசிரியர் ரூபகம் சொல்லப்பட்டது உவமைபற்றி வருதலின் இஃது உவமை யின் பாகுபாடு. (இளம். தொல். பொருள். 280) |
| உருவகவுருவகம் | ஒன்றனை உருவகஞ் செய்து அதனையே பெயர்த்தும் பிறிதொன்றாக உருவகஞ் செய்வது. (பழை. தண்டி. பொரு. 10) ஒன்றனை முதலே உருவகஞ் செய்து அதனைப் பெயர்த்தும் உருவகஞ்செய்தல். (காரி. மாற. 120) |
| உருவு | உருவு என்பது வனப்பு. (இளம். தொல். பொருள். 90) |
| உருவு நிறுத்த காம வாயில் | பெண்மை வடிவும் ஆண்மை வடிவும் பிறழ்ச்சியின்றி அமைந்தவழி அவற்றுமேல் நிகழும் இன்பத்திற்கு வாயிலாகிய அன்பு. (பேரா. தொல். பொருள். 272) |
| உருளாயம் | தம்மை நுகர்வார் மனங்கட்கேற்பப் புரளும் ஆயம். (நச். சீவ. 2873) |
| உரைப்பாட்டு மடை | உரையாகிய பாட்டை இடைமடுத்தது. (அரும். சிலம்பு. 17:8) |
| உரையசை | சிறிது பொருளுணர்த்துவன உரையசை. (நச். சொல். 279) |
| உல்கு | சுங்கம். (நச். பெரு. 81) |
| உலக உண்மை | அடைந்தார் பிழைப்பின் தலையாயினார் பிழையை யுட்கொண்டமைதலும், இடை |

யாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக் கெடுத்தலும் உலகத்து உண்மை. (பேரா. திரு. 7:3)

உலக நடை — உலகநடை, வேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யும் தன்மை.
(பரிமே. திருக். அதி. 22)

உலகப்பொருள் — உயிர்ப்பொருள், உயிரில் பொருள், இயங்கியற் பொருள், நிலையியற் பொருள், காட்சிப் பொருள், கருத்துப் பொருள், முதற்பொருள், சினைப் பொருள், இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள், வழக்குப் பொருள், செய்யுட் பொருள் (என்பன). (மயிலை. நன். 258)

உலகம் — உலகமென்றது உலகினையும் உலகினுட் பொருளையும். உலகமாவது முத்தும் மணியும் கலந்தாற்போல நிலம் நீர் வளி ஆகாயம் என விரவி நிற்கும். உலகினுட் பொருள் பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி ஒன்றானாற் போல வேற்றுமைப்படாது நிற்கும்.
(இளம். தொல். பொருள். 635)

உலகம் என்பது பலபொருள் ஒரு சொல்.
(நச். தொல். பாயிரம்.)

உலகமென்பது பலபொருள் ஒரு சொல்லாய் நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்தி நிற்கும்.
(நச். திருமுரு. 1)

உலகம் என்பது மேலும் கீழும் நடுவுமாகி எல்லா உயிரும் தோற்றுதற்கு இடமாகிய பொருள். (தெய். தொல். சொல். 55)

உலகம் மூன்று — நாகலோகம், பூலோகம், சுவர்க்கலோகம்
(நச். சீவ. 2813)

உலகவழக்கு — சூத்திரயாப்புப் போல மிகைச்சொற்படாமைச் சொல்லப்படுவதொன்றன்றி மேற்றொட்டுங் கேட்பார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவது.
(சேனா. தொல். சொல். 416)

**உலகியலறிவு** — தான் உலகியலை வெளியார் சொல்லா மையறிதல். (மணக். திருக். 772)

**உலகோரியல்பு** — உலகத்து ஒரு பொருள் முடியாதெனக் கவன்று நின்றார் முடிப்பதோர் உபாயங் கண்ட ஞான்று அப்பொருள் எய்தினாரே போல மகிழ்ப. (இறை. 9)

**உவகை** — நன்மை வரும் என்று மகிழ்தல். (இளம். தொல். பொருள். 88)

சிங்காரத்திற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247)

காம முதலிய மகிழ்ச்சி. (பேரா. தொல். பொருள். 251)

**உவமப்போலி** — உவமப்போலி ஐந்து வகைப்படும். அவை யாவன இதற்குவமை யில்லை எனவும், இதற்கிது தானே உவமை எனவும், பல பொருளினது முளதாகிய உறுப்புக்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டு சேர்த்தின் இதற்குவமையாம் எனவும், பல பொருளி னுமுளதாகிய கவின் ஓரிடத்துவரின் இதற் குவமையாம் எனவும், கூடாப்பொரு ளோடு உவமித்து வருவனவும். (இளம். தொல். பொருள். 295)

**உவம உருபு** — உவம உருபு ஒப்பில் வழியாற் செய்யும் இடைச் சொல்லாகலான் வினையும் வினைக்குறிப்பும் பற்றி வரும். (சேனா. தொல். சொல். 414)

**உவமம்** — உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது. (இளம். தொல். பொருள். 238)

ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல். (பேரா. தொல். பொருள். 276)

**உவமம் (பயன்)** — புலன் அல்லாதன புலனாதலும் அலங்கார மாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும். (இளம். தொல். உவமவியல். முன்னுரை)

**உவமை** — தொழிலான் ஆதல், பயனான் ஆதல், வடிவினான் ஆதல், வண்ணத்தினான்

| | |
|---|---|
| | ஆதல், இது போலும் இது என ஒன்றோ டொன்று உவமை கூற வருவது. (தெய். தொல். சொல். 407) |
| | சிறிதொத்து இரண்டிற்கும் வேறுபாடு ணர்த்துவது. (நச். சீவ. 1722) |
| உவமைத்தொகை | உவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டிசைத்து நில்லாது செறிய நிற்பது உவமைத் தொகையாம். (தெய். தொல். சொல். 407) |
| உவர்ப்பு | வெறுப்பு; அஃதாவது பொருள்கண்மேற் சென்ற பற்றுள்ளத்தை விடுதல். (நச். சீவ. 2987) |
| உள்வரி | வேற்றுருக்கொண்டு நடித்தல். (அடி. சிலம்பு. 8:89) |
| உள்ளல் | வருத்தக் குறிப்பான் உள்ளுதலும் வருத்தக் குறிப்பின்றி உள்ளுதலும் என இருவகைய. (நச். தொல். சொல். 340) |
| உள்ளுறை | பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்ப தொன்று; அது கருப்பொருள் பற்றி வரும். (இளம். தொல். பொருள். 238) |
| உற்சுங்கம் (நா) | ஒருகை பிறக்கையாகக் கொண்டு ஒருகை அராளமாக்கி இரண்டு கையும் மணிக் கட்டில் ஏற்றி வைப்பது. (அடி. சிலம்பு. 3:18) |
| உறழ்பொருள் | ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது. (சேனா. தொல். சொல். 16) |
| உறுப்பழி செய்யுள் | செவியறிவுறூஉவாய் வஞ்சியடியால் வந்து பொருள் உறுப்பு அழிவது. (யாப். 93) |
| உறுப்பறை | அங்கம் முதலாயினவற்றை அறுத்தல். (இளம். தொல். பொருள். 254) |
| | கை குறைத்தலும் கண் குறைத்தலும் முதலாயின. (பேரா. தொல். பொருள், 258) |
| உறுப்பின் அகவல் | ஒரு பொருள் மேல் பரந்திசைப்பன. (யாப். 77) |

**உன்னம் (நா)** சிறுவிரலும் பெருவிரலும் தம்முட் கட ஒழிந்த மூன்று விரலும் விட்டு நிமிர்வது. (அடி. சிலம்பு. 3:18)

**ஊ**

**ஊக்கம்** உலகத்தார்க்குப் பண்பின் வழியே ஊக்கம் நிகழும். (இறை. 5)

வினை செய்தற்கண் மன எழுச்சி. (பரிமே. திருக். 382)

**ஊக்கம் உடைமை** (செயலைச்) செய்யுமிடத்துக் காலத்து அருமையை ஓராது இவ்வாறு செய்யக் கடவேனென்று கருதுங் கருத்துடைமை. (மணக். திருக். அதி. முன்.)

மனம் மெலிதலின்றி வினை செய்தற்கண் கிளர்ச்சி உடைத்தாதல். (பரிமே. திருக். அதி. 60)

**ஊடல்** உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பு மொழி யான்றிக் கூற்று மொழியானுரைப்பது. (பேரா. தொல். பொருள். 499; நச். தொல். செய். 187)

**ஊடல் தோன்றுதல்** தலைமகள் மாட்டு ஊடல் தோன்று மிடத்து மூன்று வகையான் ஊடல் தோன்றும். செய்தான் கொல்லோ எனவும், செய்யாநின்றான் கொல்லோ எனவும், செய்வான் கொல்லோ எனவும். (இறை. 50)

**ஊடலளித்தல்** எண்ணில் காமம் எரிப்பினும் மேற் செலாப் பெண்மையும் நாணும் அழிந்து வந்து குறையுற்றுக் கூடுந் துணையும் நீயிர் பிரிவாற்றியிருந்தீர் அன்பிலீரென ஊடுவது. (அடி. சிலம்பு. 6:110)

**ஊழ்** முன்பு செய்த வினை பின்பு விளையும் முறை. (மணக். திருக். அதி. முன்.)

இருவினைப்பயன் செய்தவனையே சென் றடைதற்கு ஏதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருள் கிளவி. (பரிமே. திருக். அதி. 38)

எ

| | |
|---|---|
| எச்சச்சொல் | எஞ்சி நிற்பதோர் பொருளையுடைய சொல்லெனவே எச்சச்சொல் என்று பெயராயிற்று. (நச். தொல். சொல். 230) |
| எச்சப் பொருண்மை | மூன்றிடத்திற்கும் ஐந்து பாற்கும் பொது வாகிய வினை நிகழ்ச்சி. (சேனா. தொல். சொல். 457) |
| எச்சம் | பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்ற லாற்றா வினைச்சொல் எச்சமாம். (சேனா. தொல். சொல். 235) |
| எஞ்சுபொருட்கிளவி | சொல்லாதொழிந்த பொருளை இனிது விளக்கும் சொல். (தெய். தொல். சொல். 422) |
| எடுத்துக்கோள்வரி (நா) | எடுத்துக்கோள்வரி என்பது தான் கையற வெய்தி வீழ்ந்தாளாக வீழ்ந்து பிறர் எடுத்துக் கொள்ளும்படி நடித்தல். (அடி. சிலம்பு. 8:108) |
| எண் | எண் இரண்டு வகைய; கணிதமும் கரணமும் என. (யாப். 96)<br>எண் என்பது கணிதம். அது கருவியும் செய்கையும் என இருவகைப்படும். (பரிமே. திருக். 392) |
| எண் (யாப்பு) | எண் என்பது ஈரடியாற் பலவாகியும் ஓரடியாற் பலவாகியும் வருதல். (இளம். தொல். செய். 117) |
| எண்குணங்கள் | தன்வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங் களின் நீங்குதல், பொருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பு இல் இன்பம் உடைமை என இவை. (பரிமே. திருக். 9) |
| எண்குணம் | எண்குணமென்றது : அநந்தஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம், அநந்த நாமம், நிட்களம், நிரா யுஷ்யம், சற்பாவனை என இவை. (அரும். சிலம்பு. 10:188) |

| | |
|---|---|
| **எண்ணுப்புணர்ச்சி** | மிக்க எண்ணொடு குறைந்த எண் வருங்கால் உம்மைத் தொகையாகவும், குறைந்த எண்ணொடு மிக்கதுவரின் பண்புத் தொகையாகவும் கொள்ளப்படும். (இளம். தொல். எழுத்து. 480) |
| **எண்பதன்** | நெல், வரகு, சாமை, தினை, இறுங்கு, கேழ்வரகு, கொள், உழுந்து என்பன. (சாமு. புறப். 346) |
| **எண்பேராயம்** | கரணத் தியலவர் கரும காரர்<br>கனகச் சுற்றங் கடைகாப் பாளர்<br>நகர மாந்தர் நளிபடைத் தலைவர்<br>யானை வீர ரிவுளி மறவர்<br>இனைய ரெண்பே ராய மென்ப.<br>(அடி. சிலம்பு. 5:157) |
| **எண்வகைமணம்** | பிரமமணம், விதிமணம், ஆரிடமணம், தெய்வமணம், அசுரமணம், இராக்கத மணம், பைசாசமணம், கந்திருவமணம் என்பன. (யாப். 96) |
| **எதிர்காலம்** | தொழில் பிறவாமை. (சேனா. தொல். சொல். 200; நச். தொல். சொல். 202) |
| **எதிர்நூல்** | எதிர்நூல் என்பதும் ஒன்று உண்டு. அது யாதோ எனின் முதனூலின் முடிந்த பொருளை யாதானும் ஒரு காரணத்தால் பிறழ வைத்தல். அதனைக் கருவியால் திரிவுகாட்டி ஒருவாமை வைத்தற்கு ஒள்ளியான் ஒரு புலவனால் உரைக்கப்படுவது. (இறை. 1; யாப். பாயிரம்.)<br><br>எதிர்நூல் என்பதும் ஒன்றுண்டு. அதுவும் ஒரு முனைவனால் செய்யப்படின் முதனூலாம். பிறர் செய்யின் வழங்காது. (இளம். தொல். பொருள். 639) |
| **எதிர்மறை** | தன்னால் சொல்லப்பட்ட பொருளின் மாறுபட்டு வருவது. (தெய். தொல். சொல். 252)<br><br>யாதானும் ஒரு தொழிலை எதிர்மறுத்துத் தொழிற்கண் வரும். (தெய். தொல். சொல். 251) |

| | |
|---|---|
| **எதிர்மறையெச்சம்** | ஒரு பொருளைக் கூறியவழி அதனின் மாறுபட்ட பொருண்மையும் அதனானே உரை நிற்பது. (தெய். தொல். சொல். 422) |
| **எதுகை இயைபு** | எதுகையாய் வந்து இறுவாய் ஒப்பது. (யாப். 40) |
| **எயில் மூன்று** | உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம். (நச். சீவ. 2813) |
| **எயிறு (பாம்பு)** | காளி, காளாத்திரி, யமன், யமதூதியென நான்காம். (நச். திருமுரு. 148) |
| **எருத்து** | எருத்தென்பது இரண்டடி இழிபாகப் பத்தடி பெருமையாக வருவதோருறுப்பு. பாட்டிற்கு முகம் தரவாதலானும் கால் சுரிதகமாதலானும் இடைநிலைப் பாட்டாகிய தாழிசையும் கொச்சகமும் அராகமும் கொள்ளக் கிடத்தலின் எருத்தென்பது கழுத்தின் புறத்திற்குப் பெயராக வேண்டுமாதலான் அவ்வுறுப்புத் தரவைச் சார்ந்து கிடத்தல் வேண்டும். (இளம். தொல். செய். 117)<br>எருத்து என்பது தரவு. (பேரா. தொல். பொருள். 433) |
| **எருவை** | தலை வெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகெனினும் அமையும். (பழை. புறம். 64) |
| **எல்லாம்** | எல்லாம் என்பது முழுதுமென்னும் பொருள்பட நிற்பதோர் உரிச்சொல். (பேரா. திருமுரு. 24:20) |
| **எல்லைப் பொருள்** | அறியப்படாத பொருளினது திசையளவு, வழியளவு, காலவளவு, பண்பு முதலியவற்றைக் குறிப்பதற்கு எல்லையாக நிற்கும் பொருளாகும். (ஆறு. நன். 299) |
| **எழில்** | எழில் என்பது அழகு. அது மிக்கும் குறைந்தும் நீடியும் குறுகியும் நேர்தி உயர்ந்தும் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைந்தவழி வருவதோர் அழகு. (இளம். தொல். பொருள். 243) |

வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்.
(நச். தொல். பொருள். 247)

**எழுகூற்றிருக்கை** ஏழு அறையாக்கி முறையானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் பேர்ந்தும் விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது. (யாப். 196)

ஏழுவரி மூன்றறை முதல் ஒன்றற்கொன்று இரண்டறை மேற்பட முறையாகக் கூறி முறையே மக்கள் போக்கும் போந்து மீளவும் ஆடும் பெற்றியின் வழுவாமல் ஒன்று முதலாகப் பாடுவது. (வீர. 179)

**எழுத்தானந்தம்** பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்து அளபெழப் பாடுவது. (யாப். 196)

**எழுத்து** எழுத்து நான்கு வகைய. உருவெழுத்தும், உணர்வெழுத்தும், ஒலியெழுத்தும், தன்மையெழுத்தும் என. (யாப் 96)

சொல்லிற்கங்கமாகிய எழுத்து...வன்மை மென்மை கூறப்படுதலின் எழுத்து அருவன்றி உருவாதல் பெறப்பட்டது.
(இளம். தொல். எழுத்து. 20)

போக பூமியான காலத்து எழுத்து இன்றிக் கன்ம பூமியான காலத்து எழுத்துத் தோன்றின. (நேமி. 25)

எழுத்து சொல்லிற்கு அவயவம். எழுத்து என்றது யாதனையெனின் கட்புலனாகா வுருவுங் கட்புலனாகிய வடிவுமுடையவாய் வேறுவேறு வகுத்துக் கொண்டு தன்னையே உணர்த்தியும் சொற்கியைந்து நிற்கு மோசையையாம். (நச். தொல். பாயிரம்)

எழுத்து, இயற்றமிழ், சத்த நூலென்பன ஒரு பொருட்கிளவி.
(சிவ. தொல். சூ. ப. 21)

**எழுத்து (உரு)** செறிப்பச் சேறலானும், செறிப்ப வருதலானும், இடையெறியப்படுதலானும்,

செவிக்கட் சென்றுறுதலானும், இன்பத் துன்பத்தை யாக்குதலானும், உருவும் உருவுங்கூடிப் பிறத்தலானும் தலையு மிடறு நெஞ்சு மென்னும் மூன்றிடத்து நிலை பெற்றுப் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறக்கு மென்றமையானும் உருவேயாம். (நச். தொல். எழுத்து. 1)

**எழுத்து ஈறாவன** இருபத்து நான்கு எழுத்து ஈறாவன; பன்னிரண்டு உயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக் குற்றியலுகரமும் என இவை. (இளம். தொல். எழுத்து. 104)

**எழுத்து முதலாவன** இருபத்திரண்டு எழுத்து முதலாவன பன்னிரண்டு உயிரும் ஒன்பது உயிர் மெய்யும் மொழி முதற் குற்றியலுகரமும் என இவை. (இளம். தொல். எழுத்து. 104)

**எழுத்து வருத்தனம்** ஒரெழுத்து முதலாக ஒன்றுதலைச் சிறந்து ஏறிய எழுத்துக்களால் முறையே பொருள் பயக்கச் சொல்வது. (யாப். 96)

முன்னம் ஒரு சொல்லேயாய்ப் பின்னை முறையானே ஒரோ எழுத்து ஏறச் சொல்லப்பாடுவது. (யாப். 96)

ஒரெழுத்தானொரு மொழியாய்ப் பொருள் பயந்து பின் ஒற்றெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருள் பயந்து அவ்வாறே முறை முறையானேற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள் பயப்பது. (பழை. தண்டி. சொல். 7)

**எழுத்து வழு** எழுத்ததிகாரத்தோடு மாறு கொள்வது. (யாப். 95)

**எழுதிணை** எழுதிணையும் ஆவன: கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை. (இளம். தொல். பொருள். 1)

**எழுபிறப்பு** மக்கள் விலங்கு பறவை யூர்வன நீருள் திரிவன பருப்பதம் பாதவம் எனவிவை எழுபிறப்பாகுமென்ப. (நச். சீவ. 309)

| | |
|---|---|
| எழுவாய் வேற்றுமை | ஈறு திரியாது உருபேற்றல் எழுவாய் வேற்றுமையது இலக்கணம். (இளம். தொல். சொல். 66) |
| எள்ளல் | தான் பிறரை எள்ளி நகுதலும் பிறரால் எள்ளப் பட்டவழித் தான் நகுதலும் என இரண்டாம். (பேரா. தொல். பொருள். 252) |
| எற்படு காலை | ஆதித்தன் படுகின்ற பொழுது. (நம்பி. 12) |
| எற்பாடு | பகற் பொழுதின் பிற்கூறு. (இளம். தொல். பொருள். 10) நாள் வெயிற் காலையாம். (சிவ. தொல். சூ. ப. 56) |
| எறும்பிடைச் செய்யுள் | பார்க்க: பிபீலிகா மத்திமம். |
| எனவென் எச்சம் | என என்று சொல்ல வேண்டும்வழி அச்சொல் எஞ்சி நிற்பது. (தெய். தொல். சொல். 422) |

## ஏ

| | |
|---|---|
| ஏகதேச வுருவகம் | ஒரு செய்யுளகத்து ஓரிடத்தொரு பொருளை உருவகஞ் செய்யுங்கால் மாட்டேறு பெற உருவகஞ் செய்து அப்பொருளோடு சம்பந்தமுறப் பிறிதோர் பொருளைச் செய்யுளகத்துப் பிறிதோரிடத்து மாட்டேறு பெற வுருவகஞ் செய்யாது தொகைநிலை வாய்பாட்டால் கூறுவது. (காரி. மாற. 120) |
| ஏகபாதம் | ஓரடியே நாற்கால் உச்சரித்தால் பாட்டுப் பொருள் வேறுபட்டு முடிவது. (யாப். 96) நாற்காலுச்சரிக்கப் பொருள் வேறாவது. (வீர. 179) |
| ஏகவுவமை | உவமையும் உவமேயமுந் திணைபால் முதல் சினை பெயர் வினை என்பன மயங்காது ஒன்றிருக்கை. (காரி. மாற. 101) |
| ஏகாங்கவுருவகம் | ஒரு பொருளினது அங்கம் பலவற்றுள்ளும் ஓரங்கமே உருவகஞ் செய்து ஒழிந்த அங்கங்களை வாளாவே கூறுவது. (பழை. தண்டி. பொரு. 10) |

ஏகாவளி — பல வளையத்தை யொன்றாக்கப்பட்ட சங்கிலி போலத் தொடர்தல்.
(காரி. மாற. 216)

ஏதுக்கருத்தன் — ஏவினானைக் கருத்தாவாகச் செய்வது.
(இறை. 18)

ஏதுப்பொருள் — ஒரு பொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருள்.
(ஆறு. நன். 299)

ஏந்திசை அகவல் — எழுந்திறந்து இசைப்பன. (யாப். 77)

ஏந்திசைச் செப்பல் — வெண்சீர் வெண்டளையான் வருவது ஏந்திசைச் செப்பலோசை.
(யாப். கா. 22)

ஏந்திசைத் துள்ளல் — கலித்தளையான் வருவது ஏந்திசைத் துள்ளலோசை. (யாப். கா. 22)

ஏந்திசைத் தூங்கல் — ஒன்றிய வஞ்சித் தளையான் வருவது ஏந்திசைத் தூங்கலோசை.

ஏர் — தளிரின்கண் தோன்றுவதோர் பொலிவு போல எல்லாவுறுப்பினும் ஒப்பக் கிடந்து கண்டார்க்கு இன்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு.
(இளம். தொல். பொருள். 243)
எழுச்சி. (நச். தொல். பொருள். 247)

ஏழாம் வேற்றுமை — இடத்தையும் இடத்துநிகழ் பொருளையும் வேறு உணரவும் நிற்கும்; வேறன்றி உணரவும் நிற்கும். (இறை. 1)

ஏழிசை (இ) — ஏழிசையாவன: சட்சம், ரிடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமென்பன. இவை பிறந்த இவற்றுள்ளே பண்கள் பிறக்கும்.
(அடி, சிலம்பு. 3:26)

ஏழு வழு — திணைவழு, பால்வழு, மரபுவழு, வினாவழு, செப்பு வழு, காலவழு, இடவழு என்பன. (நேமி. 26)

ஏழுவிரல் (இ) — இடக்கையிற் பெருவிரலும் சிறுவிரலும் நீங்கிமற்றை மூன்று விரலும், வலக்கையிற் பெருவிரலொழிந்த நான்கு விரலும் ஆக ஏழுவிரல் (குழல் இசைத்தற்குரியன)
(அடி. சிலம்பு. 3:26)

ஏழைமை — நுழைந்த உணர்வினரன்றி வரும் வெண்மை.
(பேரா. தொல். பொருள். 274)

ஏற்றல் — கோடல்; கொள்வோன் தனது சிறப்பிற் குன்றாமற் கோடல்.
(இளம். தொல். பொருள். 74)

ஏற்றுக்கோடற் பொருள் — ஏற்றுக்கோடற் பொருள் கேளாது ஏற்றல், கேட்டே ஏற்றல், ஏலாதுஏற்றல், ஈவோன் ஏற்றல், உயர்ந்தோன் ஏற்றல், ஒப்போன் ஏற்றல், உணர்வின் ஏற்றல், விருப்பா யேற்றல், வெறுப்பா யேற்றல் என இவை முதலாகப் பலவுமாம். (சிவ. நன். 298)

ஏறுநடை — அசைவும் தலையெடுப்பும் பொருந்திய நடை. (மணக். திருக். 55)

## ஐ

ஐகாரக் குறுக்கம் — ஐகாரக் குறுக்கம் அளபெடையும் தனியு மல்லாத வழிக் குறுகும்.
(இளம். தொல். பொருள். 311)

ஐந்தமளி — சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண முறுதூவி சேக்கையோ ரைந்து.
(நச். நெடு. 133)

ஐந்தாம் வேற்றுமை — ஐந்தாவது நான்கு பொருண்மை யுடைத்து. பொருவும், எல்லையும், நீக்க மும், ஏதுவுமென. அவற்றுள் பொருவு இருவகைப்படும். உறழ் பொருவும் உவமப்பொருவுமென. ஏதுவும் இரு வகைப்படும். ஞாபக ஏதுவும் காரக ஏதுவும் என. (சேனா. தொல். சொல். 77)

ஐந்தாவது பொருவும் எல்லையும் நீக்க மும் ஏதுவுமென நான்கு வகைப்படும்.
(நச். தொல். சொல். 78)

ஐந்திணை அறம் — இவ்வொழுக்கங்கள் அறத்தின்வழி நிகழ்த லானும், பாலையாகிய வாகைப்படலத் துள் அறநிலை கூறுதலானும் இவை அறமாயின.
(இளம். தொல். பொருள். 89)

| | |
|---|---|
| ஐந்திணை இன்பம் | புணர்தல் முதலாகிய ஐந்து பொருளும் இன்பம் தருதலின் இன்பம் ஆயின. (இளம். தொல். பொருள் 89) |
| ஐந்து குற்றங்கள் | அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பன. (இவற்றை வடநூலார் பஞ்ச கிலேசம் என்பர்.) (பரிமே. திருக். 38) |
| ஐந்து கேள்வி | திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம், நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசக்கோளுமாம். (அரும். சிலம்பு. 26 : 26) |
| ஐந்து பால் | ஐந்து பாலாவன: ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்பன. (நேமி. 26) |
| ஐந்து விரை | நறும்பிசி னாகண நற்கொட்ட மாஞ்சி வெறுங்கண்டில் வெண்ணெய் விரை. (அரும். சிலம்பு. 6 : 76) |
| ஐந்தொழில் | ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல். (சாமு. புறப். 157) |
| ஐம்பூதம் | பரமேட்டி, புமான், விச்சுவம், நிவர்த்தி, சருவன். (காரி. மாற. 91) |
| ஐம்பெருங்குழு | அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தவாத்தொழில் தூதுவர், சாரணர் என்றிவர் பார்த்திபர்க் கைம்பெருங் குழு வெனப் படுமே. (அடி. சிலம்பு. 5 : 157)<br>அமைச்சர், புரோகிதர், சேனாபதியார், தூதர், ஒற்றர் இவரென மொழிப. (நச். மது. 510) |
| ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் | சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுக நெய்<br>ஆய்ந்த விவரெண்ம ராயத்தார்— வேந்தர்க்கு<br>மாசனம் பார்ப்பார் மருத்தர்<br>வாழ்நிமித்த ரோடமைச்சர்<br>ஆசி லவைக்களத்தா ரைந்து.<br>(அரும். சிலம்பு. 5 : 157) |
| ஐம்பொருள் | சீவம் புற்கலம் தருமம் அதருமம் ஆகாசம் காலம் என்பன. (நச். சீவ. 2814) |

ஐயம் — ஒரு பொருளைக் கண்டவழி இதுவெனத் துணியாத நிலைமை.
(இளம். தொல். பொருள். 256)

ஒரு பொருண்மேல் இரு பொருட்டன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்.
(பேரா. தொல். பொருள். 260)

பல தலையாய உணர்வு.
(பரிமே. திருக். 353)

ஐயம் (அகம்) — ஐயம் என்பது கண்ணுற்ற பின்னர் இங்ஙனந் தோன்றா நின்ற இம்மாது திருமகள் முதலாகிய தெய்வமோ அன்றி மக்களுள்ளாள் கொல்லோ என்று ஐயுறா நிற்றல். (பேரா. திருக். 1 : 2)

ஐயவிலக்கு — ஐயுற்றதனை விலக்குவது.
(பழை. தண்டி. பொரு. 12)

ஐயவுவமை — உவமையையும் பொருளையும் ஐயமுற்று உரைப்பது. (பழை. தண்டி. பொரு. 5)

ஒ

ஒட்டு — அறுவகை ஒட்டாவன: வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினையின் தொகை, பண்பின் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என்பன.
(இளம். தொல். சொல். 1)

ஒப்பில் போலி — ஒப்பில்லாதவழி ஒப்பித்த வாசகம்பட வருவது. (இளம். தொல். சொல். 273)

ஒப்பு — வினை பயன் மெய் உரு என்பனவற்றால் ஒன்றனை ஒன்று ஒத்தல்.
(சிவ. நன். 321)

ஒப்புப்பொருள் — உவமேயப் பொருளிலும் தன்னிலுமிருக் கின்ற பொதுத் தன்மையால் உவமான மாகும் பொருளாம். (ஆறு. நன். 299)

ஒப்புரவறிதல் — இல்லென இரந்து வந்தோர் யாவர்க்கும் வரையாது கொடுக்குமாற்றால் இலரெ னினும் தம்மளவிற்கும் தம் வருவாயள

விற்கும் ஏற்கத் தக்கார்க்குத் தக்கண வறிந்து கொடுத்தல்.
(மணக். திருக். அதி. முன்.)

உலக நடையினை அறிந்து ஒழுகுதல்.
(பரிமே. திருக். அதி. 22)

**ஒருஉநிரல்நிறை** முதல் சீர்க்கண்ணும் நான்காம் சீர்க் கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப். 95)

**ஒருசிறைநிலை** ஒரு பாட்டினகத்துச் சொல்லப்பட்ட பொருள் ஒருவழி நிற்பது. (இறை. 56)

**ஒருதலையுள்ளுதல்** இடைவிடாது நினைத்தல்.
(இளம். தொல். பொருள். 97; நம்பி. 36)

**ஒருபொருட்டு** ஒன்றனையே துணித்துப் பாடுவது.
(வீர. 179)

**ஒருபொருளுவமை** பலபொருட்கொரு பொருளுவமை காட்டுவது. (காரி. மாற. 101)

**ஒருமுதல் நிரல்நிறை** முற்றும் நிறுவாது முதல் ஒன்றே சொல்லுதல். (யாப். 95)

**ஒருமை** ஒருவன் ஒருத்தி ஒன்று என்பனவற்றிற் கெல்லாம் பொதுவாகிய ஒருமை.
(இளம். தொல். சொல். 186; சேனா. தொல். சொல். 189)

**ஒருவயிற் போலி யுவமை** ஒரு தொடர்மொழிக்கண் பல உவமை வந்தால் அவ்வந்த உவமை தோறும் உவமைச் சொற் புணர்ந்து ஓர் உவமைச் சொல் புணர்ப்பது.
(பழை. தண்டி. பொரு. 5; காரி. மாற. 101)

**ஒருவழித்தணத்தல்** ஓரூரின்கண்ணும் ஒரு நாட்டின்கண்ணும் பிரிதல். (நம்பி. 39)

**ஒருவினைச் சிலேடை** ஒருவினையில் சிலேடிப்பது ஒருவினைச் சிலேடையாகும். (வீர. 170)

ஒருவினையான் வருவது.
(பழை. தண்டி. பொரு. 51)

**ஒழுக்கம்** உயர்ந்தோர் ஒழுகின நெறியில் ஒழுகுதல்.
(மணக். திருக். 140)

அந்தணர் முதலிய வருணத்தார் தத் தமக்கு விதிக்கப்பட்ட பிரமச்சரியம் முதலிய நிலைகளில் நின்று அவற்றிற் கோதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். (பரிமே. திருக். உரைப்பாயிரம்)

தங்குலத்திற்கேற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம். (நச். தொல். பொருள். 152)

**ஒழுக்கமுடைமை** — தத்தங் குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஏற்ற ஒழுக்கமுடையராதல். (மணக். திருக். அதி. முன்.)

தங்குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஒத்த ஒழுக்கமுடையவராதல். (இளம். தொல். பொருள். 74)

தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப் பட்ட ஒழுக்கத்தினையுடையராதல். (பரிமே. திருக். அதி. 14)

**ஒழுகிசை அகவல்** — நேரொன்றாசிரியத் தளையும் நிரை யொன்றாசிரியத்தளையும் விரவலான் வருவது ஒழுகிசை அகவல். (யாப். கா. 22)

**ஒழுகிசைச் செப்பல்** — வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் விரவலான் வருவது ஒழுகிசைச் செப்பலோசை. (யாப். கா. 22)

**ஒழியிசை** — யாதானும் ஒரு சொல் ஒழிவுபடவரின் அஃது ஒழியிசை எனப்படும். (இளம். தொல். சொல். 248)

தன்னாற் சொல்லப்பட்ட பொருளன்றி மற்றொரு பொருளுங் கொள்ளநிற்பது. (தெய். தொல். சொல். 252)

**ஒழியிசையெச்சம்** — சொல்லப்பட்ட பொருளை யொழியச் சொல்லா தொழிந்துநின்ற பொருளும் தோன்றநிற்பது. (தெய். தொல். சொல். 422)

**ஒளி (நா)** — ஒளியாவது சந்தி நிருதையும் அநிதையும், சந்தியா நிருதையும் என மூன்று. அதுவே உள்ளோன் தலைமகனாக உள்பொரு

ளும், இகப்பொருளும், இலப்பொருளும், இரவுப்பொருளும் என்றும்; இல்லோன் தலைமகனாக உள்பொருளும், இரவுப் பொருளும் என்றும்; இல்லோன் தலை மகனாக இல்பொருள் என்றும் ஐந்து வகைப்படும். (வீர. 104)

**ஒற்றுப்பெயர்த்தல்** ஒரு மொழியைப் பாட்டின் இறுதிக்கண் வைத்துப் பிறிதொரு பொருள் பயக்கப் பாடுவது. (யாப். நூ. 96)

ஒரு மொழியைப் பாடி நிறுத்தி வைத்துப் பிறிதொரு பொருள்படப் பாடுவதும் பல பெயர் கூட்ட ஒரு பொருள் வரப் பாடு வதும் என இரண்டு வகைப்படும். (வீர. 179)

ஒரு மொழியும் தொடர்மொழியுமாய்ப் பொருள்படுமவற்றை அப்பொருளொழிய வேறு பொருள்பட வைப்பது. (பழை. தண்டி. சொல்ல. 7)

**ஒன்பது பொருள்** சீவம், அசிவம், புண்ணியம், பாவம், ஆஸ்ரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோக்ஷம் என இவை. (நச். சீவ. 2814)

**ஒன்றாத வஞ்சித்தளை** வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசை யோடு ஒன்றாதது ஒன்றாத வஞ்சித்தளை யாம். (இளம். தொல். செய். 48)

**ஒன்றிய வஞ்சித்தளை** வஞ்சியுரிச்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசை யோடு ஒன்றுவது ஒன்றிய வஞ்சித்தளை யாம். (இளம். தொல். செய். 48)

## ஓ

**ஓசனித்தல்** போதற்கு ஒருப்பட்டு முயறல். (அடி. சிலம்பு. 14:125)

**ஓசனை** ஓசனை; வடமொழிச் சிதைவு. (நச். சீவ. 337)

**ஓத்து** ஒப்புடைப் பொருளை ஓரிடத்தில் ஒற்றுமைப்பட வைப்பதாகும். (யாப். பாயிரம்.)

இனமாகிச் சேர்ந்த நிலைக்கு ஒத்து என்று பெயராயிற்று.
(இளம். தொல். செய். 163)

ஓரினப்பொருள்களையே தொகுப்பது ஒத்து.

பல சூத்திரங்களின் தொகுதி ஒத்து. ஒத்தென்றது இயலை. (ஆறு. நன். 17)

**ஓதல்** கல்வி. (இளம். தொல். பொருள். 74)

**ஓதற்பிரிவு** ஓதற்குப் பிரியும் என்பது கற்பான் பிரியும் என்பதன்று; பண்டே குரவர்களால் கற்பிக்கப்பட்டுக் கற்றான், அறம், பொருள், இன்பம், வீடு பேறுகள் முதலிய நூல்களெல்லாம்; இனிப் பரதேசங்களிலும் அவை வல்லார் உளரெனிற் காண்டற்கும், வல்லார்கள் உளவழிச் சென்று தன்ஞானம் மேற்படுத்து அவர் ஞானம் கீழ்படுத்தற்கும் பிரியும். (இறை. 35)

ஓதற்குப் பிரிதலாவது, தமது நாட்டகத்து வழங்காது பிறநாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே அவற்றினைக் கற்றல் வேண்டிப் பிரிதல்.
(இளம். தொல். பொருள். 27)

**ஓதுவித்தல்** கற்பித்தல். (இளம். தொல். பொருள் 74)

**ஓம்படுத்தல்** போற்றுதல். (இளம். தொல். சொல். 93)
பாதுகாத்தல்.
(சேனா. தொல். சொல். 97)

**ஓர்ப்பு** ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல்.
(இறை. 2)

**ஓரினப்பாட்டு** வல்லினம் மெல்லினம் இடையினத் தொன்றாலே வருதல் ஓரினப்பாட்டாம்.
(வீர. 179)

**ஓரெழுத்துப்பாட்டு** ஓரெழுத்தாலே முற்றும் வருவன ஓரெழுத்துப்பாட்டு. (வீர. 179)

## க

**கச்சு** சேலையின் மேற்கட்டினது.
(நச். சீவ. 16)

**கட்டளை வெண்பா** — ஈற்றடி ஒழித்து ஏனையடி எழுத்து ஒத்து வருவது. (யாப். 95)

**கட்டில்** — விவாகம் பண்ணி எழுந்திருந்து சாந்தி யான கூத்தும் ஆலத்தியும் கண்டு அருந்ததி காணப்போமளவும் இருக்கும் கட்டில். இஃது அரசியல். (நச். சீவ. 2469)

**கட்டுரை** — பொருள் பொதிந்த சொல்; உறுதியை யுடைய சொல்லுமாம்.
(அடி. சிலம்பு. பதி. 38-54)

நலம் பாராட்டலென்னும் பொருள் பொதிந்த உரை. (அடி. சிலம்பு. 2:37)

**கடகம் (நா)** — கடக முகமே கருதுங் காலை
பெருவிரலுனியுஞ் சுட்டுவிர லுனியு
மருவவளைந்த வுகிர் நுனி கௌவி
ஒழிந்த மூன்றும் வழிவழி நிமிர
மொழிந்தன ரென்ப முடிபறிந் தோரே.
(அடி. சிலம்பு 3:18)

**கடகா வருத்தம் (நா)** — இரண்டு கையும் கடகமாய் மணிக்கட்டுக்கு ஏற இயைந்து நிற்பது.
(அடி. சிலம்பு. 3:18)

**கடலமிர்து** — ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்தம் நீர்ப்படு முப்பினோ டைந்து. (நச். சீவ, 2110)

**கடவுள் வாழ்த்து** — கவி தான்வழிபடு கடவுளையாதல் எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல்.
(பரிமே. திருக். அதி. முன்)

**கடிவினை** — சமாவர்த்தனம். (நச். சீவ. 485)

**கடை அளபெடை** — அடிதோறும் கடைச்சீர்க்கண் அளபே தொடுத்து வருவது. (யாப். 39)

**கடை இயைபு** — அடிதோறும் முதற்சீர்க் கடையொத்து வருவது. (யாப். 39)

**கடை எதுகை** — அடிதோறும் கடைச்சீர்க்கண் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.
(யாப். 39)

கடைக்கூழை முரண் — முதற்சீர் ஒழித்து மூன்று சீர்க்கண்ணும் முரணி வந்தால் கடைக்கூழை முரண் எனப்படும். (யாப். 39)

முதற்சீரொழித்து மூன்று சீரும் ஒத்து வருவது. (இளம். தொல். செய். 78)

கடைப்பிடி — கொண்ட பொருள் மறவாமை. (இறை. 2)

கடை முரண் — அடிதோறும் கடைச்சீர் மறுதலைப்படத் தொடுப்பது. (யாப். 39)

கடை மோனை — அடிதோறும் கடைச்சீர்க்கண் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது. (யாப். 39)

கடையாகு இன்பா — தன்சீரும் தன் தளையும் இன்றியே வருவன. (யாப். 92)

கடையாகு எதுகை — இனத்தானும் மாத்திரையானும் பிற வாற்றானும் வரத்தொடுப்பது. (யாப். 37)

கடையாகு கழி நெடிலடி — பதின்சீரின் மிக்கு வருவன எல்லாம் கடையாகு கழிநெடிலடி எனப்படும். (யாப். 25)

கடையிணை முரண் — கடையிரு சீரும் மறுதலைப்படத் தொடுப்பது. (யாப். 39)

கண்கலத்தல் — எதிர்ப்படுதல். (நச். சீவ. 2545)

கண்கூடுவரி (நா) — கண்கூடாவது பிரியதர்சனம். அஃதாவது காட்சி; அஃது ஒருவர் கூட்டவன்றித் தானே வந்துநிற்கு நிலைமை. (அடி. சிலம்பு. 8:77)

கண்டிகை — தோலிலே மூன்று நிரையாகப் பலநிறத்து மணியை வைத்துத் தைத்துக் கழுத்திற் கட்டுவது. (நச். கலி. 96)

கண்ணழித்தல் — பதப்பொருள் சொல்லுதல். (இறை. 1)

சூத்திரத்துச் சொற்றோறும் சொற்றொறும் பொருளுரைத்தல். (நம்பி. 1; காரி. மாற. 65)

கண்ணன் — கரியோனென்னும் பொருளதோர் பாகதச் சிதைவு. (பேரா. திரு. 4:4)

| | |
|---|---|
| கண்ணி | ஆடவர் தலையில் சூடுதற்குரிய மாலை. (பழை. புறம். 1) |
| | சூடும்பூ. (பேரா. தொல். பொருள். 634; நச். சீவ. 208) |
| | முடிக்கும் மாலை. (நச். சீவ. 193) |
| கண்ணோட்டம் | கண்ணாற் காணப்பட்டாரை அருள் செய்தல். (மணக். திருக். அதி. முன்) |
| | தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. (பரிமே. திருக். அதி. முன்) |
| கணங்கள் | மூவாறு கணங்களாவார்: ஆகாசர், நாகர், சித்தர், காந்தருவர், விஞ்சையர், பசாசர், தாரகை, போகபூமியோர், கிம்புருடர், சுரர், அசுரர், பூதம், முனி, தேவர், கருடர், இராக்கதர், சாரணர் எனவுங் கொள்க. (அடி. சிலம்பு. 5:176) |
| கணிச்சி | கணிச்சியைக் குந்தாலி யென்றும் மழு வென்றும் சொல்லுவர். (பழை. புறம். 42) |
| கணிதம் | பதினாறு வரி கருமமும், ஆறுகலாசவருண மும், இரண்டு பிரகரணச் சாதியும், முத குப்பையும், ஐங்குப்பையும் என்ற இப்பரி கருமமும். (யாப். 96) |
| கணைகள் | அந்த ணரவிந்த மாம்பூ அசோகப்பூப்<br>பைந்தளிர் முல்லை பனிநீலம்—ஐந்துமே<br>வீரவேல் மைந்தரையும் வேல்நெடுங்கண் மாதரையும்<br>மாரவே ளெய்யு மலர்.<br>இவை திரவிய பாணம். [பார்க்க; திரவிய பாணம்] (நச். சீவ. 706) |
| கத்திரிகை (நா) | திரிபதாகையின் முடங்கிய அணிவிரல் புறத்ததாகிய நடுவிரலைச் சுட்டு விர லோடு பொருந்த நிமிர்ப்பது. (அடி. சிலம்பு. 3:18) |
| கதை | பொய்ப்பொருள் புணர்த்துக் கூறுவது. (அடி. சிலம்பு. உரைப்பாயிரம்.) |
| கந்தம் (நா) | அடிவரையறை யுடைத்தாய் ஒரு தாளத் தாற் புணர்ப்பது. (அடி. சிலம்பு. 3:14) |

| | |
|---|---|
| **கந்தருவம்** | கந்தருவர் என்பார் ஈண்டுச் செய்த நல் வினைப் பயத்தால் ஒருவர் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி, இருவரும் ஒரு பொழி லகத்து எதிர்ப்பட்டுப் புணர்வது; இது கந்தர்வமணம். (இறை. 1) |
| | ஒத்த குலனும் குணனும் அழகும் அறிவும் பருவமும் உடையார் யாருமில் ஒருசிறைக் கண் அன்பு மீதுரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம். (யாப். 96) |
| | கந்திருவமாவது ஒத்த இருவர் தாமே கூடுங்கூட்டம். (இளம். தொல். பொருள். 89) பார்க்க : காந்தர்வம். |
| **கந்தழி** | செருவில் தெட்பம் உடைமை. (வீர. 104) ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள். (நச். தொல். பொருள். 88) |
| | கந்தழியாவது ஒருபற்றுமற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள். (நச். திருமுரு. 317) |
| **கந்து** | தெய்வமுறையும் தறி. (நச். பட். 248) |
| **கபித்தம் (நா)** | சுட்டுவிரல் நுனியும் பெருவிரல் நுனியும் உகிர் நுனைக் கௌவிப் பிடித்து ஒழிந்த மூன்று விரலும் மெல்லெனப் பிடிப்பது. (அடி. சிலம்பு. 3:18) |
| **கபோதம் (நா)** | பதாகைக் கையில் பெருவிரல் விட்டு நிமிர் வது. (அடி. சிலம்பு. 3:18) |
| **கம்** | கம் என்பது கம்மியரது தொழில். (சிவ. நன். 223) |
| **கமகன்** | பல நூல்களது வகைமையாலும் மதியது பெருமையாலும் கல்லாத நூல்களையும் கற்றார் வியப்ப உய்த்துரைக்கும் கருத்து டைய புலவன். (யாப். 96) |
| | வல்ல நூலறிவினாலும் மதியினது பெருமையாலும் கல்லாத நூல்களையும் கற்றோர் வியப்பத் தந்துரைக்கும் புலவன். (வீர. 179) |

| | |
|---|---|
| கரடிகை (இ) | கரடி கத்தினாற் போலும் ஓசை உடைத்தாதலால் கரடிகை என்று பெயராயிற்று. (அடி. சிலம்பு. 3:27) |
| கரணம் | வதுவைச் சடங்கு. (இளம். தொல். பொருள். 140) |
| கரணம் (நா) | படிந்து ஆடல். (அடி. சிலம்பு. 3:12) |
| கரந்துறை செய்யுள் | ஒரு செய்யுள் பிறிதொரு செய்யுட்புகாது எழுத்துப் பொறுக்கிக் கொள்ளலாம்படி பாடுவது. (பழை. தண்டி. சொல்ல. 7) |
| கரந்துறை பாட்டு | ஒருபாட்டுச் செவ்வே எழுதினால் அதனை ஈற்று நின்று மொழிக்கு முதலாயின எழுத்துத் தொடங்கி ஒன்று இடையிட்டு எழுத்துகொள்ள மற்றொரு பாட்டும் போதுவது. (யாப். 96) |
| | ஒரு பாட்டைச் செவ்வே எழுதினால் ஒற்று மொழிக்கு முதலாம் எழுத்துத் தொடங்கி ஒன்று விட்டு வாசிக்க மற்றொரு பாட்டாவது. (வீர. 179) |
| கரவு நடுதல் | வெளிப்படச் சொல்லும் சொல்லன்றிப் பிறிதொன்றன் மேல் வைத்துச் சொல்லுதல். (பேரா. திரு. 9) |
| கராம் | முதலையுள் ஒரு சாதி. (பழை. புறம். 37) |
| கருத்தன் | தச்சன் எடுத்த மாடம். கொல்லன் செய்த வாள். (இறை. 19) |
| கருத்துரைத்தல் | சூத்திரத்து உட்கோள் உரைத்தல். (நம்பி. 1) |
| | சூத்திரத்தின் உட்கோள் உரைத்தல். (காரி. மாற. 65) |
| கருத்தோன்றும் காலம் | பரத்தையர் சேரியானாயினும் பூத்தோன்றி மூன்று நாள் கழித்த பின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று... இதனால் பயன் என்னை எனில் அது கருத்தோன்றும் காலம். (இளம். தொல். பொருள். 185) |

**கருப்பம் (நா)** கலத்தின் கருவு திரண்டோங்கிக் குடைப் பே:ாகியவாறுபோல நலம்தரும் பொருளைத் திரளச் சொல்வது.
(வீர. 104)

நாற்று முதலாய் கருஇருந்து பெருகித் தம்முள் பொருள் பொதிந்து கருப்பமுற்றி நிற்பது போல்வது. (அடி. சிலம்பு. 3:13)

**கருப்பொருள்** காலத்தினும் இடத்தினும் தோற்றும் பொருள். அது மக்கள், தேவர் விலங்கு முதலாயினவும், உணவு, செயல் முதலாயினவும், பறை, யாழ் முதலாயினவும், இன்னவான பிறவும் ஆகிய பலவகைப் படும்.
(இளம். தொல். பொருள். முன்னுரை)

**கருமக்கருத்தா** கருத்தா பிறிதொன்றாய் நில்லாது கருமமுங் கருத்தாவும் தானேயாய் நிற்பது கருமக் கருத்தாவாகும். (வீர. 40, 41)

**கருவி** வினை முதற்றொழிற் பயனைச் செயப் படுபொருட்கணுய்ப்பது.
(சேனா. தொல். சொல். 73; நச். தொல். சொல். 74)

அதுவும் (கருவியும்) இயற்றுதற் கருவி யாகிய காரகக் கருவியும், அறிதற் கருவி யாகிய ஞாபகக் கருவியுமென இருவகைப் படும். (நச். தொல். சொல். 74)

வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது. கருவி, காரணம், ஏது என்பன ஒருபொருட் சொற்கள். கருவிப் பொருள் முதற்கருவியுந் துணைக் கருவியுமென இருவகைப்படும்.
(ஆறு. நன். 297)

**கருவிப்பொருள்** அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூன்றாய் வரும். (சிவ. நன். 297)

**கல்லவல்** நாடறி சொல்பொருள் பயப்பப் பிழை யாமை வாசகஞ் செய்வது. (யாப். 96)

**கல்வி** தவமுதலாகிய விச்சை.
(பேரா. தொல். பொருள். 257)

| | |
|---|---|
| **கலக்கம்** | முன்னின்ற நிலை குலைதல். (நச். சீவ. 758) |
| **கலங்கரை விளக்கம்** | திக்குக்குறி காட்டிக் கலத்தை அழைக்கிற விளக்கம். (அரும். சிலம்பு. 6:141) |
| | நிலையறியாது ஓடுங்கலங்களை அழைத் தற்கு இட்ட விளக்கு. (அடி. சிலம்பு. 6:141) |
| **கலம்பக வெண்பா** | ஈற்றடி ஒழித்து ஏனையடி எழுத்து ஒவ் வாது வருவது. (யாப். 95) |
| **கலி** | புகழும் அரவமுமாம். (பழை. புறம். 52) |
| | நுகரும் பொருள்களின்மையான் அவற் றின் மேற்செல்லும் பற்றால் நிகழும் வருத்தம். (நச். சீவ. 2727) |
| **கலித்தளை** | வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு நிரையாய் ஒன்றிற் கலித்தளையாம். (இளம். தொல். செய். 48) |
| **கலித்தாழிசை** | ஒன்றாயும் இரண்டாயும் மூன்றின் மிக்கும் மூன்றாய்ப் பொருள் வேறாயும் வருவன. (யாப். 87) |
| | அடிவரையின்றி ஒத்து வந்து ஈற்றடி சில சீர் மிக்கும் குறைந்தும் வருவது. தாழிசை ஒரு பொருள் மேல் முன்றடுக்கி வரினும் கொச்சக வொருபோகு எனப்படா; கலித் தாழிசை யெனப்படும். (இளம். தொல். செய். 525) |
| **கலித்துறை** | நெடிலடி நான்கினால் வருவது. அஃதா வது வஞ்சிச்சீரான் வருவதும் பதினாறும் பதினேழும் எழுத்துப் பெற்று நான்கடி யான் வருவனவுமாம். (இளம். தொல். செய். 175) |
| **கலிநடம் (நா)** | கழாய்க்கூத்து. (அடி. சிலம்பு. 3:12) |
| **கலிநிலைத்துறை** | அடிமறி ஆகாதே ஐஞ்சீர் நாலடியால் வருவன. (யாப். 90) |
| **கலிநிலை விருத்தம்** | அடிமறி ஆகாதே நாற்சீர் நாலடியால் வருவன. (யாப். 89) |

| | |
|---|---|
| **கலிப்பா** | ஆசிரியம் நிகர்த்தாகி சிறுபான்மை வேற்றுத்தளை விரவலின் வணிகநீர்மைத்து. (இளம். தொல். செய். 101) |
| **கலிமண்டிலத்துறை** | அடிமறியாய் ஐஞ்சீர் நாலடியால் வருவன. (யாப். 88) |
| **கலிமண்டில விருத்தம்** | அடிமறியாய் நாற்சீர் நாலடியால் வருவன. (யாப். 89) |
| **கலியொத்தாழிசை** | ஒருபொருண்மேல் மூன்றாய் வருவன. (யாப். 87) |
| **கலிவிருத்தம்** | துள்ளலோசையிற் சிறிது வழுவி நாற்சீர் நாலடியான் வருவது. (யாப். கா. 14) |
| | நாற்சிரடி நான்கினால் வரும். (இளம். தொல். செய். 175) |
| **கலிவெண்பா** | வெள்ளோசையினால் வருவது கலி வெண்பா. (யாப். 85) |
| | செப்பலோசையிற் சிறிது வழுவிற்று வழுவாது என்னும் பெற்றியானும் செப்பலோசையிற் சிதையாதும் ஒரு பொருண்மேல் வெள்ளடியால் வந்து வெண்பா இறுமாறே இறுவன. (யாப். 85) |
| | புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனவும் கைக்கிளை பெருந்திணையெனவும் சொல்லப்பட்ட பொருள் ஏழுனுள்ளும் யாதானுமொரு பொருளைக் குறித்து ஏனைக் கலிப்பாக்கள் போலத் தரவும் தாழிசையும் தனித்தனி பொருளாக்கிச் சுரிதகத்தாற்றொகுத்து வரு நிலைமைத்தன்றித் திரிபின்றி முடிவதனைக் கலிவெண்பா (என்பர்). (இளம். தொல். செய். 147) |
| | புணர்தல் முதலாகிய பொருள்களுள் யாதானும் ஒரு பொருளைக் குறித்துத் திரிபின்றி முடியும் பஃறொடை வெண்பாக்களைக் கலிவெண்பா (என்பர்.) (இளம். தொல். செய். 114) |

| | |
|---|---|
| கலிவெண்பாட்டு | கலிவெண் பாட்டெனினும் வெண்கலிப் பாட்டெனினும் ஒக்கும். (இளம். தொல். செய். 146) |
| கலைத்தொழில் (இ) | பண்ணல் பரிவட்டணை யாராய்தல் தைவரல் கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ் நண்ணிய குறும்போக்கு. (நச். சீவ. 657) |
| கவலை | முடுக்கு வழிகள். (அடி. சிலம்பு. 14:214) |
| கவி | கவியென்பார் நான்கு வகைப்படுவர். ஆசு கவியும், மதுர கவியும், சித்திர கவியும், வித்தார கவியும் என. அவரைக் கடுங் கவி, இன்கவி, அருங்கவி, பெருங்கவி என்று வேண்டுவாரும் உளர். (யாப். 96; வீர. 179) |
| கழற்றெதிர்மறை | பாங்கன் கழறத் தலைமகன் ஆற்றா னாய்ச் சொல்லும் சொற்கள். (இறை. 3) |
| கழிநெடிலடி | பதினெட்டும் பத்தொன்பதும் இருபது மென மூன்று நிலம் பெறும். (இளம். தொல். செய். 39) |
| கழு | கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையும் சீவி மாலையாகக் கட்டிக் கழுத்தில் இடுவது. (நச். கலி. 106:1) |
| கழுது | பேயில் ஒருசாதி. (நச். மது. 633) |
| கள்வர் | தீத்தொழில் புரிவார். (பேரா. தொல். பொருள். 256) |
| கள்ளாமை | யாதொரு பொருளையும் களவிற் கொள் ளாராதல். (மணக். திருக். அதி. முன்) பிறர்க்குரிய பொருளைக் களவினாற் கொள்ளாராதல். (இளம். தொல். பொருள். 74) பிறர் உடைமையாயிருப்பது யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள் ளக்கருதாமை. (பரிமே. திருக். அதி. 29) |
| களவு | செய்தாரே அறிந்து மற்றொருவர் அறி யாதது. (இறை. 22) |

களவு (மணம்) — பிறர்க்குரிய பொருளை மறையிற்கோடல். இன்னதன்றி ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது கன்னியர்தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலை வழுவாமல் நிற்றலால் இஃது அறமெனப்படும். (இளம். தொல். களவியல். முன்னுரை)

கரணமின்றி வருவது (வீர. 94)

பிணி மூப்பு இறப்புக்கள் இன்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையராய்த் தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் அன்றிப் பால்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. (பரிமே. திருக். இயல். முன்னுரை)

பிறர்க்குரித்தென்று இருமுதுகுரவரால் கொடை எதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவருங் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்தல். (நச். தொல். பொருள். 92) (பார்க்க: காமப் புணர்ச்சி)

களவொழுக்கம் — இல்லது இனியது நல்லது என்று புலவரால் நாட்டப்பட்டதோர் ஒழுக்கம். (இறை. 1)

களவென்றோதப்படுகின்ற ஒழுக்கம் அறம் பயவாத புறநெறியன்று; வேத விதியாகிய தந்திரம். (இளம். தொல். பொருள். 89)

கற்கடகம் (நா) — தெரிநிலைக்கை யிரண்டும் அங்குலி பிணைந்து வருவது. (அடி. சிலம்பு. 3: 18)

கற்பம் — இருத்தற்குக் கற்பித்த இடம். (நச். சீவ. 600)

கற்பு — மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 243)

கொடுப்பக் கொள்வது கற்பு. (இளம். தொல். பொருள். 140)

ஆறிய கற்பும் சீறிய கற்புமென கற்பு இரு வகைப்படும். (அடி. சிலம்பு. பதி. 38—54.)

கரணமோடியைந்து வருவது. (வீர. 94)

தன் கணவனைத் தெய்வமென்று உணர்வ தோர் மேற்கோள்.
(நச். தொல். பொருள். 247)

கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம்.
(நச். தொல். பொருள். 152)

கொண்டானிற் சிறந்த தெய்வம் இன் றெனவும் அவனை இன்னவாறே வழிபடுக எனவும், இரு முதுகுரவர் கற்பித்த லானும், 'அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும்', 'ஐயர் பாங்கினும் அமரர் சுட்டிய' ஒழுகும் ஒழுக்கம் தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று.

தலைவனுங் களவின்கண் ஒரையும் நாளும் தீதென்று அதனைத் துறந்தொழுகினாற் போல ஒழுகாது ஒத்தினும் கரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக் கொண்டு துறவறத்திற் செல்லும் துணை யும் இல்லறம் நிகழ்த்துதலிற் கற்பாயிற்று.
(நச். தொல். பொருள். 142)

**கன்** — சிறு தராசுத்தட்டு. (சிவ. நன். 217)

**கன்மங்கள்** — (கன்மங்கள் எண்வகை) அவை யாவன: ஞானா வரணியம், தரிசனாவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் என விவை. (அடி. சிலம்பு. 10: 177)

**கனவு** — வாய்வெருவுதல்.
(பேரா. தொல். பொருள். 260)

### கா

**காங்கூலம் (நா)** — காங்கூலம்மே கருதுங் காலைச்
சுட்டும் பேடும் பெருவிரல் மூன்றும்
ஒட்டிமுன் குவிய அநாமிகை முடங்சிச்
சிறுவிரல் நிமிர்ந்த செய்கைத் தாகும்.
(அடி. சிலம்பு. 3: 18)

| | |
|---|---|
| **காசு** | புறத்தின் மேகலை (நச். சீவ. 468) |
| **காஞ்சி** | பெருந்திணைப் புறம் நிலையாமையாகிய நோந்திறப் பொருளே குறித்து வருதலின் காஞ்சி என ஒரு குறி பெறும். (இளம். தொல். புறத்திணையியல். முன் ) |
| | எப்பொருட்கும் நிலையாமை கூறுதல். (நச். தொல். பொருள். 62) |
| **காட்சி** | இருவரும் தம்முட் கண்ணுறுவது. (இறை. 2) |
| | தலைவியை எதிர்ப்படுதல். (இளம். தொல். பொருள். 18) |
| | தலைமகளைத் தலைமகன் கண்ணுற்று இஃதொரு வியப்பென்னென்றல். (பேரா. திருக். 1: 1) |
| | தலைமகளைத் தலைமகன் தனியிடத்துக் காண்டல். (நம்பி. 36) |
| **காட்சி (சமயம்)** | சக்கு தரிசனாவரணீயம், அசக்கு தரிசனா வரணீயம், அவதி தரிசனா வரணீயம், கேவல தரிசனா வரணீயம் என நால் வகைப்படும். (நச். சீவ. 3081) |
| **காட்சிவரி (நா)** | தன் வருத்தத்தைப் புலரும் காணும்படி நடித்தல். (அடி. சிலம்பு. 8: 106) |
| **காட்டிலமிர்து** | அரக்குவண்டு செந்தேன் அணிமயிற் பீலி திருத்தகு நாவியோ டைந்து. (நச். சீவ. 2110) |
| **காடி** | புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடி (என்பர்). (நச். பெரும். 56-57) |
| **காண்வரி (நா)** | காண்வரி யென்பது காணுங் காலை வந்த பின்னர் மனமகிழ்வுறுவன. தந்து நீங்கும் தன்மையதாகும். (அடி. சிலம்பு. 88: 3) |
| **காதம்** | கூப்பிடு நான்கு கொண்டது. (யாப். 95) |
| **காதல்** | எல்லாப் பொருளையும் நுகர்தற்குச் செல்லும் வேட்கை. (நச். சீவ. 189) |

காதற்பரத்தை — காதலைச் செய்யும் பரத்தை... தலை மகனாற் காதலிக்கப்பட்ட பரத்தை. (இறை. 40)

காதை — கதையையுடையது காதை. (அடி. சிலம்பு. உரைப்பாயிரம்.)

காதை கரப்பு — ஒரு பாட்டினுள் மற்றொரு பாட்டுக்கு எழுத்து உளவாய்ச் சொற் புகாமே பாடுவது. (யாப். 96)

ஒரு செய்யுள் முடிய வெழுதி அதனீற்று மொழிக்கு முதலெழுத்துத் தொடங்கி ஒரோர் எழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொரு செய்யுட் போதுவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

காந்தர்வம் — இருவர் ஒத்தார் தாமே கூடுங் கூட்டம். இதனை யாழோர் கூட்டம் என்று உணர்வது. (இறை. 1)

கொடுப்பாருங் கேட்பாருமின்றித் தலை மகனும் தலைமகளும் தனியிடத்தெதிர் பட்டுத் தாமே கூடுவது. (நம்பி. 117)

காந்தருவ குமாரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக்கொண்டு இயைந்தது போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப் பட்டுப் புணர்வது. (நச். தொல். பொருள். 92)

காப்பு — இரண்டு வகைத்து; நிறை காவல், சிறை காவல் என. (இறை. 27)

தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், கூகை குழறல், கோழி குறை காட்டல் என இவை. (இறை. 16)

காமக்கிழத்தியர் — காமக்கிழத்தியராவார் பின்முறை ஆக்கிய கிழத்தியர். அவர் மூவகைப்படுவர். ஒத்தகிழத்தியரும் இழிந்த கிழத்தியரும் வரையப் பட்டாரும் என. (இளம். தொல். பொருள். 149)

**காமத்தூது** — கேட்டாற் காமத்தையே விரும்புவித்தலிற் பாட்டைக் காமத்தூது என்றார். (நச். சீவ. 2718)

**காமப் புணர்ச்சி** — தலைமகனும் தலைமகளும் தமியராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுத் தம் உணர்வினரன்றி வேட்கை மிகவினாற் புணர்வது. (இறை. 2)

காமப்புணர்ச்சி யெனினும், இயற்கைப் புணர்ச்சி யெனினும், முன்னுறு புணர்ச்சி யெனினும், தெய்வப் புணர்ச்சி யெனினும் ஒக்கும். (இளம். தொல். களவியல். முன்.) *[பார்க்க, களவு (மணம்)]*

**காமம்** — இன்ப நிகழ்ச்சியான் நிகழ்வது. (இளம். தொல். பொருள். 245)

**கார்** — மழை பெய்யுங் காலம். அஃது ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களும். (இளம். தொல். பொருள். 6)

**காரகம்** — தொழிலை இயற்றுவிப்பது. (நச். தொல். சொல். 74)

விளிவேற்றுமை நீங்கலாக ஏனைய வேற்றுமைகளையும் ஏற்கும் சொற்கள் வினை கொண்டு முடியுங்கால் காரகம் எனப்படும். (கோபா. பிரயோ. 1)

**காரகவிபத்தி** — நேரே முடிக்குஞ் சொல் சொல்லோடு வந்த மயக்கங்கள். (சுப்பி. பிரயோ. 14)

**காரணக் கருத்தா** — கருத்தா கிரியைக்குக் காரணமாய் நிற்பது காரணக் கருத்தாவாகும். (வீர. 40, 41)

**காரண காரியம்** — இன்பம் காரணமாகப் பொருள் தேடும் ஆகலானும், பொருளானே அறஞ்செய்யும் ஆகலானும் இன்பமும் பொருளும் ஏற்றம். (இளம். தொல். பொருள். முன்.)

நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரண மாகிய காற்றும், காற்றிற்குக் காரண மாகிய ஆகாயமும். (இளம். தொல். பொருள், முன்.)

**காரணப்பெயர்** காரணத்தான் வரும் பெயர். வடநூலார் காரணத்தை யோகம் என்பர். (சிவ. நன். 62)

யாதேனும் ஒரு காரணம் பற்றி வழங்கி வரும் பெயர். (ஆறு. நன். 62)

**காரணம்** காரியத்தை நிகழ்விப்பது காரணம். (நச். தொல். சொல். 72)

அக்காரணம் முதற்காரணமுந் துணைக் காரணமுமென இருவகைப்படும். (நச். தொல். சொல். 74)

காரியத்திற்கு இன்றியமையாததாய் அதற்கு முற்காலத்திருப்பது. முதற் காரணமும் துணைக்காரணமுமெனக் காரணம் இருவகைப்படும். (ஆறு. நன். 58) [பார்க்க : காரியம்]

**காரணவிடுகுறிப் பெயர்** காரணங்கருதிய பொழுது அக்காரணங் களையுடைய பல பொருள்களுக்கும் செல்வதாயும் காரணம் கருதாதபொழுது இடுகுறியனவாய் நின்று ஒவ்வொரு பொருட்கே செல்வதாயும் உள்ள பெயராம். (ஆறு. நன். 62)

**காரியகாலபக்கம்** சென்று நடாத்தும் தண்டத் தலைவர் போல ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடுஞ் சென்றியைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. (சிவ. தொல். சூ. ப. 25)

**காரியம்** காரியமாவது ஆக்கப்பட்டது. (ஆறு. நன். 58) [பார்க்க. காரண காரியம்]

**காலம்** இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என மூன்று வகைப்படும். (இறை. 56)

காலம் மூன்றாவன இறப்பு, நிகழ்வு, எதிர்வு. இறப்பாவது தொழிலது கழிவு; நிகழ்வாவது தொழில் தொடங்கப்பெற்று முற்றுப் பெறாத நிலைமை. எதிர்வாவது தொழில் பிறவாமை. (இளம். தொல். சொல். 1, 195)

| | |
|---|---|
| | காலம் மூன்றாவன இறப்பும் நிகழ்வும் எதிர்வுமென. (சேனா. தொல். சொல். 200) |
| | காலம் என்பது முன்னும் பின்னும் நடுவு மாகி என்றும் உள்ளதோர் பொருள். (தெய். தொல். சொல். 55) |
| | யாதொரு பொருளும் தோன்றுமளவின் தோன்றி வளருமளவின் வளர்ந்து முதிரு மளவின் முதிர்ந்து அழியுமளவின் அழியு மன்றி உயிர்கள் வேண்டியவாறு ஆகா மையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறு இயற்றுவது காலம். (சிவ. நன். 383) |
| **காலமுன்பு** | கால முன்பென்றது தம்மை யெதிர்ந் தோர்க்குத் தாம் நினைந்த பொழுதே முடிவு காலத்தைச் செய்யும் வலியை. (பழை. புறம். 56) |
| **காலவழு** | காலக்கிளவி தன்னோடியையாக் கால மொடு புணர்வது. (சேனா. தொல். சொல். 11) |
| | இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் மூன்று காலமும் தம்முள் மயங்குதல் காலவழுவாம். (தெய். தொல். சொல். 11) |
| **காவியலிங்கம்** | காரண காரியம் இரண்டும் எச்சமாய் அவற்றாலாய தொழில்கள் அவற்றினை அறிவிக்குங் குறியையுடைத்துக் காவிய லிங்கம். (காரி. மாற. 233) |
| **காற்படை** | காற்படையாவன பரிசேந்திரியம், நயனேந்திரியம். (நச். சீவ. 3081) |
| **காற்றின் குணம்** | போக்கு, வரவு, நோய், கும்பித்தல், பரிச மென விவை காற்றின் குணம். (அடி. சிலம்பு. 3 : 26) |

## கி

| | |
|---|---|
| **கிரியை** | பூசை முதலியன. (அடி. சிலம்பு. 14:11) |
| **கிருகரன் வாயு** | கிருகரன் கோபத்தைப் பண்ணுவிக்கும். (அடி. சிலம்பு. 3:26) |

| | |
|---|---|
| **கிழமை** | (கிழமை இருவகைப்படும்.) தன்னான் வந்த தற்கிழமையும் பிறிதான் வந்த பிறிதின் கிழமையுமென. தன்னென்றது தன்னோடொற்றுமையுடைய பொருள்ள; பிறிதென்றது தன்னின் வேறாகிய பொருளை. (சேனா. தொல். சொல். 79) |
| | தற்கிழமைப் பொருளாவது தன்னோ டொற்றுமையுடையது. பிறிதின் கிழமைப் பொருளாவது தன்னின் வேறாயது. (ஆறு. நன். 300) |
| **கிழவன்** | கிழமையுடைமையின் கிழவன் எனப் பட்டது. (இறை. 3) |
| **கிளர்வரி (நா)** | கிளர்வரி யென்றது நடுநின்றார் இரு வருக்கும் சந்து சொல்லக் கேட்டு நிற்பது. (அடி. சிலம்பு. 8:109) |
| **கிளை நரம்பு** | ஐந்து நரம்பு; என்னை? கிளையெனப்படுவ கிளக்குங்காலைக் குரலே இளியே துத்தம் விளரி கைக்கிளை யெனவிவை. (அடி. சிலம்பு. 8:33) |

### கீ

| | |
|---|---|
| **கீதாங்கம்** | கீதத்துக்கு வாசிப்பது. (அடி. சிலம்பு. 3:14) |
| **கீதானுகம் (இ)** | கீதத்துக்கு வாசித்தல். (அரும். சிலம்பு. 3:14) |
| **கீழ்க்கதுவாய் நிரல்நிறை** | மூன்றாம் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப். 95) |

### கு

| | |
|---|---|
| **குக்குடசர்ப்பம்** | காலம் நீட்டித்தாற் பாம்பு குறைந்து ஒரு கோழிப் பறவை நீளம் பறந்து செல்லுவது. (நச். சீவ. 1271) |
| **குஞ்சி** | சிற்றணுக்கன். (நச். சீவ. 437) |
| | ஒருவகை விருது. மிக அருகிற் பிடித்தற் குரியது. (நச். சீவ. 437. அடிக்குறிப்பு) |
| **குட்டம்** | இடையடிக் குறைந்து வருதல். (பேரா. தொல். பொருள். 427) |

**குடக்கூத்து (நா)** — குடக்கூத்தென்றது பதினோராடலும் காட்டப்படும். (அடி. சிலம்பு. 3:12)

**குடிகோள்** — கீழ்வாழ்வாரை நலிதல்.
(இளம். தொல். பொருள். 254)

தாரமுஞ் சுற்றமுங் குடிப்பிறப்பும் முதலாய வற்றுட் கேடு சூழ்தல்.
(பேரா. தொல். பொருள். 258)

**குடிமை** — குலத்திலுள்ளார் எல்லாரும் சிறப்பாக ஒவ்வாமையின் அச்சிறப்பாகிய ஒழுக்கம் பற்றிய குடிவரவைக் குடிமையென்றார்.
(இளம். தொல். பொருள். 90)

அதற்கு (பிறப்பிற்கு)த் தக்க ஒழுக்கங் குடிமையெனப்படும். குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமை யென்றாரென்பது. அதனை ஊராண்மை யெனவுஞ் சொல்லுப.
(பேரா. தொல். பொருள். 273)

குடிப்பிறப்பிற்கேற்ற வொழுக்கம்.
(நச். தொல். சொல். 57)

**குடை மூன்று** — சந்திராதித்தியம், நித்திய வினோதம், சகல பாசானம். (நச். சீவ. 2813)

**குணம்** — அநந்த சுகம், அநந்த ஞானம், அநந்த வீரியம், அநந்த தரிசனம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா வியல்பு என்பன. (நச். சீவ. 1)

**குயிலுவர்** — இடக்கை முதலான கருவியாளர்.
(அரும். சிலம்பு. 3:130)

**குரவர் ஐவர்** — அரசர், உவாத்தியாயன், தாய், தந்தை, தம்முன் என ஐவர். (நச். சீவ. 252)

**குரவை** — காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடும் கூத்து. (அடி. சிலம்பு. 17)

வரிக்கூத்தின் ஓர் உறுப்பு.
(அடி. சிலம்பு. 3:12)

குரவையென்பது கூறுங்காலைச் செய்தோர் செய்த காமமும் விறலும் எய்தவுரைக்கும் இயல்பிற்று என்ப.

'குரவை யென்பது எழுவர் மங்கையர் செழுநிலை மண்டலக் கடகக் கைகோத்து அந்நிலைக் கொட்ப நின்றாடலாகுமே.' (அடி. சிலம்பு. பதி. 77)

குரவை யென்றது காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபுனைந்தாடுவது. (அடி. சிலம்பு. 3:12)

**குரு** குற்றெழுத்து ஒற்றடுத்தும் நெட்டெழுத்து ஒற்றடுத்தும் நெட்டெழுத்துத் தனித்தும் வருவது குரு. அது மகர வடிவிற்று. (யாப். 95)

**குழல்** வங்கியம்; அதற்கு (மரம்) மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலியென ஐந்துமாம். இவற்றால் மூங்கிலில் செய்வது உத்தமம்; வெண்கலம் மத்திமம்; ஏனைய அதமம். மூங்கில் பொழுது செய்யும்; வெண்கலம் வலிது; மரம் எப்பொழுதும் ஒத்து நிற்கும். (அடி. சிலம்பு. 3:26)

**குழலமைப்பு** நீளம் இருபது விரல்; சுற்றளவு நாலரை விரல். இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதி மரனிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே அணைசு பண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்.

அளவு இருபது விரல்: இதிலே தூம்பு முகத்தின் இரண்டு நீக்கி முதல்வாய்விட்டு இம்முதல்வாய்க்கு ஏழங்குலம் விட்டு வளைவாயினுமிரண்டு நீக்கி நடுவில் நின்ற ஒன்பது விரலினும் எட்டுத் துளையிடப்படவேண்டும். இவற்றுள் ஒன்று முத்திரை யென்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழுவிரல் வைத்து ஊதப்படும்.

துளைகளின் இடைப்பரப்பு ஒருவிரலகலம் கொள்ளப்படும். (அடி. சிலம்பு. 3:26) [பார்க்க: விரலளவு]

**குழூஉக்குறி** ஒவ்வொரு குழுவினுள்ளோர் யாதானும் ஒரு காரணத்தால் ஒரு பொருளினது சொற்குறியை ஒழித்து வேறோர் சொற்குறியான் கூறுவதைக் குழூஉக்குறி என்பர். (சிவ. நன். 267)

ஒவ்வொரு கூட்டத்தார் யாதாயினும் ஒரு காரணம்பற்றி ஒரு பொருளினது சொற்குறியை ஒழித்து வேறொரு சொற்குறியாற் சொல்வது. (ஆறு. நன். 267)

**குளிர்** குளிராவது இவை (தழல், தட்டை) போல்வதோர் கிளிகடி கருவி. [பார்க்க; தழல், தட்டை] (நச். குறிஞ். 43)

**குற்றியலிகரம்** உகரந் திரிந்தும் திரியாதும் யகரமோடியைபின்கண் வந்த இகரம் குற்றியலிகரம் என்று வழங்கப்படும். (யாப். கா. 4)

குற்றியலிகரமாவது...உகரந் திரிந்து மகரமூர்ந்து மகரமோ டியைந்து வரும். நாகியாது உகரம் திரிந்தது. கேண்மியா மகரமூர்ந்தது. (இளம். தொல். செய். 2)

**குற்றியலுகரம்** நெடிற்கீழும், நெடிலொற்றின் கீழும், குறிலிணைக் கீழும், குறிலிணையொற்றின் கீழும், குறினெடிற் கீழும். குறினெடிலொற்றின் கீழும், குறிலொற்றின் கீழும் என்றிவ் வேழிடத்தும் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து உகரம் வந்தால் அது குற்றியலுகரமெனப்படும். (யாப். கா. 4)

நெட்டெழுத்தின் பின்னரும் மூன்றெழுத்து முன்னான மொழியினும் வல்லெழுத்தை ஊர்ந்து வந்த உகரம். (இளம். தொல். செய். 2)

**குறடு** அச்சுக் கோக்குமிடம். (நச். சிறு. 253)

**குறளடி** குறளடி நிலம் நாலெழுத்தும் ஐந்தெழுத்தும் ஆறெழுத்துமாம். (இளம். தொல். செய். 35)

| | |
|---|---|
| குறிப்பறிதல் | தலைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும் தோழி குறிப்பினை அறிதலும் அவள் தான் அவ்விருவர் குறிப்பினையும் அறிதலுமாம். (பரிமே. திருக். அதி. 110) |
| குறிப்பு | சுவைய தன்கண் தோன்றுவது. (அடி.சிலம்பு. 3: 13) |
| | உள்ள நிகழ்ச்சி. (பேரா. தொல். பொருள். 249) |
| | மனத்தானுணரப்படுவது. (சேனா. தொல். சொல். 297) |
| | குறிப்புச் சொல்லுவான் கண்ணதாயினும் அவன் குறித்த பொருளைத் தாங்குறித்து நிற்றல். (சேனா. தொல். சொல். 250) |
| | பொருட்குப் பின் தோன்றிச் சிறிது பொழுது நிகழ்வது. (நச். தொல். சொல். 216; சிவ. நன். 321) |
| | மனத்தான் குறித்து உணரப்படுவது. (சிவ. நன். 443; ஆறு. நன். 442) |
| | மனத்தாற் குறித்து உணரப்படுவது. (ஆறு. நன். 442) |
| குறிப்புவினை | வெளிப்படக் காலம் விளங்காதன குறிப்பு வினை. (இளம். தொல். சொல். 195) |
| | வெளிப்படக் காலம் விளக்காதன குறிப்பு வினை. (சேனா. தொல். சொல். 200) |
| குறிப்பெச்சம் | சொற்பொருளின்றிச் சொல்லுவான் குறித்த பொருள் எஞ்சி நிற்பது. (தெய். தொல். சொல். 422) |
| | குறிப்பான் உணரப்படுவன முறையே எஞ்சி நிற்பது. (சிவ. நன். 360) |
| குறும்பு | சிற்றரண். (பழை. புறம். 98) |
| குறும்போக்கு (இ) | குடகச் செலவும் துள்ளற் செலவும் பாடுதல். (நச். சீவ. 657) |
| குறுவெண்பாட்டு | அளவடியிற் குறிய பாட்டு...... இரண்டடியானும் மூன்றடியானும் வரும். (இளம். தொல். செய். 114) |

| | |
|---|---|
| **குறை எண் நிரல்நிறை** | மூன்று பொருள் நிறுவி ஒருவழி இரண்டே நிறுவுதல். (யாப். 95) |
| **குறைச்சிஃறாழிசைக் கொச்சகம்** | ஈற்றடி குறைந்து சில தாழிசைகளால் வருவது. (யாப். 86) |
| **குறை நயப்பித்தல்** | (குறை நயப்பித்தல் இருவகைப்படும்) மெலிதாகச் சொல்லிக் குறை நயப் பித்தலும், வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தலும் என இவை. (இறை. 10) |
| **குறைப்பஃறாழிசைக் கொச்சகம்** | ஈற்றடி குறைந்து பல தாழிசைகளால் வருவது. (யாப். 86) |
| **குறைபாடு** | ஞானக் குறைபாடும் தருமக்குறைபாடும் ஆள்வினைக் குறைபாடும் (எனக் குறை பாடு மூவகைப்படும்). (இறை. 2) |
| **குறையீற்று ஒரு பொருள் இரட்டை** | இறுதி குறைந்து வரும் ஒரு பொருள் இரட்டை குறையீற்று ஒரு பொருள் இரட்டை எனப்படும். (யாப். 53) |
| **குறையுறவுணர்தல்** | தழையும் கண்ணியுங் கொண்டு பின் னிலை முனியாது நிற்ப, ஒக்கும், இவன் இரந்து பின்னிற்கின்றது இவள் காரண மாகப் போலும் என உணாவது. (இறை. 7) |
| | தலைமகன் தழையும் கண்ணியும் கொண்டு தன்பாற் குறையுற்று நிற்பது கண்டு அதனானே கூட்டமுண்மை அறிதல். (நம்பி. 117) |

### கூ

| | |
|---|---|
| **கூச்சம் (நா)** | தலைவர் இருவரை இடையிட்டுப் பேசப் பட்டு வாரத்தோடிருக்கும். (வீர. 104) |
| **கூட்டமின்மை** | பூப்புத் தோன்றிய மூன்று நாளுங் கூட்ட மின்றி அணுக விருந்து அதன் பின்னர்ப் பன்னிரண்டு நாளும் கூடியுறைப. |
| | பூப்புப் புறப்பட்ட ஞான்றும் மற்றை நாளும் கருத்தங்கில் அது வயிற்றில் அழி தலும் மூன்றாம் நாள் தங்கில் அது சில் |

வாழ்க்கைத்தாகலும் பற்றி முந்நாளுங் கூட்டமின்று.
(நச். தொல். பொருள். 187) [பார்க்க: கூடாக்கலவி]

**கூடசதுக்கம்** ஈற்றடி எழுத்துக்கள் ஏனை மூன்றடி யுள்ளும் கர ந்து நிற்கப் பாடுவது.
(பழை. தண்டி. சொல்ல. 7)

**கூடசதுர்த்தம்** நான்காமடிக்கு எழுத்து முதல் மூன்றடி யுள்ளும் பெருக்கிக் கொள்ளப் பாடுவது.
(யாப். 96)

**கூடம் (இ)** நின்ற நரம்பிற்கு ஆறாம் நரம்பு பகை. அது கூடம் என்னும் குற்றம்.
(அரும். சிலம்பு. 7:48)

இசை நிறவாதது; தன் பகையாகிய ஆறாம் நரம்பினிசையிற் குன்றித் தன் னோசை மழுங்கல். (அடி. சிலம்பு. 8:29)

**கூடாக்கலவி** பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாம் நாளின் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறுவாழ்க்கைத் தாம்; வாழினும் திருவின்றாம்; அதனாற் கூடப் படாது என்ப. (இறை. 44)

**கூடாவுவமை** ஒரு பொருட்குக் கூடாதவதனைக் கூடுவ தாகக் கொண்டு அதனை ஒன்றற்கு உவ மையாக்கி உரைப்பது.
(பழை. தண்டி. பொரு. 5)

**கூத்து (நா)** இருவகைக் கூத்தாவன தேசி, மார்க்கம் என இவை. (அரும். சிலம்பு. 3:12)

இருவகைக் கூத்தாவன: வசைக்கூத்து புகழ்க்கூத்து; வேத்தியல் பொதுவியல்; வரிக்கூத்து வரிச்சாந்திக் கூத்து; சாந்திக் கூத்து விநோதக்கூத்து; ஆரியம், தமிழ்; இயல்புக் கூத்து தேசிக்கூத்து எனப் பல வகைய. (அடி. சிலம்பு. 3:12)

அவைதாம்,
சாந்திக் கூத்தே விநோதக் கூத்தென்
றாய்ந்துற வகுத்தன னகத்தியன் றானே.
(நச். சீவ. 672)

| | |
|---|---|
| **கூதிர்** | ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களும். (இளம். தொல். பொருள். 7) |
| **கூப்பீடு** | கோல் ஐஞ்ஞாறு கொண்டது. (யாப். 95) [பார்க்க: கோல்] |
| **கூர்மன்வாயு** | கூர்மன் இமைப்பும் விழிப்பும் உறக்கமும் உணர்ச்சியும் பண்ணும். (அடி. சிலம்பு. 3:26) |
| **கூலம்** | எண்வகைக் கூலமாவன: நெல்லு புல்லு வரகு திணை சாமை இறுங்கு தோரை யொடு கழைவிளை நெல்லே. (அடி. சிலம்பு. 5:23) |
| | கூலம் எண்வகைத்து; அவை: நெல்லு, புல்லு, வரகு, திணை, சாமை, இறுங்கு, தோரை, இராகி; பதினெண் வகைத் தென்பர் கூத்த நூலார். (அடி. சிலம்பு. பதி. 88:80) |
| **கூழை** | முந்துற்ற மூன்று சீரினும் வந்து இறுதிச் சீரின் வாராதது. (இளம். தொல். செய். 98) |
| **கூழை நிரல்நிறை** | நான்காம் சீர் இன்றி முதல் மூன்று சீர்க் கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப். 95) |
| **கூற்று** | வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைக் கூறுபடுத்துங் கடவுள். (நச். தொல். பொருள். 79) |

**கே**

| | |
|---|---|
| **கேண்மை** | கேள் ஆம் தம்மை. (பரிமே. திருக். 106) |
| **கேவலஞானா வரணீயம்** | திரிகால ஞானத்தையும் மறைப்பது. (நச். சீவ. 3081) |
| **கேவலதரிசனா வரணீயம்** | கேவல ஞானத்துக்கு முன் காணும் காட்சியை மறைப்பது. (நச். சீவ. 3081) |

**கை**

| | |
|---|---|
| **கை (நா)** | கைதான் இரண்டு வகைப்படும். இணையா வினைக்கையும் இணைக்கையுமென. இவை ஒற்றைக்கை, இரட்டைக்கையென்றும் வழங்கப்படும். (அடி. சிலம்பு. 3 : 18) |

| | |
|---|---|
| கைக்கிளை | காட்சி முதலாம் கை காமம். (யாப். 96) |
| | கைக்கிளை ஒருதலை வேட்கை. (இளம். தொல். பொருள். 1) |
| | ஒருதலை வேட்கையாகிய கைக்கிளை. |
| | ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒருதலைக் காமமாகி வரும். (இளம். தொல். களவியல். முன்.) |
| | கை என்பது சிறுமைபற்றி வரும். அது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இடைச்சொல்; கிளை என்பது உறவு; பெருமையில்லாத தலை மக்கள் உறவு என்றவாறு; கைக்குடை, கையேடு, கைவாள், கை ஒலியல், கை வாய்க்கால் எனப் பெருமையில்லாதவற்றை வழங்குப வாகலின். (இளம். தொல். பொருள். 25) |
| | ஒருதலைக்காமம். (வீர. 95) |
| | ஒருமருங்கு பற்றிய கேண்மை. (நச். தொல். பொருள். 1) |
| கைகோள் | கைகோளென்பது ஒழுக்கங் கோடல். (பேரா. தொல். பொருள். 500) |
| கைசிகி (நா) | கைசிகியாவது காமவிகற்பம் உபாங்க மாவது. (வீர. 104) |
| | காமம் பொருளாகக் காமுகராகிய மக்கள் தலைவராக வருவது. (அடி. சிலம்பு. 3 : 13) |
| கைம்மிகல் | ஒழுக்கக்கேடு. (பேரா. தொல். பொருள். 260) |
| கையறல் விலக்கு | தந்தமக்கு வேண்டிய பொருள் மேல் முயலும் ஒழுக்கமின்மை தோன்றக் கூறு வது. (பழை. தண்டி. பொரு. 12) |
| கையறுநிலை | கழிந்தோர் செய்த கழிவழீஇய ஒழிந் தோர் புலம்புங் கையறவு. (வீர. 100) |
| கையாறு | உயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல். (பேரா. தொல். பொருள். 260; நச். கலி. 24:8) |

KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA



கையூழ் (இ) — வண்ணத்திற் செய்த பாட்டெல்லாம் இன்பமாகப் பாடுதல். (நச். சீவ. 657)

கைவட்டணை (நா) — கைவட்டணையாவனை: அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பரிவர்த்திதம் இவை பிறக்கையாம். (நச். சீவ. 1257)

## கொ

கொச்சகக்கலி — ...பொருண் முடியுங்காறும் வரப்பெறு மென்று கொள்க. (இளம். தொல். செய். 155)

கொச்சகம் — ஐஞ்சீரடுக்கி வருவனவும், ஆசிரியவடி வெண்பாவடி வஞ்சியடி கலியடி சொற்சீரடி முடுகியலடி என்று சொல்லப்பட்ட அறுவகையடியானும் அமைந்த பாக்களை உறுப்பாக வுடைத்தாகி வெண்பாவியலாற் புலப்படத் தோன்றுவது. (இளம். தொல். செய். 117)

குறள் வெண்பா முதலாகிய எல்லா வெண்பாக்களும் கொச்சகக்கலிக்கு உறுப்பாய்வரிற் கொச்சகம் (என்பர்). (இளம். தொல். செய். 114)

கொச்சகம் என்பது ஒப்பினாகிய பெயர், ஓராடையுள் ஒருவழியடுக்கியது கொச்சகமெனப்படும். அதுபோல ஒரு செய்யுளுள் பல குறள் அடுக்கப்படுவது கொச்சகம் எனப்படும். (பேரா. தொல். பொருள். 433)

கொச்சக மென்பது ஒப்பினாகிய பெயர். என்னை? பல கோடுபட அடுக்கி யுடுக்கும் உடையினைக் கொச்சகம் என்ப. அது போல சிறியவும் பெரியவும் விராயடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் செய்யப்படும் பாட்டுக்கள் கொச்சகம் எனப்படும். (பேரா. தொல். பொருள். 464; நச். தொல். செய். 152)

**கொட்டு (இ)** — கொட்டாவது அமுக்குதல். கொட்டு அரை மாத்திரை. அதற்கு வடிவு க. (அடி. சிலம்பு. 3:16)

**கொடிஞ்சி** — தாமரைப் பூவாகப் பண்ணித் தேர்த் தட்டின் முன்னே நடுவது. (நச். பது. 752)

**கொடிநிலை** — கொடியது தன்மை கூறுவது. (வீர. 104)

கீழ்த்திசைக் க ண் ணே நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம். (நச். தொல். பொருள். 88)

**கொடிப்பவளம்** — குணமிக்குக் குற்றங்கள் நீங்கியன நிறமும் உருட்சியும் சிந்தூரமும், ஈச்சங்காயும், முசுமுசுக்கைக் கனியும், தாதுவழுதுணம் பழமும் போல்வன. (அடி. சிலம்பு. 14:184)

**கொடியவர்** — கொடியவர் என்றது தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறை கொள் வார், பிறனில் விழைவார் என்றிவர் முதலாயினாரை. இவரை வடநூலார் ஆததாயிகள் என்ப. (பரிமே. திருக். 550)

**கொடுகொட்டி (நா)** — திரிபுரம் தீமடுத்து எரியக் கண்டு இரங் காது கைகொட்டி நின்று ஆடுதலிற் கொடுமை யுடைத்தாதல் நோக்கிக் கொடுகொட்டியென்று (பெயராயிற்று). (அடி. சிலம்பு. 6:43)

**கொடுங்கொட்டி** — கொடுங்கொட்டி என்றார் எல்லாவற்றை யும் அழித்து நின்று ஆடுதலின். (நச். கலி. கடவுள் வாழ்த்து.)

**கொடுத்தல்** — எதிர்கொளல் இடம்நனி காட்டல் கால் கழீஇ அதிர்பட அருச்சனை யடியின் வீழ்தரல் மதுரநன் மொழியொடு மன மெய் தூயராய் உதிர்கநம் வினையென வுண்டியேந்தினார். (நச். சீவ. 2828)

கொடுத்தலும் பலவகைப்படும். அவை: வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல்,

பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்தில் கொடுத்தல் முதலியன. (ஆறு. நன். 298)

**கொடுமை** அறனழியப் பிறரைச் சூழும் சூழ்ச்சி. (இளம். தொல். பொருள். 270)

கேடுசூழ நினையும் தீவினையுள்ளம். (பேரா. தொல். பொருள். 274)

**கொடை** உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளுங் கொடுத்தல். (பேரா. தொல். பொருள். 257)

**கொடை எதிர்தல்** விழுப்பம் உடையாரை நுதலியக்கால் கொண்டு வைத்து விரும்பிக் கொடுத்தல். (இளம். தொல். சொல். 95)

**கொண்டுகூட்டு** சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுமாறு அறிந்து கொள்வது. (இறை. 56)

**கொண்டுகூட்டுப் பொருள் கோள்** கூட்டிப் பொருள் கொள்ளுதல். (யாப். 95)

**கொல்லாமை** யாதொன்றையும் கொல்லாமை. (இளம். தொல். பொருள். 74)

**கொலை** கொல்லுதற் கொருப்படுதல். (இளம். தொல். பொருள். 254)

அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல். (பேரா. தொல். பொருள். 258)

## கோ

**கோட்டகம்** பயிருடைத்தான நீர்நிலை. (நச். சீவ. 41)

**கோட்டுமீன்** சுறா. (நச். சீவ. 2325)

**கோடகம்** தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி யென்னும் ஐவகையிற் சிகரமாயச் செய்த முடி. (நச். சீவ. 2989)

**கோடல்** — கொள்ளத்தகும் பொருள்களை அறிந்து கொள்ளுதல். (நச். தொல். பொருள். 75)

கோடல் பலவகைப்படும். அவை: கேளா தேற்றல், கேட்டேயேற்றல், ஏலா தேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோ னேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போ னேற்றல், உணர்வின்று ஏற்றல், விருப் பாய் ஏற்றல், வெறுப்பாய் ஏற்றல் முதலியன. (ஆறு. நன். 298)

**கோடற்பொருள்** — கொடுத்தற்றொழிலின் செயப்படு பொரு ளைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலை யுடைய பொருளாம். (ஆறு. நன். 298)

**கோடிப்பாலை (இ)** — இளி குரலாகக் கோடிப்பாலை பிறக்கும். (யாப். 96)

**கோடு** — கோட்டிற்கு மரம் கொன்றையும் கருங் காலியுமாம். (நச். பெரு. 4)

**கோமுத்திரி** — இரண்டு வரியாக எழுதி மேலும் கீழும் ஒன்று இடையிட்டு வாசித்தாலும் அது வேயாவது. (யாப். 96)

இரண்டிரண்டு வரியாக ஒரு செய்யுளை எழுதி மேலும் கீழும் ஒன்று இடையிட்டு வாசித்தாலும் அச்செய்யுளேயாவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

ஒரு செய்யுளை இரண்டு வரியாக எழுதி மேலுங் கீழும் ஒன்று இடைவிட்டு வாசிக் கவும் அச்செய்யுளாய் நடத்தல். (காரி. மாற. 294)

**கோல்** — முழம் நான்கு கொண்டது. (யாப். 95)

**கோள்** — ஒரு பாட்டினகத்துப் பொருள் கொண்டு நிற்கும் நிலை. அஃது ஐந்து வகைப்படும். விற்பூட்டு, விதலை யாப்பு, பாசி நீக்கு, கொண்டுகூட்டு, ஒருசிறைநிலை. (இறை. 56)

**கோளி** — பூவாது காய்க்கும் மரம். (பழை. புறம். 58)

ச

**சக்கரம்** நான்காரைச் சக்கரம், ஆறாரைச் சக்கரம், எட்டாரைச் சக்கரம் முதலிய சக்கரமாக வாசிப்பது. (வீர. 179)

சக்கரம் என்பது சக்கரபந்தம்; சக்கரபந்தமாவது தேரினதுருள் போல் சக்கரம் வரைந்து அதனுள் நடு, ஆர், குறடு, சூட்டு இவைகளில் எழுத்துக்களைப் பந்திப்பது. சக்கரம்—தேரினதுருள்; ஆர்—அதனகத்து செறிக்கப்பட்ட கதிர் அல்லது ஆரக்கால்; குறடு—ஆரக் கால்களுக்கு அடியில் உள்ள குடத்தின் வளைவான பாகம்; சூட்டு—வட்டை. (பழை. தண்டி. சொல்ல. 7)

**சக்குதரிசனாவரணீயம்** கண்ணாலறியும் அறிவுக்கு முன் காணுங் காட்சியை மறைப்பது. (நச். சீவ. 3081)

**சங்கம் (நா)** பெருவிரல் நிமிர ஒழிந்த நான்கு விரலும் வளைந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3 : 18)

**சங்கிருதம்** சங்கிருதம் புத்தேளிர் மொழியாகும். (பழை. தண்டி. பொது. 25)

**சங்கீரணம் (நா)** பாஷண்டன் தலைமகனாய்த் தோழியரே, கணிகையரே, தூதரே, அலிகளே, பேடியரே என்றிவரை யுடைத்தாய்க் கடைக்கண் சந்தியின்றி அங்கமொன்றாவது. (வீர. 104)

**சங்கேதம்** சாதிபற்றியும் கடவுள் பற்றியும் பலர்க்கு உளதாம் ஒருமை. (பரிமே. திருக். 735)

**சட்டகம்** யாப்பதிகாரத்திற் கிடந்த முதல்வரி மொழிவகை கோள் உட்பெறு பொருள் என்றபடியே செய்யுளைத் தெரிந்து இன்ன சட்டகம் என்று சொல்வது. (வீர. 88)

**சத்திதத்துவம்** சிவ தத்துவத்தினின்றும் சத்தி சத்துவம் தோன்றும். (பேரா. திரு. 12 : 23)

**சத்துவம்** சத்துவமாவது குறிப்பின்கண் நிகழ்கின்ற நிகழ்ச்சி. (அடி. சிலம்பு. 3 : 13)

சத்துவந்தான் பத்து வகைப்படும். மெய்ம் மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்த்தல்' நடுக்க மெடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற் சிதைவு எனவிவை. (அடி. சிலம்பு. 3 : 13)

**சதாசிவ தத்துவம்** சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்றும். (பேரா. திரு. 12 : 23)

**சதுக்கம்** நாற்சந்தி. (நச். திரு. 225)

**சதுரம்** சுட்டு விரலும் நடுவிரலும் அணிவிரலும் தம்முள் சேர்ந்து இறைஞ்சப் பெருவிரல் அகம்வர வைத்துச் சிறுவிரல் பின்னே நிமிர்ந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3 : 18)

**சந்தத் தாண்டகம்** சந்த அடியும் தாண்டக அடியும் விரவி ஓசை கொண்டு வந்தால் அவை சந்தத் தாண்டகம் என்றும் தாண்டகச் சந்தம் என்றும் வழங்கப்படும். (யாப். 95)

சந்த அடி பலவாய் வருவது. (யாப். 95)

**சந்தி** நால்வகைச் சொல்லும் ஒன்றோடொன்று சந்தித்தலான் வரும் தோன்றல் திரிதல் கெடுதல்கள் சந்தியாம். (சிவ. நன். 133)

**சந்தி (நா)** சந்தியாவது சந்தியும் சந்தியங்கமும் என இரண்டு வகைப்படும். (வீர. 104)

சந்தி ஐந்து வகைப்படும். அவை முகமும், பயிர் முகமும், கர்ப்ப முகமும், வைரி முகமும், நிருவாணமும் என இவை. (வீர. 104)

சந்தி ஐந்து வகைப்படும். அவை முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் எனஇவை. (அடி. சிலம்பு. 3 : 13)

**சந்தியக்கரம்** தனி எழுத்தின் சேர்க்கையால் அமையும் எழுத்து. (கோபா. பிரயோ. 5)

**சந்தியங்கம் (நா)** சந்தியங்கம் அறுபத்து நான்கு. அவை, முகத்திலங்கம் பன்னிரண்டும், பயிர்முகத்தி

லங்கம் பதின்மூன்றும், கர்ப்பமுகத்தின் பேதம் பன்னிரண்டும், வைரிமுகத்தின் அங்கங்கள் பதின்மூன்றும், நிருவாண முகத்தின் அங்கங்கள் பதினான்கும் என. (வீர. 104)

**சமசந்தத் தாண்டகம்** சந்த அடியும் தாண்டக அடியும் ஒத்து வருவது. (யாப். 95)

**சமநடை வெண்பா** ஈற்றடி எழுத்தும் ஏனையடி எழுத்தும் ஒத்து வருவது. (யாப். 95)

**சமநிலை வெண்பா** நான்கடியான் வருவன சமநிலை வெண்பா எனப்படும். அவற்றுள் இரண்டாமடியின் இறுதிக்கண் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசை வெண்பா எனவும், ஒரூஉத்தொடை பெறாதன வற்றை இன்னிசை வெண்பா எனவும் வழங்கப்படும்.
(இளம். தொல். செய். 114)

**சமய ஆற்றல்** இச்சொல் இப்பொருளை உணர்த்துக என்னும் இறைவனுடைய உடன்பாட்டால் உண்டாய சக்தி. (கோபா. பிரயோ. 18)

**சமவியல் வெண்பா** ஈற்றடி எழுத்தினோடு ஏனைய எழுத்துச் சில ஒத்தும் சில ஒவ்வாதும் வருவது. (யாப். 95)

**சமாதான வுருவகம்** ஒரு பொருளை நன்றாக உருவகஞ் செய்து அதனையே தீங்கு தருவதாகக் கூறி அத் தீங்கும் அதனானே வருகின்றதன்றென்று அதற்குப் பிறிதோர் காரணங்கூறுவது. (பழை. தண்டி. பொரு. 90)

**சமாதி (நா)** (யோகத்துள் குறிக்கப்பட்ட) அம்முதற் பொருளொடு தான் பிறனாகத் தகையது சமாதி. (அடி. சிலம்பு. 14: 11)

**சமாவர்த்தனம்** விவாகத்திற்கு முன்பு செய்யப்படும் ஒரு வகைச் சடங்கு.
(நச். சீவ. 485. அடிக்குறிப்பு)

| | |
|---|---|
| **சமானம்** | குருவும் இலகுவும் புணர்ந்து முற்ற வருவதும் முற்றக் குருவேயாயும் முற்ற லகுவேயாயும் வருவதுமாகும். (யாப். 95) |
| **சமானவாயு** | சமானவாயு அறுவகைச் சுவையையும், அன்னத்தையும் பிரித்து எழுவகைத் தாதுவின்கண்ணும் கலப்பிக்கும். (அடி. சிலம்பு. 3; 26) |
| **சமுச்சயவுவமை** | அதனானேயன்றி இதனை இஃது ஒப்பது இதனானும் என்பது. (பழை. தண்டி. பொரு. 5) |
| | இதனானேயன்றி இதனை ஒப்பது; இதனானும் ஒக்கும் என்பது. (காரி. மாற. 101) |
| **சரியை (இ)** | சரியை அலகிடல் முதலியன. (அடி. சிலம்பு. 14: 11) |
| **சருப்பதோபத்திரம்** | எட்டு எழுத்தான் இயன்ற நான்கு வரியாம். அவை மாலை மாற்றும் சுழிகுளமுமாய் ஒருங்கு வரச் சொல்லுவது. (யாப். 96) |
| | எல்லா எழுத்தும் மொழிக்கு முதலா யினவே நிறுவி ஓரெழுத்துக்கு ஓரடியாகப் பாடிப் பொருள் முடிப்பது. (யாப். 96) |
| | எட்டெழுத்தின் அறை அறுபத்து நான்கு வரக்கீறி அவை மாலை மாற்றும் சுழிகுளமுமாய் வரப்பாடுவது. (வீர. 179) |
| | ஒரு நிரை எட்டாக அறுபத்து நான்கு அறை கீறி, ஒரு செய்யுள் எவ்வெட்டெழுத்தால் ஓரடியாக நான்கடி பாடி மேனின்று கீழிழியவும் நான்கடியும் எழுதி, கீழ் நின்று மேலேறவும் நான்கடியும் எழுதி மேனின்று கீழிழியவும், கீழ் நின்று மேலேறவும் முதல் தொடங்கி இறுதியாகவும், இறுதி தொடங்கி முதலாகவும் மாலை மாற்றாக நான்கு முகத்தினும் வாசித்தாலும் அச் செய்யுளேயாவது. (பழை. தண்டி. சொல்ல. 7) |

**சல்லாபம் (நா)** ஒரு பொருள்மேற் பேசுவார் தலைமக்கள் இருவராய் ஓரங்கமாய் நிருபனைச் சந்தி யொன்றாது நின்ற சந்தி நான்குடைத் தாவது. (வீர. 104)

**சல்லிகை (இ)** சல்லென்ற ஓசையுடைத்தாதலாற் பெற்ற பெயர். (அடி. சிலம்பு. 3: 27)

**சவன்னதீர்க்கம்** வருமொழி முதலும் நிலைமொழி ஈறும் சுட்டெழுத்துக்களாய் நின்று தொகச் சுட்டெழுத்துக்கு இனம் ஆகிய நெட் டெழுத்து ஒன்று வருதல். (சுப்பி. பிரயோ. 28)

சா

**சாண்** விரல் பன்னிரண்டு கொண்டது. (யாப். 95) [பார்க்க: விரலளவு]

**சாத்துவரி (நா)** தலைமக்களில் அறப்பொருள் உபாங்க மாவது. (வீர. 104)

**சாதி (நா)** வீரம், கூச்சம், அர்ப்பாயம், பேய்க்காரம், வியோகம், பாணம், சல்லாபம், வீழிணி, உத்தாரமடங்கம், பிராசனம் என இவை. (வீர. 104)

**சாந்திக் கூத்து (நா)** நாயகன் சாந்தமாக ஆடிய கூத்து சாந்திக் கூத்தெனப்படும். (அடி. சிலம்பு. 3: 12)

சாந்திக் கூத்தே தலைவ னின்பம்
ஏந்திநின் றாடிய வீரிரு நடமவை
சொக்கம் மெய்யே அவிநய நாடகம்
என்றிப் பாற்படூஉம் என்மனார் புலவர்.
(நச். சீவ. மா. 2; அடி. சிலம்பு. 3: 12)

**சாமம்** இனிதாகக் கூறல். (நச். சீவ. 747)

**சாயல்** மென்மை; அது நாயும் பன்றியும் போலாது மயிலும் குயிலும் போல்வ தோர் தன்மை. (இளம். தொல். பொருள். 243)

விடாயாலுண்டான மென்மை. (பழை. புறம், 262)

ஐம்பொறியாலும் நுகரும் மென்மை.
(நச். சீவ. 5)

ஐம்பொறியால் நுகரும் மென்மை.
(நச். தொல். பொருள். 247)

**சார்த்துவரி (நா)** பாட்டுடைத்தலைவன் பதியொடும் பேரொடும்
சார்த்திப் பாடிற் சார்த்தெனப் படுமே
அதுதான் முகச்சார்த்து முரிச்சார்த்து
கொச்சகச் சார்த்தென மூவகைப்படும்.
(அரும். சிலம்பு. 7: 19)

**சார்பு** அணைந்த சாதியன்றி ஒருவாற்றானியை புடையது சார்பெனப்படும்.
(சேனா. தொல். சொல். 53)

**சார்பு நூல்** (முதனூல் வழிநூல் ஆகிய) நூலுள்ளும் ஒருவழி முடிந்த பொருளை ஓர் உபகாரம் நோக்கி ஒரு கோவைப்பட வைப்பது.
(இறை. 1)

(முதல், வழி ஆகிய) நூலுள்ளும் ஒருவழி முடிந்த பொருளை ஓராசிரியன் யாதானும் ஓர் உபகாரம் நோக்கி ஒரு கோவைப்பட வைப்பது. (யாப்.பாயிரம்.)

சார்பு நூல் என்பதும் ஒன்றுண்டாலெனின் அஃது இருவர் ஆசிரியர் கூறியதற்கு உடம்பட்டு வருதலின் அதுவும் வழிநூலென அடங்கும்.
(இளம். தொல். பொருள். 639)

**சார்பெழுத்து** தம்மொடு தாம்சார்ந்தும் இடஞ்சார்ந்தும் இடமும் பற்றுக்கோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலிற் சார்பெழுத்தென்றாயின. (மயிலை. நன். 60)

சார்ந்து வருதலானும் தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தால் பிறத்தலானும் சார்பெழுத்தாயின.

உயிர் மெய்யொழிந்தன, அகரம் முதலியன போல் தனித்தானும், ககரம் முதலியன போல் அகரமொடு சிவணி

யானும் இலங்கும் இயல்பின்றி. ஒரு மொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையின் சார்பெழுத் தாயின. (சிவ. நன். 60)

**சாரியை** — சாரியையாவது சொல் தொடர்ந்து செல்லும் நெறிக்கண் நின்று அதற்குப் பற்றுக் கோடாகச் சிறிது பொருள் பயந்ததும் பயவாததுமாய் நிற்பது. (அடி. சிலம்பு. பதி. 61-62.)

வேறாகி நின்ற இருமொழி தம்மிற் சார் தற் பொருட்டியைந்து நிற்பது. (நச். தொல். எழுத். 118)

விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கு இயைந்து நிற்றலின் சாரியை யாம். (சிவ. நன். 133)

**சால்பு** — தத்தங் குலத்திற்கேற்ற குணங்களினமைதி (நச். குறிஞ். 15)

**சான்றாண்மை** — நற்குணங்கள் பலவாற்றானும் (அமை தல்). (மணக். திருக். அதி. முன்)

பல குணங்களானும் நிறைந்து அவற்றை ஆள்தல் தன்மை.
(பரிமே. திருக். இதி. 99)

**சான்றோர் தன்மை** — (சான்றோர் தன்மை எட்டாவன.)

குடிப்பிறப்புக் கல்வி குணம் வாய்மை
தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கம்-செருக்கும்
அழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ
டெட்டும்
இழுக்கா வவையின்க ணெட்டு.
(சாமு. புறப். 173)

## சி

**சித்தன்** — சித்த னென்பது பிள்ளையாருக்குத் திருநாமம். (நச். திரு. அடி. 176)

**சித்திர அகவல்** — சீர்தொறும் அகவி வருவன. (யாப். 77)

| | |
|---|---|
| **சித்திர கவி** | மாலை மாற்று முதலிய அருங்கவி பாடும் நன்மையை யுடையான். (யாப். 96) (பார்க்க: கவி) |
| **சித்திரப்பா** | நான்கு கூடின எல்லாம் பத்தாகவும், மூன்று கூடின எல்லாம் பதினைந்தாகவும், பிறவாற்றானும் எண் வழுவாது பாடுவது. (யாப். 96; வீர. 179) |
| **சிந்தடி** | ஏழும் எட்டும் ஒன்பதுமாகிய எழுத்தினான் வருவது சிந்தடியாம். (இளம். தொல். செய். 36) |
| **சிந்துதல்** | உள் நிறைதலிற் தெறித்தல். (நச். சீவ. 35) |
| **சிரையைந்து** | கையிரண்டும் காலிரண்டும் நெற்றியுமாக ஐந்து. (நச். சீவ. 1277) |
| **சிலம்பு** | வெற்பின் ஒருபக்கத்துளதாகிய சிறு குவடு. (பேரா. திரு. 12 : 16) |
| **சிலேடையுருவகம்** | ஒரு பொருளையொரு செய்யுளகத்து இரு பொருள் பயப்பதாகப் பலவிடத்தினும் புணர்த்திறுதியினும் மிகுபொருள் பயப்பதாக வுருவகஞ் செய்வது. (காரி. மாற. 120) |
| **சிறப்பசை** | நேரசைகட்கும் நிரையசைகட்கும் ஓதிய எழுத்துக்கள் மொழியாய் நிற்பின் சிறப்பசையாகும். (யாப். 8) |
| **சிறப்பில் அசை** | நேரசைகட்கும் நிரையசைகட்கும் ஓதிய எழுத்துக்கள் மொழிக்கு உறுப்பாய் நிற்பின் சிறப்பில் அசை எனப்படும். (யாப். 8) |
| **சிறப்பில் சீர்** | (சீர்வயின்) வகையுளி சேர்ந்து நிற்பன. (யாப். 10) |
| **சிறப்பு** | உலகத்துள் இயல்பு வகையானன்றி விகார வகையான் பெறுஞ் சிறப்பு. (பேரா. தொல். பொருள். 279) |

**சிறப்புடை அரசியல்** சிறப்புடை அரசியலாவன மடிந்த உள்ளத் தோனையும், மகப்பெறாதோனையும், மயிர் குலைத்தோனையும், அடிப்பிறக் கிட்டோனையும், பெண் பெயரோனை யும், படையிழிந்தோனையும், ஒத்த படை யோடாதோனையும், பிறவும் இத்தன்மை யுடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொருதலும் முதலியன.
(நச். தொல். பொருள். 65)

**சிறப்பு (உவமம்)** சிறப்பு என்பது இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவதனானே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது.
(இளம். தொல். பொருள். 238)

**சிறப்புடைச் சீர்** சீர்வயின் பொருள் பயந்து நிற்பன.
(யாப். 10.)

**சிறப்புப் பாயிரம்** சிறப்புப் பாயிரம் எட்டு வகைப்படும். அவை யாவை எனின் ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற் பெயரும், யாப்பும் நுதலிய பொருளும் கேட்போரும் பயனும் என இவை.
(இறை. 1)

நூன்முகத்து உரைக்க வேண்டுதலில் சிறப்புப் பாயிரம் என்றாயிற்று.
(நம்பி. பாயிரம்.)

சிறப்புப் பாயிரமாவது ஒரு நூன்முகத்து உரைக்கப்படுவது. (மயிலை. நன். 2)

**சிறப்புருவகம்** ஒரு பொருளை எடுத்து அதற்குச் சிறந்த அடைகளை உருபித்து அவற்றானே அதனை உருபித்துரைப்பது.
(காரி. மாற. 120)

**சினம்** கோபத்தின் பின்னாகச் சிறிது பொழுது நிற்பது சினம் (நச். திரு. 135. [பார்க்க. செற்றம்]

**சினை** சினை என்பது உறுப்பு.
(இளம். தொல், சொல். 26)

சீ

| | |
|---|---|
| சீர் | ஓரசைச் சீர் நான்கு. ஈரசைச் சீர் பதினாறு, மூவசைச் சீர் அறுபத்து நான்கு ஆகச் சீர் எண்பத்து நான்கில் ஓரசைச்சீர் நான்கெனவும் அது தளை வழங்கும் வழி இயற்சீரொக்குமெனவும், ஈரசைச் சீர் பதினாறும் சிறப்புடைய இயற்சீர் நான்கும் சிறப்பிலியற்சீர் ஆறும் எனப் பத்தாம் எனவும், ஆசிரிய வுரிச்சீர் ஆறு எனவும் மூவசைச்சீர் அறுபத்து நான்கில் வெண்பா வுரிச்சீர் நான்கெனவும் ஏனைய வஞ்சி யுரிச்சீரெனவும் கூறியவாறு. (இளம். தொல். செய். 30) |
| சீரந்தாதி | இறுதிச் சீர் முதற்சீரோடு சேர்வது. (பேரா. தொல். பொருள். 411) |
| சீரை | துலாக்கோல் தட்டு. (பழை. புறம். 43) |
| சீவன்முத்தி | சீவனுடனிருக்கும் போதே முத்தியை அடைந்திருத்தல். (பேரா. திரு. 16:4) |
| சீறூர் | முல்லை நிலத்து உழுதுண்பார் இருப்பு. (நச். பெரு. 191) |

சு

| | |
|---|---|
| சுகதுண்டம் | சுகதுண்ட மென்பது தொழில்பெறக் கிளப்பிற்<br>சுட்டு விரலும் பெருவிரல் தானும்<br>ஒட்டி யுகிர்நுனை கௌவி முன்வளைந்து<br>அநாமிகை முடங்கப் பேட்டொடு சிறு<br>விரல் தான்மிக நிமிர்ந்த தகுதித் தென்ப.<br>(அடி. சிலம்பு. 3:18) |
| சுங்கம் | கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது. (பரிமே. திருக். 756) |
| சுட்டு | ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட்படுதல். (இளம். தொல். பொருள். 238) |
| சுண்ணப் பொருள் கோள் | சுண்ணம் போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலில் சுண்ணமென்றார். (சேனா. தொல். சொல். 406) |

| | |
|---|---|
| | சுண்ணம் போலச் சிதர்ந்து கிடத்தலின் சுண்ணமாயிற்று. (நச். தொல். சொல். 406) |
| | சுண்ணமென்றது உவமையையும் பொருளையும் துணித்து ஒட்டுதல். (இளம். தொல். பொருள். 309) |
| சுண்ணம் | நவமணிகளும், பொன்னும், சந்தணமும், கருப்பூரம் முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனைய வைத்திடித்தல். (நச். மது. 399) |
| சுத்தம் (நா) | சுத்தமாவது தக்காரை இகழ்ந்து வருவது. (வீர. 104) |
| சுத்தி | பிறர்க்குத் திருநீறு கொடுத்தற்கு இப்பி வடிவாகத் தலையோட்டானமைக்கப்படுவதொன்று. (பேரா. திரு. 16:49) |
| சுமைத்தயிர் | ஆடைத்தயிர். (நச். சீவ. 468) |
| சுரத்தல் | இடைவிடாது சொரிதல். (அடி. சிலம்பு. 1:9) |
| சுராட்டு | அளவழிச் சந்தங்களிற் சீர் ஒத்து ஓர் அடியுள் இரண்டெழுத்து மிக்கு வருவது. (யாப். 95) |
| சுரிதகத்தரவு கொச்சகம் | தரவு ஒன்றாய்ச் சுரிதகம் பெறுவது. (யாப். 86) |
| சுரிதகம் | ஓரிடத்து ஓடாநின்ற நீர் குழியானும் திடரானும் சார்ந்தவிடத்துச் சுரிந்தோடும்; அதனைச் சுரிந்து என்றும் சுழி என்றும் வழங்குவதுபோல் தான் கலியோசையாய் வாராநின்றது வெள்ளையானும் ஆசிரியமானுமாய்த் தக்கதொரு பொருளை உட்கொண்டு நிற்பது. (யாப். 82) |
| | சுரிதகம் எனினும் அடக்கியல் எனினும் வாரம் எனினும் வைப்பு எனினும் போக்கியல் எனினும் ஒக்கும், (யாப். 82; வீர. 115; யாப். கா. 38) |

ஆசிரிய இயலாணாதல் வெண்பா இயலா ணாதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது.
(இளம். தொல். செய். 117)

துள்ளலோசைத்தாகியும் நிரைமுதலாகிய வெண்பா வுரிச்சீர் மிக்கும் சுரிதகம் ஆசிரியத்தானாதல் வெண்பாவானாதல் வரும். (இளம். தொல். செய். 132)

உள்ளுறுப்பின் பொருளினைத் தன்கண் வைக்கப்படுவது சுரிதகம்.
(பேரா. தொல். பொருள். 449)

சுரிதகம் அடக்கியலெனப்படும்.
(பேரா. தொல். பொருள். 433)

**சுருதஞானாவரணீயம்** சுருத ஞானத்தை மறைப்பது.
(நச். சீவ. 3081)

**சுவத்திகம் (நா)** மணிக்கட்டிற் பொருந்திய பதாகை யிரண்டையும் மணிக்கட்டில் ஏற்றி வைப் பது. (அடி. சிலம்பு. 3:18)

**சுவை (நா)** சுவையென்பது காணப்படு பொருளாற் காண்போரகத்தின் வருவதோர் விகாரம்.
(இளம். தொல். பொருள் 245)

சுவைய்ாவன சிங்கார முதலாயுள்ளன என்றாம். அவையிற்றை வீரக்குறிப்பு, பயக்குறிப்பு, உக்கிரக்குறிப்பு, சிங்காரக் குறிப்பு, காருணியக் குறிப்பு, அற்புதக் குறிப்பு, புகழ்க் குறிப்பு, நகைக் குறிப்பு, இழிப்புக் குறிப்பு என்று ஒன்பதாகவுங் கூறுவர். (வீர. 104)

**சுழிகுளம்** எட்டெழுத்தாய் நான்கு வரியும் முற்றுப் பெற்ற பாட்டு முதலும் ஈறும் சுழித்து வாசித்தாலும் அப்பாட்டே ஆவது.
(யாப். 96)

ஒரு செய்யுளை எவ்வெட்டெழுத்தாய் நான்கு வரியாக எழுதி மேனின்று கீழி ழிந்து கீழ்நின்று மேலேறியும், புற நின்று

வந்து உள் முடிய உச்சரித்தாலும், அவ் வரி நான்குமேயாகி அச்செய்யுளாயே முற்றுப்பெறுவது.
(பழை. தண்டி. சொல்ல. 7)

சூ

**சூசி (நா)** சூசி என்பது துணியும் காலை
நடுவிரல் பெருவிரல் என்றிவைத் தம்மில்
அடையுடன் ஒற்றிச் சுட்டுவிரல் நிமிர
ஒழிந்தன வழிவழி முடங்கி நிற்ப
மொழிந்தனர் மாதோ முடிபு
அறிந்தோரே.
(அடி. சிலம்பு. 3:18)

**சூத்திரக்கிடக்கை** சூத்திரக்கிடக்கை நான்கு வகைப்படும். ஆற்றொழுக்கு, அரிமா நோக்கு, தவளைப் பாய்த்து, பருந்து வீழ்க்காடு என. (இறை. 4)

யாற்றொழுக்கு, அரிமானோக்கு, தவளைப் பாய்த்துள், பருந்து விழுக்காடு என்னும் சூத்திரக் கிடக்கை.
(இளம். தொல். 656)

**சூத்திரம்** கருதிய பொருளைக் கைக்கொண்டு கண்ணாடியில் நிழல் போலத் தெரிவுறத் தோன்றச் செய்யப்படுவது.
(யாப். பாயிரம்.)

ஆசிரியத்தானும் வெண்பாவானும் செய்யப்படும். (பேரா. தொல். பொருள். 655)

ஒரு பொருளையே நுதலி வருவது சூத்திரம். (ஆறு. நன். 17)

**சூத்திரம் (உரைத்தல்)** (சூத்திரம்) நான்கு வகையால் உரைக்கப் படும். கருத்துரைத்துக் கண்ணழித்துப் பொழிப்புத் திரட்டி அகலம் கூறல் என.
(இறை. 1)

**சூத்திரம் (வகை)** சூத்திரம் ஆறு வகைப்படும். பெயர் சூத்திரம், விதி சூத்திரம், விலக்கியல் சூத்திரம், நியமச் சூத்திரம், அதிகார சூத்திரம், ஞாபக சூத்திரம் என.
(யாப். பாயிரம்.)

**சூழ்ச்சி** சுழற்சி; அஃதாவது மனத்தடுமாற்றம்.
(பேரா. தொல். பொருள். 260)

சூழ்ச்சி என்பது எண்ணம்.
(இளம். தொல். 256)

**சூழ்தல்** பலருடனும் பழுதற எண்ணுதல்.
(பரிமே. திருக். 380)

## செ

**செங்கடுமொழி** செங்கடுமொழி என்பது கொடிய கடு மொழியேயன்றி மனத்தினான் இனிய ளாகிக் கூறும் கடுமொழி. அஃதாவது இயற்பழித்தல்.
(இளம். தொல். பொருள். 112)

**செந்தமிழ் நிலம்** வையை யாற்றின் வடக்கு மருதயாற்றின் தெற்கு கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்கு.
(இளம். தொல். சொல். 392)

வைகை யாற்றின் வடக்கும் மருத யாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.
(சேனா. தொல். சொல். 398)

**செந்துறை** விகார வகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்தினைப் போலாது உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுவது. இது செந் துறைப் பாடாண் பாட்டு எனப்படும்.
(நச். தொல். பொருள். 82)

**செந்துறைப் பாட்டு** தேவபாணியும் அகப்பொருள் பாடும் பாட்டும் இசைத்தமிழில் வரைந்தோதி னாற் போல செந்துறைப் பாட்டிற்கு உரிய செய்யுள் இவை என்று உரைத்த வில்லை பாடாண் பாட்டின்கண் வருங் காலத்து. எனவே எல்லாச் செய்யுளும் ஆம். (இளம். தொல். பொருள். 80)

**செந்தொடை** விகாரப்படச் செய்யுள் செய்தல்.
(பேரா. தொல். பொருள். 412)

**செந்தொடை மருள்** இனவெழுத்துப் பெற்றுத் தொடையும் தொடை விகற்பமும் போலாமைத் தொடுப்பது. (யாப். 53)

**செந்நடை அந்தாதி** இறுதியடியும் இறுதியும் முதலடியும் முதலும் ஒன்றாய் வராதது. (யாப். 52)

**செப்பலோசை** செப்பலோசை மூன்று வகைப்படும். ஏந்திசைச் செப்பலும் தூங்கிசைச் செப்பலும் ஒழுகிசைச் செப்பலும் என.
(யாப். கா. 22)

அகவிக் கூறாது ஒருவற்கு ஒருவன் இயல்பு வகையானே ஒரு பொருண்மைக் கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை எனப்படும்.
(பேரா. தொல். பொருள். 394)

அழைத்துக் கூறாது ஒருவற்கு ஒருவன் இயல்பு வகையான் ஒரு பொருண்மையைக் கட்டுரைக்கும்கால் எழுந்த ஓசை செப்பலோசை. (நச். தொல். செய். 82)

**செப்பு** செப்பு என்பது சொல்லுதல்.
(இளம். தொல். 206)

செப்புத்தான் ஆறு வகைப்படும். வினாவெதிர் வினாவுதலும் ஏவுதலும் மறுத்தலும் உற்றது உரைத்தலும் உறுவது கூறலும் உடம்படுதலும் என.
(இளம். தொல். சொல். 13)

வினாய பொருளை அறிவுறுப்பது. அஃது இரண்டு வகைப்படும். செல்வன் இறையும் இறைப்பயப்பதும் என.
(சேனா. தொல். சொல். 13)

செப்பு நான்கு வகைப்படும். துணிந்து கூறல் கூறிட்டு மொழிதல் வினாவி விடுத்தல் வாய் வாளாதிருத்தல் என. துணிந்து கூறலாவது தோன்றியது கெடுமோ என்ற வழி கெடும் என்றல். கூறிட்டு மொழிதலாவது செத்தபின் பிறப்பானோ என்றல். வினாவி விடுத்தல்

என்றவழி முட்டை மூத்ததோ பண்ணை மூத்ததோ என்றவழி எம்முட்டைக்கு எப்பனை என்றல். வாய்வாளாமையாவது ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றார்க்கு உரையாடாமை.
(தெய். தொல். சொல். 13)

**செப்புவழு** — வினாயதற்கு இறையாக வரும்.
(சேனா. தொல். சொல். 11)

**செம்பகை (யாழ்)** — தாழ்ந்த விசை இன்பமின்றியிருத்தல்.
(அடி. சிலம்பு. 8:29)

**செம்பாலை** — குரல் குரலாகச் செம்பாலை பிறக்கும்.
(யாப். 96)

**செம்மை** — மனங்கோடாமை.
(இளம். தொல். பொருள். 206)

கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறாகாமை. (பரிமே. திருக். 951)

**செம்மொழிச் சிலேடை** — ஒருவழி நின்ற சொல் வேறுபடாது பல பொருள் தருவது செம்மொழிச் சிலேடை.
(வீர. 170)

ஒருவகையான் நின்று பல பொருள் படுவது. (பழை. தண்டி. பொரு. 50)

**செய்ந்நன்றியறிதல்** — தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை, (பரிமே. திருக், அதி. 11)

பிறர் செய்த தீமையை மறந்து நன்மையை மறவாமை. (மணக். திருக். அதி. முன்.)

**செய்யத்தகாதன** — பெரிய முயற்சியனவும், செய்தால் பயனில்லனவும், அது சிறியதாயினவும், ஐயமாயினவும், பின் துயர் விளைப்பனவும் என இவை.
(பரிமே. திருக். 466)

**செய்யுள்** — இலக்கணம் பிழையாமல் கூற வேண்டுதலானும் ஒரு பொருளைக் குறித்துச் செய்யப்படுதலானும் செய்யுளாம்.
(இளம். தொல். செய். 166)

செய்யுளாவது அடிவரையறையுள்ளனவும் அடிவரையறையில்லனவும் என இரு வகைப்படும்.

அடிவரையுள்ளன ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி எனவும், தாழிசை துறை விருத்தம் எனவும்; அடிவரையில்லன நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு மொழி என அறுவகைப்படும்.
(இளம். தொல். செய். 176)

செய்யுளாவன தனிநிலைச் செய்யுளும் தொடர் நிலைச் செய்யுளும் தனிப்பாதச் செய்யுளும் என. (வீர. 179)

பாட்டுரை நூலே என்னும் செய்யுளியல் சூத்திரத்தாற் கூறியவேழும் அறம் முதலிய மூன்று பொருளும் பயப்ப நிகழ்வது.
(நச். தொல். எழுத்து. பாயிரம்.)

**செய்யுள் செய்தல்** ஒரு பொருள்மேல் பல சொல் கொணர்ந் தீட்டல்.
(சேனா. தொல். சொல். 397)

**செய்யுள் செய்வார் கடன்** செய்யுள் செய்வார் மெய்ப்பாடு தோன்றச் செய்தல் வேண்டும்.
(இளம். தொல். செய். 196)

**செய்யுள் செயல் வகை** யாதானும் ஒரு பொருள்கட் பலசொல் தொடுத்து வழங்குங்கால் குறித்த பொருளை முடிக்க வேண்டுஞ் சொல்லே சேர்த்துக் கூறல் வேண்டும் எனவும் அது மிகாமற் குறையாமற் கூறவேண்டும் எனவும் இலக்கணங் கூறல்.
(இளம். தொல். செய். 74)

**செய்யுள் விகாரம்** பழையதாக விகாரம் பெற்றுவரும் சொற்களல்லது தான் ஒரு சொல்லை விகாரப் படுத்தா தொழிக; விகாரப்படுத்தின் வேறொரு பொருளாம் என்றவாறு.
(நேமி. 91)

**செயப்படுபொருள்** வினை முதற்றொழில் பயனுறுவது.
(சேனா. தொல். சொல். 71)

இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதுமென செயப்படுபொருள் மூன்றாம்.

இயற்றுதலாவது முன்னில்லதனை உண் டாக்குதல்; வேறுபடுத்துதலாவது முன் னுள்ளதனைத் திரித்தல்; எய்தப்படுதலா வது இயற்றுதலும் வேறுபடுத்தலுமின்றி தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றல்.
(சேனா. தொல். சொல். 71)

இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதுமென செயப்படுபொருள் மூன்றாம். அவை முறையே இல்லதனை உண்டாக்கலும், முன்னுள்ளதனைத் திரித்தலும், தொழிற் பயனுறுந் துணை யாய் நிற்றலுமாம்.
(நச். தொல். சொல். 72)

ஒருவன் செய்யும் தொழிலினைத் தானுறு தல். செயப்படுபொருள்தான் இல்ல தொன்றால் உண்டாக்கப்படுதலும், உள்ளதொன்றாய் உடல் வேறுபடுக்கப் படுவதும் உள்ளதொன்றாய் ஒரு தொழில் உறுவிக்கப்படுவதும் உள்ளதொன்றாய் ஒன்றனாலுறப்படுவதும் எனப் பல வகை யாம். (கல். தொல். சொல். 73)

வினைமுதற்றொழில் பயனுறுவது. செயப் படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் சொற்கள். அச்செயப்படுபொருள் கருத்தின்றிச் செய்யப்படுவதும், கருத்துடன் செய்யப் படுவதும், இருமையிற் செய்யப்படுவதும் என மூவகைப்படும். அச்செயப்படு பொருள் அகநிலையாகவும் தானே கருத் தாவாகவும் வரும். (ஆறு. நன். 296)

செயவெனெச்சம் — காரண காரியப் பொருண்மை உணர்த்தும் வழியல்லது செயவெனெச்சம் இறந்தகால முணர்த்தாது.
(சேனா. தொல். சொல். 457)

நிகழ்காலத்தின்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்டாயும், இறந்த காலத்திற் காரணப் பொருட்டாயும், எதிர்காலத்தில் காரியப் பொருட்டாயும் வரும். (சிவ. தொல். சூ. ப. 61)

செயற்கை — ஒரு காரணத்தாலே திரியும் தன்மை.
(சுப்பி. பிரயோ. 5)

செயற்கை அளபெடை — செய்யுட்குப் புலவர் செய்து கொண்டது. (பேரா. தொல். பொருள். 330, நச். தொல். எழுத்து. 6)

செய்யுட்குப் புலவர் ஓசை கருதிச் செய்து கொண்டது செயற்கை அளபெடை.
(நச். தொல். செய். 17)

செயற்கை அன்பு — தன் குணங்களால் தோன்றும் அன்பு.
(இறை.2)

செல்வம் — பொன்னும் மனையும் பூமியும் அடிமையும் முதலாயின. (மணக். திருக். 932)

செல்வமென்பது நுகர்ச்சி.
(பேரா. தொல். பொருள். 259)

செலவு (இ) — ஆளத்தியிலே நிரம்பப் பாடுதல்.
(நச். சீவ. 657)

செவ்வழிப் பாலை (இ) — கைக்கிளை குரலாகச் செவ்வழிப் பாலை பிறக்கும். (யாப். 96)

செவ்வியைபு — பிறவாராது இறுவாய் ஒப்பது. (யாப். 40)

செவ்வெண் — எண்ணிடைச் சொல் தொக்கு நிற்பது.
(ஆறு. நன். 427)

செவிச்சுவை — செவியால் நுகரப்படும் சுவைகளாவன: சொற்சுவையும் பொருட் சுவையும். அவற்றுள் சொற்சுவை குணம், அலங்காரம் என இருவகைத்து. பொருட்சுவை

காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தம் என ஒன்பது வகைத்து.
(பரிமே. திருக். 420)

**செவியறிவுறூஉ** ஒருவர்க்குச் செவியறிவுபடுத்து அவரை வாழ்த்துதல். (நச். தொல். செய். 111)

**செவிலியர்** யாரிடத்தும் மக்களை வளர்ப்பார் செவிலியர்.
(இளம். தொல். பொருள். 114)

**செற்றம்** பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம். (நச். திரு. 132)
[பார்க்க: சினம்]

**செறிவு** அடக்கம். (இளம். தொல். பொருள். 206; நச். தொல். பொருள். 209)

## சொ

**சொக்கக்கூத்து (நா)** சொக்கமென்றது சுத்த நிருத்தம். அது நூற்றெட்டுக் கரணமுடைத்து.
(அடி. சிலம். 3: 12; நச். சீவ. மா 2)

**சொல்** எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை. (இளம். தொல். சொல். 1; கல். தொல். சொல். 1)

எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது. சொல்தான் இரண்டு வகைப்படும் தனிமொழியும் தொடர்மொழியும் என.
(சேனா. தொல். சொல். 1)

உலகத்துச் சொல்லெல்லாம் சங்கிருதம், பாகதம், அவப்பிரபஞ்சம் என மூன்று வகைப்படும். (பழை. தண்டி. பொது. 25)

எழுத்தினா னாக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர்தற்கு நிமித்தமாம் ஓசை. (நச். தொல். எழுத்து. பாயிரம்; நச். தொல். சொல். 1)

எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறிவு றுக்கும் ஓசை.
(நச். தொல். பொருள். 195)

எழுத்தினானியன்று பொருள் அறிவிக்குஞ் சொற்கள். சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தொடர்மொழி தனிமொழியென இருவகைப்படுத்து, அத் தொடர்மொழியை அல்வழித் தொடர் வேற்றுமைத் தொடரென இருவகைப் படும். (தெய். தொல். சொல். 1)

எழுத்தினான் இயன்று பொருள் உணர்வது. (தெய். தொல். சொல். 55)

எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவன் உணர் தற்குக் கருவியாம் ஓசை.
(சிவ. நன். சொல். முன்னுரை)

**சொல் (கூறும் முறை)** எல்லாச் சொற்களையும் கூறுங்கால் பொருள் சிறக்குமிடத்து எழுத்தினை எடுத்தும் அயலெழுத்தினை நலிந்தும் ஏனையெழுத்துக்களைப் படுத்தும் கூறுக. (சிவ. நன். 132)

**சொல் (நா)** சொல் மூன்று வகைப்படும். உட்சொல், புறச்சொல், ஆகாயச்சொல் என. அவை நெஞ்சொடு கூறல், கேட்போர்க் குரைத்தல், தானே கூறல் என்பன.
(அடி. சிலம்பு. 3: 13)

**சொல் முரண்** சொல்லானன்றிப் பொருளான் மாறுபடாமை. (இளம். தொல். செய். 91)

**சொல்லானந்தம்** இயற்பெயர் மருங்கின் மங்கலம் அழியத் தொழிற்சொல் பாட்டுடைத் தலைமகன் மேல் ஏறப் பாடுவது. (யாப். 96)

**சொல்லிசையளபெடை** சொல்லிசை நிறைக்க வரும் அளபெடை யாவது பெயர்ச்சொல் வினையெச்சச் சொல்லின் இசையை நிறைத்தற் பொருட்டு அளபெடுப்பது.(ஆறு. நன். 91)

**சொல்லெச்சம்** சொல் விகற்பங்களின்றிச் சொல் என்னும் சொல் எஞ்சி நிற்பது. (சிவ. நன். 359)

ஒரு சொல்லினான் ஒரு பொருளை விதந்தோதிய வழி அவ்விதப்பினானே பிறிது பொருளைக் கொள்ளுமாறு நிற்றல். (தெய். தொல். சொல். 422)

**சொல்வகை** சொல் வகை நான்கு வகைப்படும். சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என. சுண்ணம் நான்கடியான் வருவது. சுரிதகம் எட்டடியான் வருவது. வண்ணம் நான்கடியான் வருவது. வரிதகம் முப்பத்திரண்டடியான் வருவது. (அடி. சிலம்பு. 3:13)

**சொல்வருநிலை** ஒருசொல்முன் ஒரு சொல் வருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் (வரும்). (இறை. 1)

ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் தொகை நிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என மூன்று வகையான் அடங்கும். (இளம். தொல். சொல். 1)

ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும் தொகாநிலை வகையான் வருதலுமென இரண்டல்லதில்லை. (தெய். தொல். சொல். 1)

**சொல் வழு** சொல்லதிகாரத்தோடு மாறு கொள்வது. (யாப். 95)

**சொற்பொருள்** வடநூலார் சொற்பொருளை வாச்சியம், வியங்கியம், இலக்கணை என மூன்றென்பர். (சிவ. நன். 269)

ஞா

**ஞாபகச் சூத்திரம்** எளிதும் சிறிதுமாக இயற்றற்பாலதனை அரிதும் பெரிதுமாக இயற்றிப் பிறிதொரு பொருளை அறிவிப்பது. (யாப். பாயி.)

**ஞாபகம்** ஞாபகமாவது அறிவிப்பது.
(நச். தொல். சொல். 74)

**ஞாயிறு** தீத்திரளாய் உலகு விளக்குவது.
(தெய். தொல். சொல். 55)

**ஞானம்** வீடு பயக்கும் உணர்வு.
(பரிமே. திருக். அதி. 34)

## த

**தகுதி** அப்பொருட்குரிய சொல்லாற் சொல்லு தல் நீர்மை அன்று என்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டால் கூறுதல்.
(சேனா. தொல். சொல். 17)

குழுவின் வந்த குறிநிலை வழக்கும் இடக் கரடக்கிக் கூறுதலும் மங்கலமரபினாற் கூறுதலும் என. (நேமி. 35)

இதற்கிது தகுமோவெனப் பண்பினா னாதல். தொழிலினானாதல் உறழ நிற் பது. (தெய். தொல். சொல். 17)

தகுதி யென்பது மூன்று வகைப்படும். மங்கல மரபினாற் கூறுதலும், இடக்கர டக்கிக் கூறுதலும், குழூவின்வந்த குறி நிலை வழக்கும் என.
(இளம். தொல். சொல். 16)

பட்டாங்குச் சொல்லுதல் நீர்மையின்மை நோக்கி அவ்வாய்பாடு களைந்து இவ் வாறு சொல்லுதும் என்று உடம்பட்டுச் சொல்லி வருவது. தகுதி யென்றது பொருள்பற்றி அமைந்தது.
(கல். தொல். சொல். 17)

மங்கல மரபினாற் கூறுதலும், இடக் கரடக்கிக் கூறுதலும்குழுவின் வந்த குறிநில வழக்கும் என மூன்று கூறுபடும்.
(கல். தொல். சொல். 17)

**தகுதி வழக்கு** இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்ற மூன்றும் இப்பொருளை அறிதற்கு

அமைந்து கிடந்த இச்சொல்லால் கூறுதல் தகுதியன்று என்று வேறோர் சொல்லால் கூறுதல் தகுதி எனக் கூறுதல் தகுதிவழக்கு ஆகும். (சிவ. நன். 267)

உயர்ந்தோரும் இழிந்தோரும் இவ்வாறு மொழிவது தக்கதென்று கொண்டு வழங்குதலின் தகுதி வழக்கென்றாயின. (மயிலை. நன். 266)

இப்பொருளை அறிதற்கு அமைந்து கிடந்த இச்சொல்லால் சொல்வது தகுதியன்று வேறொரு சொல்லால் சொல்வது தகுதி யென்று நினைந்து கூறுதல். (ஆறு. நன். 267)

**தசநாடிகள்** — தசநாடிகளாவன : இடை, பிங்கலை, சுழு முனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, சங்கினி, பூடாகுகு, கன்னி, அலம்புடை எனவிவை. (அடி. சிலம்பு. 3 : 26)

**தசவாயுக்கள்** — பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் எனவிவை. (அடி. சிலம்பு. 3 : 26)

**தட்டை** — மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி. (நச். குறிஞ். 43)

**தடுமாறு உவமம்** — ஒரு பொருள் ஒருகால் உவமையுமாய் ஒரு கால் பொருளுமாகி ஒரு தொடர்ச்சிக் கண்ணே தடுமாறி வருவது. (காரி. மாற. 101)

**தண்டம்** — ஒழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல். (பரிமே. திருக். உரைப்பாயிரம்)

| | |
|---|---|
| | பின் அவராகாமல் (பகைவராகாமல்) அழித்தல். (நச். சீவ. 747) |
| **தண்டிலம்** | அக்கினியைப் பிரதிஷ்டிக்கிறவிடத்தே சதுரமாகப் பரப்புகிற மணல். (நச். சீவ. 2463) |
| **தணத்தல்** | ஓதல் முதலியவற்றால் சென்று குறித்துக் கூறும் பருவம் பொய்த்தல். (அடி. சிலம்பு. 8 : 61) |
| **தத்திதப் பெயர்கள்** | குறிப்புச் சொற்களும் வினைச் சொற்களும் பிறவும் ஒரு பெயர்ச்சொல் தம்மிலேறிய பிரத்தியத்தை யடையாவாய் வேறு பொருள் பயந்து நிற்பின் அவை தத்திதப் பெயர்கள் எனப்படும். (வீர. 55) |
| **தத்திதன்** | தத்திதன் என்பது பெயர் ஏற்கும் விகுதி களையே குறிக்கும். (கோபா. பிரயோ. 29) |
| **தந்திர உத்தி** | தலை தடுமாற்றந் தந்து புணர்ந்துரைத்த லென்பது தந்திர உத்தி. (யாப். கா. 14) |
| **தந்திரம்** | தந்திரமெனினும், நூலெனினும் ஒக்கும். (இளம். தொல். பொருள். 656) |
| **தந்துரை** | நூற்குள் நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரை. (சிவ. நன். 1) |
| | தந்துரை நூலிலே சொல்லப்பட்ட பொருள் அல்லாதவைகளை அதற்குத் தந்து சொல்வது. (ஆறு. நன். 1) |
| **தபுதாரநிலை** | காதலியை இழந்தோர் காதல்நிலை யென்பது. (வீர. 100) |
| **தரவிணைக்கொச்சகம்** | தரவு இரட்டித்துச் சுரிதகம் பெற்று வருவது. (யாப். 86) |
| **தரவு** | எல்லா உறுப்பின் பொருளையும் தொகுத் துக்கொண்டு தந்து முன் நிற்பது. (யாப். 82) |

முந்துற்றது தரவு.
(இளம். தொல். செய். 128)

சிறுமை நான்கடியாகியும் பெருமை பன்னி ரண்டடியாகியும் வருதல். சிறுமை மூன்றடி யானும் இரண்டடியானும் வரப்பெறும்.
(இளம். தொல். செய். 132)

தரவு எனினும் எருத்தம் எனினும் ஒக்கும்.
(யாப். 82; யாப். கா. 38; வீர. 115; நச். தொல். செய். 152)

முகத்துத் தரப்படுவது.
(பேரா. தொல். பொருள். 444)

முகத்துத் தரப்படுதலின் தரவு; உடம்புந் தலையும் வேறுபாடாக வழங்கும் வகை யான் உடம்பிற்குக் கழுத்துப் போல் இது முன்னிற்றலின் எருத்தென்று பெயர் கூறுப. (நச். சொல். செய். 132)

**தரவு கொச்சகக் கலிப்பா** துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர் நாலடியான் வருவது.
(யாப். கா. 14)

**தருக்கம்** ஏகாந்த வாதமும் அநேகாந்த வாதமும் என்பன. (யாப். 96)

**தருமதியானம்** காட்சி முதலாகச் சொல்லப்பட்ட அவை களான் உயிர்ப் பொருளையும், அதற்கு அநாதியாய் வருகின்ற நல்வினை தீவினைக் குற்ற விளைவுகளையும் அவற்றான் அது நாற்கதியுள் பிறந்து இறந்து வருதலையும், அது செய்யாமல் அவற்றைக் கெடுத்த தற்கு உபாயமாகிய யோக ஞானங்களை யும் அவற்றான் அஃது எய்தும் வீட்டினை யும் அளந்து உன்ளவாறு அறிதல். இத்னை ஆருகதர் தரும தியானம் என்ப.
(பரிமே. திரு. 286)

**தலைதடுமாற்றவுவமை** முதலே வந்த உவமப் பொருளிடையினும், ஈற்றில் வந்த உவமேயப் பொருள் முதலி

னும் இடையில் நின்ற உவமவுருபு இறுதியில் தொக்கதும் விரிந்ததுமாகப் புணர்ப்பது. (காரி. மாற. 101)

**தலைமகள் கடமை** அறம் பொருள் இன்பங்களை வழாமல் தன் குலத்திற்கேற்ற மனைவாழ்க்கையைத் தலைமகள் நடத்துதல். (இளம். தொல். பொருள். 144)

**தலைமகள் குணம்** தலைமகட்கு நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன குணம். (இறை. 2)

**தலைமகள் பண்பு** (துன்பத்தினைத்) தலைமகன் வந்த வழிக் கூறுவாளாயின் தனக்குப் புணர்ச்சியில் காதலில்லையாம். சொல்லாளாயின் அவள் கூறியவதனால் பயனில்லையாம். அதனைக் கலவி இறுதியினும் புலவியினும் கூறப்பெறும். (இளம். தொல். பொருள். 231)

**தலைமகன்** தலைமை யுடைமையின் தலைமகன் என்றாயிற்று. (இறை. 3)

**தலைமகன் அன்பு** (வினைமுற்றி மீளும் தலைவன்) வழியில் இடையில் தங்காது இரவும் பகலுமாக வரும் ... தங்குவானாயின் மனையாள் மாட்டு விருப்பின்றாம். (இளம். தொல். பொருள். 192)

**தலைமகன் குணம்** தலைமகற்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப் பிடி என்பன குணம். (இறை. 2)

**தலைமை விலக்கு** தன்பாற் தலைமை தோன்றக் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**தலையளி** முகம் மலர்ந்து இனிய கூறல். (பரிமே. திருக். 390)

**தலையாகு இன்பா** எல்லாப் பாவும் தன் சீராலும் தன் தளையாலும் வருவன. (யாப். 92)

**தலையாகு எதுகை** சீர் முழுவதும் வருவது. (யாப். 37)

| | |
|---|---|
| தவம் | ஊணும் உறக்கமுங் குறைத்தலும், வெயிலும் பனியும் தாங்கலும், தேவர் வழிபாடு முதலாயினவும் மேற்கொண்டு முயறல். (மணக். திருக். அதி. முன்.) |
| | மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. (பரிமே. திருக். 19) |
| | மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக் கலும், கேடைக்கண் வெயில்நிலை நிற்ற லும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற் கொண்டு அவற்றுள் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர் களை ஓம்புதல், (பரிமே. திருக். அதி. 27) |
| தவளைப் பாய்த்து | தவளைப் பாய்கின்றுழி இடைநிலங் கிடப்பப் பாய்வது போல இறந்தத னோடும் எதிர்வதனோடும் இயைபுபடக் கிடப்பது. (இறை. 4) |
| | தவளைப் பாய்கின்றவிடத்து இடையிடை நிலங் கிடப்பப் பாய்வது போலச் சூத்திரம் இடையிட்டுப் போய் இயைபு கொள்ளு வது. (மயிலை. நன். 18) |
| தவளைப் பாய்த்துள் | இடையறுத் தோடுதல். (இளம். தொல். பொருள். 656) |
| தவிசு | கழுத்து மெத்தை. (நச். சீவ. 202) |
| தழல் | கையால் சுற்றின காலத்துத் தன்னி டத்துப் பிறக்கும் ஓசையாற் கிளி முதலிய வற்றை ஓட்டுங் கருவி; கவணென்பாரும் உளர். (நச். குறிஞ். 43) |
| தழாத்தொடர் | தழாத் தொடராவது நிலைமொழி யானது வருமொழியைப் பொருட் பொருத்தமுறத் தழுவாத தொடர். (ஆறு. நன். 153) |

**தழுவுதொடர்** — பொருட் பொருத்தமுறத் தழுவிய தொடர் தழுவுதொடர். (ஆறு. நன். 153)

**தளை** — நின்ற சீரின் ஈற்றசையும் வரும் சீரின் முதலசையும் தம்முள் ஒன்றுதலும் ஒன்றாமையும் கொண்டு வழங்கப்படும்.
(யாப். 17)

பந்தமெனினும் தளையெனினும் ஒக்கும்.
(யாப். கா. பாயி.)

தளை ஏழு பாகுபட்டன. இவை நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித் தளையென எழுவகையாம்.
(இளம். தொல். செய். 48)

சீரது தொழில்.
(பேரா. தொல். பொருள். 313)

சீரினது தொழிலாய்ப் பாக்களின் ஓசையைத் தட்டு இருசீர் இணைந்ததாகும்.
(நச். தொல். செய்.1)

**தற்கிழமை** — தற்கிழமை ஐந்து வகைப்படும். ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறுபல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய் திரிந் தாய தற்கிழமையும் என.
(இளம். தொல். சொல். 14; நேமி. 44; சேனா. தொல். சொல். 79; நச். தொல். சொல். 80)

**தற்சமம்** — ஆரியச் சொல்லும் தமிழ்ச் சொல்லும் பொதுவாய் வருவன. (பழை. தண்டி. 25)

முழுதும் பொது எழுத்தான் வரும் தற்சமம். (சுப்பி. பிரயோ. 2)

தனக்குச் சமமானது; வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் உரிய பொது எழுத் தான் ஆவது. (கோபா. பிரயோ. 2)

**தற்பவம்** — ஆரியமொழி திரிந்து வருவன. (பழை. தண்டி. பொது. 25)

தன்னிடமிருந்து திரிந்து தோன்றுவது; வடசிறப்பெழுத்துக்கள் தமிழ் மொழிக் குரிய எழுத்துக்களாகத் திரிந்து அமைவது. (கோபா. பிரயோ. 2)

**தறிவலை** — தறியைப் புதைத்து அதனோடே கட்டி நிலத்தில் இட்டு வைத்த வலை. (நச். சீவ. 2768)

**தறுகண்** — அஞ்சத்தக்கன கண்ட இடத்து அஞ் சாமை. (பேரா. தொல். பொருள். 257)

**தன்மை** — தன்மையாவது சாதித்தன்மை; அவை யாவன பார்ப்பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றுதலும், அரசராயின் எடுத்த கழுத்தொடும் அடுத்த மார்பொடும் நடந்து சேறலும், இடைராயிற் கோல்கையும், கொடுமடி யுடையும், விளித்த வீளையும் வெண் பல்லுமாகித் தோன்றலும். (பேரா. தொல். பொருள் 260)

தன்மையென்பது சாதியியல்பு. பார்ப்பார் அரசர் இடையர் குறவர் என்றின்னோர் மாட்டு ஒருவரை ஒருவர் ஒவ்வாமற் கிடக்கும் இயல்பு. (இளம். தொல். பொருள். 256)

**தன்மைப் பன்மை** — தனக்கு ஒருமையல்லதின்மையின் தன்மைப் பன்மையாவது தன்னொடு பிறரை உளப் படுத்ததேயாம். அவ்வுளப்படுத்தல் மூவகைப்படும். முன்னின்றாரை உளப் படுத்தலும், படர்க்கையாரை உளப் படுத்தலும், அவ்விருவரையும் ஒருங்கு உளப்படுத்தலும் என. (சேனா. தொல். சொல். 202)

**தன்வினை** — ஒரு வினையானாற் போலத் தன்மொழீ ஒரு மொழியாம். (கோபா. பிரயோ. 23)

**தனஞ்செயன்வாயு** — தனஞ்செயன் பிராணன் போன பின்னும் உடம்பை விடாது நின்று மூன்றாம் நாள்

உதிப்பித்து உச்சந்தலையில் பிற்கூற்றிலே மூன்று நெற்கிடை வெடித்துப் போகும். (அடி. சிலம்பு. 3:26)

**தனிச்சொல்** — தனிச்சொல் எனினும் இடைநிலை எனினும் கூன் எனினும் ஒக்கும். (யாப். 82)

தனிச்சொல் எனினும் விட்டிசை எனினும் கூன் எனினும் தனிநிலை எனினும் ஒக்கும். (யாப். கா. 38)

தனிச்சொல் எனினும் இடைநிலை எனினும் ஒக்கும். (வீர. 115)

தனி நின்றுஞ் சீராகலின் தனிச்சொல் எனப்படும். (நச். தொல். செய். 132)

**தனித்திணை வழு** — பாலும் இடனுமின்றித் திணை தனியே மயங்குவது. (மயிலை. நன். 374)

**தனி நிலை** — ஒரு சொல்லாய்ப் பொருள் நிரம்பித் தனியே நிற்பது. (யாப். 82)

**தனிநிலை அளபெடைத் தொடை** — சீர்க்கு முன்னும் பின்னும் எழுத்தின்றி ஒரோ வோரெழுத்தே நின்று அளபெடுப்பது. (யாப். 91)

**தனிமொழி** — தனிமொழியாவது சமயவாற்றலால் பொருள் விளக்குவது. (சேனா. தொல். சொல். 1)

பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லும் இடைச் சொல்லும் உரிச்சொல்லுமெனத் தனிமொழி நான்கு வகைப்படும். (சேனா. தொல். சொல். 1)

தனிமொழியாவது சமயவாற்றலால் பொருள் விளங்குவது. (சிவ. நன். 260)

**தனியிடவழு** — தனியிட வழுவாவது திணையும் பாலுமின்றி இடமே மயங்குவது. (மயிலை. நன். 374)

## தா

**தாங்கிய நிலை** — காதலனை இழந்தோள் நிலை. (வீர. 100)

**தாண்டகச் சந்தம்** — சந்த அடியும் தாண்டக அடியும் விரவி ஓசை கொண்டு வந்தால் அவை சந்தத்

தாண்டகம் என்றும் தாண்டகச் சந்தம் என்றும் வழங்கப்படும். தாண்டக அடி பலவாய் வருவது. (யாப். 95)

**தாது** தாது மூன்று வகைப்படும். அவை தமிழ்த் தாதுவும், வடமொழித் தாதுவும், திசைச் சொல் தாதுவுமாம். (வீர. 60)

**தாது நிட்பன்னம்** தாது என்ற வினைப் பகுதியிலிருந்து உண்டானது. (கோபா. பிரயோ. 7)

**தாப்பிசை** தாப்பிசை என்பதற்கு ஊசல் போல் இடை நின்று இருமருங்கும் செல்லும் சொல் என்பது பொருள். (சிவ. நன். 382)

**தாப்பிசைப் பொருள் கோள்** நடுநின்ற சொல் முதலும் இறுதியும் நின்று பொருள் கொள்ளுதல். (யாப். 95)

**தாபதர் மரபு** நீராடல், நிலத்திடைக் கிடத்தல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல்.
(இளம். தொல். பொருள். 74)

**தாம்பிர சூடம் (நா)** நடுவிரலும், சுட்டுவிரலும், பெருவிரலும் தம்மில் நுனியொத்துக் கடிவளைந்து சிறு விரலும் அணி விரலும் முடங்கி நிமிர்வது. (அடி சிலம்பு. 3:18)

**தார்** (மாலை); ஒரு குடிப்பிறந்தார்க்கு உரித்து. (பேரா. தொல். பொருள். 634)

தாரென்பது முந்துற்றுப் பெரும்படை. (நச். தொல். பொருள். 72)

**தாழிசை** ஒருபுடையால் தத்தம் பாவினோடு ஒத்தலாலும் ஒத்த தாழத்தால் இசைத்தலானும் ஒத்த பொருள்—மேற் பெரும்பான்மையும் மூன்றாய்த் தாழ்ந்திசைத்தலானும், எல்லா வடியானும் ஒத்து நடத்தலானும் தாழிசை என்பதூஉம் காரணக்குறி. (யாப். 56)

ஒத்த பொருள் முடிவினால் ஒத்த தாழ்ச்சியால் இசைத்தலானும் தரவிற் குறைந்து

| | |
|---|---|
| | இசைத்தலானும் ஒத்தாழிசை யென்றும் தாழிசை யென்றும் கூறப்படும். (யாப். 82) |
| | தாழிசை எனினும், இடைநிலைப் பாட்டெனினும் ஒக்கும். (யாப். 82; யாப். கா. 38) |
| | ஆசிரியத்தாழிசை, வஞ்சித்தாழிசை, வெண்டாழிசை, கலித்தாழிசை என நான்காம். (இளம். தொல். செய். 175) |
| | தாழிசை எனினும், எண் எனினும், இடைநிலைப் பாட்டெனினும் ஒக்கும். (வீர. 115) |
| | தாழம்பட்ட ஓசையை யுடையது. (பேரா. தொல். பொருள். 461) |
| | தாழம்பட்டு வருதலிற் பெற்ற பெயர். (நச். தொல். செய். 130) |
| **தாளம்** | தாளத்திற்குப் பாணி தூக்குச் சீரென்னும் மூன்று உள. (நச். கலி. கடவுள் வாழ்த்து) |
| **தான்தெரிகருத்தா** | கருத்தா இடந்தெரிந்து நிற்பது தான் தெரிகருத்தாவாகும். (வீர. 40, 41) |
| **தான்தெரியா கருத்தா** | கருத்தா இடந்தெரிந்து நில்லாதது தான் தெரியா கருத்தாவாகும். (வீர. 40, 41) |
| **தானம்** | பகைவர் மனம் மகிழக் கொடுத்தல். (நச். சீவ. 747) |
| | அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல். (பரிமே. திருக். 19) |
| **தானாந்தராயம்** | கொடையினை விலக்குவது. (நச். சீவ. 3081) |

## தி

| | |
|---|---|
| **திகந்தராளம்** | பெருந்திசைகளுக்கு நடுவாய்க் கிடந்த கோணங்களைக் குறித்துத் தொகும் தொகையாம். (வீர. 47) |
| **திங்கள்** | நீர்த்திரளாய் உலகிற்கு அருள் செய்வது. (தெய். தொல். சொல். 55) |

**திசைச்சொல்** — செந்தமிழ் நாட்டை அடையும் புடையும் கிடந்த திசைநாட்டார் வழங்குஞ் சொல். (இளம். தொல். சொல். 391)

**திசைச்சொன் மரபு** — திசைச்சொன் மரபாவது செந்தமிழ் சூழ்ந்த பன்னிரு நிலத்தினும் வழங்கும் மரபு. (இளம். தொல். செய். 76)

**திட்டாந்தம்** — புலவன் தன்னாற் குறித்தவொரு பொருட் கூறுபாட்டிற்குப் பிறிதொரு பொருளின் கூறுபாட்டை அதற்குவமை குறிக்கொளும் படிக்கு உவமை வாய்பாடு தோன்றாது தொகத் தன் வினையாக அப்புலவன் கூறுதல். (காரி. மாற. 139)

**திட்பம்** — குற்றமின்மையின் அலைவற நிற்றல். (சிவ. நன். 18)

**திணை** — திணையென்பது பல்பொருள் ஒரு சொல் லாய்க் கிடந்தது. நிலத்தினையும் திணை யென்ப. குலத்தினையும் திணையென்ப. ஒழுக்கத்தினையும் திணையென்ப. (இறை. 56)

ஒழுக்கம். (நச். தொல். பொருள். 1)

பொருள். (மயிலை. நன். 260; தெய். தொல். சொல். 1)

திணை சாதி; உயர்திணை உயர்வாகிய சாதி; அஃறிணை அல்லாத சாதி. (ஆறு. நன். 261)

**திணை வழு** — ஒரு திணைச்சொல் ஏனைத் திணைச்சொல் லோடு முடியும். (சேனா. தொல். சொல். 11)

உயர்திணை மூன்று பாலும் அஃறிணை யிரண்டு பாலொடு மயங்குதல் திணை வழுவாம். (தெய். தொல். சொல். 11)

திணைவழு நான்காம்; தனித்திணை வழுவும், பாற்றிணை வழுவும் இடத்திணை வழுவும் பாலிடத்திணை வழுவும் என. (மயிலை. நன். 374)

**திரவிய பாணம்** [பார்க்க : கணைகள்]

**திரிசொல்** செய்யுளின்ப நோக்கி அவ்வியற் சொற் களை அவ்வாய்பாடு திரித்து வேறு வாய் பாட்ட வாக்குஞ் செய்யுளுடைய சொல். திரிசொல் செய்யுட்கே உரிய. (இளம். தொல். சொல். 391)

இயற் சொல்லின் வேறுபட்ட சொல். (ஆறு. நன். 272)

**திரிசொல் மரபு** தமிழ் நாட்டகத்தும் பலவகை நாட்டினும் தத்தமக்குரித்தாக வழங்கும் மரபு. (இளம். தொல். செய். 76)

**திரிபங்கி** ஒரு செய்யுளாய் உறுப்பமைந்து ஒரு பொருள் பயப்பதனை மூன்றாகப் பிரித்து எழுத வெவ்வேறு செய்யுளாய்த் தனித் தனியே பொருள் பயந்து தொடையும் கிரியையும் தனித்தனியே காண வருவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

**திரிபதாகை (நா)** பதாகைக் கையின் அணிவிரல் முடக்குவது. (அடி. சிலம்பு. 3 : 18.)

[பார்க்க : பதாகை.]

**திரிபாகி** மூன்றெழுத்தாய் ஒன்றின் பெயராய் முதலும் ஈறும் ஒன்றின் பெயராய் இடையும் ஈறும் ஒன்றின் பெயராயின ஒன்று வாயின் வாசகம் செய்வதும் நிறுவுவதுமாம். (யாப். 96)

மூன்றெழுத்துக்கூட ஒரு மொழியாகியும் அதில் முதலெழுத்துங் கடையெழுத்துங் கூட வேறொரு மொழியாகியும் இடை யெழுத்துங் கடையெழுத்துங்கூட மற்றொரு மொழியாகியும் வருவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

**திரு** செல்வம். (இளம். தொல். பொருள். 90)

கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்.

யாவனொருவன் யாதொரு பொருளைக் கண்டானே அக்கண்டவற்கு அப்பொருள்

மேற்சென்ற விருப்பத்தோடேகூடியவழக்கு; அதன்மேல் அவற்கு விருப்பஞ் சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் அவ்வகையானும் பிறிதொன்றற்கில்லாமையால் திரு வென்றது அழகுக்கே பெயராயிற்று. (பேரா. திரு. 1 : 1)

திளைத்தல் — அறாதொழுகுதல். (நச். சீவ. 519)

## தீ

தீக்குணம் — பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர், வேட்கையென விவை தீக்குணம். (அடி. சிலம்பு. 3 : 26)

தீவினையச்சம் — தீவினையைப் பிறர்க்குச் செய்தலை அஞ்சுதல். (இளம். தொல். பொருள். 74)

## து

துகள் — படை குடி கூழ் அமைச்சு நட்பு அரணாறும் என்னும் இவற்றைப் பாதுகாவாதிருத்தல். (பேரா. தொல். பொருள். 440; நச். தொல். செய். 124)

துணைக்கருவி — முதற்கருவிக்குத் துணையாய் அது காரியப் படுமளவும் உடனிகழ்வது. (ஆறு. நன். 297)

துணைக்காரணம் — முதற் காரணத்திற்குத் துணையாகிய வினை முதலிய எட்டும். (நச். தொல். சொல். 74)

துணைசெயல்விலக்கு — துணை செய்வார் போலக் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

துணைப்பொருள் — துணைப்பொருளாவது ஒப்புமை கூறப் படுவது. (சேனா. தொல். சொல். 16)

தும்பி — யானை. (நச். சீவ. 2248)

துய்த்தல் — விளையப்பட்ட பொருளை அறுத்துப் போரிட்டு கடாவிட்டுத் தூற்றிப் பொலி செய்து கொண்டுபோய் உண்டு மகிழ்வது போல்வது. (அடி. சிலம்பு. 3:13)

துயில் இயல்பு — புணர்ந்து பின்னைத் துயிலுங்காலத்துத் தனியே துயிலுதல் இயல்பு. (நச். மது. 713)

**துவர்** நாற்பான் மரமா நாவ றிரிபிவை
வன்கருங் காலி பத்துந் துவரே.
(நச். சீவ. 623)

**துள்ளலோசை** துள்ளலோசை மூன்று வகைப்படும்; ஏந்திசைத் துள்ளலும், அகவல் துள்ளலும், பிரிந்திசைத் துள்ளலும் என.
(யாப். கா. 22)

துள்ளுதலாவது ஒழுகு நடைத்தன்றி இடையிடை உயர்ந்து வருதல். கன்று துள்ளிற்றென்றாற் போலக் கொள்க.
(இளம். தொல். செய். 79)

வழக்கியலாற் சொல்லாது முரற்கை படு மாற்றால் துள்ளச் சொல்லும் ஓசை.
(பேரா. தொல். பொருள். 396)

**துறவறம்** நாகம் தோலுரித்தாற் போல அகப்பற்றும் புறப்பற்றும் அற்று இந்திரிய வசமறுத்து முற்றத் துறத்தல். (அடி. சிலம்பு. 14:11)

இல்லறத்தின் வழுவாது ஒழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். (பரிமே. திருக். இயல். முன்னுரை)

**துறவறம் (துறை)** சரியை, கிரியை, யோகம், ஞானமென்பன.
(அடி. சிலம்பு. 14:11)

**துறவு** ஒருவன் தவம் பண்ணாநின்ற காலத்து யாதானும் ஒரு தொடர்ப்பாடு உளதாயினும் அதனைப் பற்றறத் துறத்தல்.
(மணக். திருக். அதி. முன்.)

தன்னுடைய பொருளைப் பற்றறத் துறத்தல். (இளம். தொல். பொருள். 74)

புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாம் பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். (பரிமே. திருக். அதி. 35)

**துறை** ஒருபுடையால் தத்தம் பாவிற்குத் துறை போன்று நெறிப்பாடு உடைத்தாய்க்

கிடத்தலானும் எல்லாத் துறை மேலும் இனிது நடத்தலானும் துறை என்பதூஉம் காரணக்குறி. (யாப். 56)

ஆசிரியத்துறை, வஞ்சித்துறை, வெண்டுறை, கலித்துறை என நான்காம். (இளம். தொல். செய். 175)

துனி — உயிர் வாழ்வதற்கண் வெறுப்பு. (பரிமே. திருக். 1223)

## தூ

தூக்கானந்தம் (இ) — கஞ்சத் தாளம் முதலிய கருவிகளோடும் இசைந்த இசைக்கீழ்ப் பாடுதற்கண் அவன் பெயரைச் சார்த்தி உயரவும் இறுகவும் பெயர் பிளந்து பண்ணியும் ஒருவர்க்கும் பெயர் புலனாகாமையும் சொல்லுதல். (யாப். 96)

தூக்கு — தூக்கெனினும் ஓசை யெனினும் ஒக்கும். (இளம். தொல். செய். 77)

தூக்கெனினும் ஓசை இறுதியெனினும் ஒக்கும். (இளம். தொல். செய். 68)

பாக்களைத் துணித்து நிறுத்துதல். (பேரா. தொல். பொருள். 213; நச். தொல். செய். 1)

அடிவரையறையுடையனவாய்ப் பரந்த பாவினை அடிகளால் துணித்துத் தூக்கி ஓசை வேறுபாடு உணர்த்துதலின் தூக்கு ஆயிற்று. (நச். தொல். செய். 81)

தூக்கு (இ) — தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத் தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத் தூக்கு, கழற்றூக்கு, நெடுந்தூக்கு (என ஏழுவகைப்படும்). (அரும். சிலம்பு. 3:16; அடி. சிலம்பு. 3:16)

தூக்காவது தாக்கித் தாக்குதல். தூக்கு இரண்டு மாத்திரை; அதற்கு வடிவு உ. (அடி. சிலம்பு. 3:16)

தூங்கலோசை — தூங்கலோசை மூன்று வகைப்படும். ஏந்திசைத் தூங்கலும், அகவற்றூங்கலும்,

| | |
|---|---|
| | பிரிந்திசைத் தூங்கலும் என. (யாப். கா. 22) |
| **தூங்கிசைச் செப்பலோசை** | இயற்சீர் வெண்டளையான் வருவது தூங்கிசைச் செப்பலோசை. (யாப். கா. 22) |
| **தூங்கிசை யகவல்** | நிரையொன்றாசிரியத் தளையான் வருவது தூங்கிசையகவல். (யாப். கா. 22) |
| **தூசுங்கொளல்** | ஒருவன் ஒரு வெண்பாச் சொன்னால் அதன் ஈற்றெழுத்தே ஈறாக அதன் முதல் எழுத்தே முதலாக மற்றொரு வெண்பா ஈற்றினின்று மேற்பாடுவது. (யாப். 96) |
| | ஒருவன் ஒரு வெண்பாச் சொன்னால் அதன் ஈறே முதல் எழுத்தாக மற்றொரு வெண்பாப் பாடுவது. (வீர. 179) |
| **தூதிற்பிரிவு** | இருபெரு வேந்தரைச் சந்து செய்தற் பொருட்டுப் பிரிதல். (இளம். தொல். பொருள். 27) |
| **தூபம் (நா)** | நிமிர்ந்த நடுவிரலும் சுட்டு விரலும் பாதிப் பட வளைய நிற்பது. (அடி. சிலம்பு. 3:18) |
| **தூய்மை** | மனமாசு இன்மை. (பரிமே. திருக். 159) |
| **தூரான் வயம்** | செய்மைச் சொல்லொடு பொருள் பொருத்தமுறச் சேர்வது. (கோபா. பிரயோ. 19) |
| **தூற்றுதல்** | பலரும் அறியப் பரப்புதல். (பரிமே. திருக். 188) |

## தெ

| | |
|---|---|
| **தெய்வதம்** | தைவதமென்னும் வடமொழிச் சிதைவு. (நச். சீவ. 314) |
| **தெய்வம் (மணம்)** | வேள்வி ஆசிரியர்க்கு வேள்வித் தீ முன் வைத்துக் கொடுப்பது. இதனைத் தெய்வமென்று வழிபடப்பட்டது. (இறை. 1) |
| | வேள்விக் காலத்துத் தீப்பாரித்துத் தீ முன்னர் வேள்வி ஆசிரியர்க்குக் கைக்கு நீர் பெய்து கொடுத்தல். (யாப். 96) |

| | |
|---|---|
| | வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பல் ருள்ளும் ஒருவர்க்கு வேள்வித் தீ முன்னர்க் கொடுப்பது. (இளம். தொல். பொருள். 89) |
| | பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒருவர்க்கு அவ்வேள்வித்தீ முன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது. (நச். சொல். பொருள். 92) |
| | வேள்வி ஆசிரியனுக்குக் கன்னியை அலங் கரித்துத் தீ முன்னர்க் கொடுப்பது. (நம்பி. 117) |
| தெரிதருதேற்றவுவமை | ஐயுற்றதனைத் தெரிந்து துணிவது. (பழை. தண்டி. பொரு. 5) |
| தெரிந்து வினையாடல் | வினை செய்வாரால் செய்யப்படும் வினையும் பலவாதலின் அவரால் செய்யப் படும் வினைகளை அறிந்து அவரை விட்டுச் செய்வித்தல். (மணக். திருக். அதி. முன்.) |
| தெரிநிலை | வினைமுதல் உருபு ஏற்றும் செய்யப்படு பொருளே எனத் தெரிய நிற்றல். (சிவ. நன். 296; சுவாமி. இலக். 31) |
| தெரிநிலை (நா) | எல்லா விரலும் விரிந்து குஞ்சித்து நிற் பது. (அடி. சிலம்பு. 3:18) |
| தெரியாநிலை | வினைமுதலென்று தெரியப்படாமல் வினை முதலாயே நிற்பது. மாடஞ் செய்யப்பட்டது. (சுவாமி. இலக். 26) |
| தெற்றி | கை கோத்தாடும் குரவை. (பழை. புறம். 53) |
| தெறுதல் | அழல நோக்குதல். (இளம். தொல். பொருள். 148) |
| | அழன்று நோக்குதல். (நச். தொல். பொருள். 150) |
| தெறுழ் | காட்டகத்ததொரு செடி; புளிமாவென்று உரைப்பாரும் உளர். (பழை. புறம். 119) |

## தே

**தேசிகம்** — இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வட சொல்லென்று சொல்லப்படாநின்ற சொற்பிரயோகம். (அரும். சிலம்பு. 3:47)

**தேசியம்** — தேசியம் என்பன அவ்வந் நாட்டார் ஆட்சிச் சொல்லேயாய்ப் பிற பாடை நோக்காதன. (பழை. தண்டி. பொது. 25)

**தேர்ச்சி வரி (நா)** — தேர்ச்சி வரி என்றது நாயகன் கிளைகட்குத் தன் துன்பங்களைத் தேடித் தேடிச் சொல்லுதல். (அடி. சிலம்பு. 8:104)

**தேவதத்தன்வாயு** — தேவதத்தன் உடம்பெரிப்பைப் பண்ணுவிக்கும். (அடி. சிலம்பு. 3:26)

## தை

**தைவரல் (இ)** — அநுசுருதி ஏற்றுதல். (நச். சீவ. 657)

## தொ

**தொகை** — வேற்றுமைத் தொகையும் உவமத்தொகையும் வேற்றுமை உருபும் உவமவுருபும் தொக்கமையால் தொகை என்றல் அமையும்; ஒழிந்த வினைத் தொகையும் பண்புத் தொகையும் அவ்வாறு தொக்கு நின்றிலவால் எனின் அவ்வாறு தொகுதலேயன்று தொகையாவது.
(இளம். தொல். சொல். 410)

வேற்றுமை யுருபும் உவம வுருபும் உம்மையும் வினைச்சொல்லீறும் பண்புச் சொல்லீறும் தொகுதலில் தொகை.

அவ்வப் பொருண்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்பட தம்முள் இயைதலில் தொகை.

ஒட்டி ஒருசொல் நீர்மைப்படுதலும் தொகையிலக்கணம்.

ஒரு சொல்லால் தொகையின்மையிற் பிறிதொரு சொல்லொடு தொகுதல்.
(சேனா. தொல். சொல். 412)

பெயரோடு பெயரும் பெயரொடு தொழி லும் தொக்கன தொகை. (சேனா. தொல். சொல். 67)

தொகை யென்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டு உருபு மறைதலை உணர்த்தி நின்றது. (சிவ. நன். 360)

தொகை யென்பது உருபு மறைதல். (ஆறு. நன். 361)

ஒட்டி ஒரு சொல் நீர்மைப்படுதல். (சுப்பி. பிரயோ. 19)

**தொகைச்சொல்** — பொருளுணர்த்தும் சொல்லாயினும் தொழில் உணர்த்தும் சொல்லாயினும் இரண்டு சொல்லும் விட்டிசைத்து நில் லாது ஒட்டி நிற்பது. (தெய். தொல். சொல். 406)

**தொகை நிலை** — தனிநிலைச் சொற்கள் வேற்றுமையாக, அல்வழியாக அவ்வப் பொருள்மேல் பிளவு பட்டிசையாது தம்முள் கூடுவது தொகை நிலை. (சுப்பி. பிரயோ. 19)

**தொகைநிலை (சமயம்)** — பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமை ஒருவழிப் படுப்பது தொகை நிலையாமே. (அடி. சிலம்பு. 14:11)

**தொகையாறு** — வேற்றுமைத் தொகை, உம்மைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமத் தொகை, அன்மொழித் தொகை என்பன. (நேமி. 26)

**தொகையுவமை** — பண்பு முதலியன தொக்கு நிற்பது. (பழை. தண்டி. பொரு. 5)

**தொடர்மொழி** — அவாய் நிலையானும் தகுதியானும், அண்மை நிலையானும் இயைந்து பொருள் விளக்கும் தனிமொழி ஈட்டம். (சேனா. தொல். சொல். 1)

மெய்ப்பொருள் குறிப்பனவும் பொய்ப் பொருள் குறிப்பனவுமென இருவகைப் படும். (சேனா. தொல். சொல். 155)

இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் எனத் தொடர் மொழி இரு வகைப்படும்.
(சேனா. தொல். சொல். 1;. நச். தொல். சொல். 1)

தொடர்மொழியாவது இரு மொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இரு வகைப்படும். அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் தொடரும். (சிவ. நன். 260)

**தொடை** — தொடை யென்பன பூத்தொடை போலச் செய்யுட்குப் பொலிவு (செய்யும்).
(பேரா. தொல். பொருள். 406)

**தொடை (உறுப்பு)** — நெடிலும், அளபெடை யிரண்டும், உயிரும், உயிர்மெய்யும், வல்லினமும், மெல்லினமும், இடையினமும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமுமெனப் பத்துந் தொடைக்கு உறுப்பாம்.
(பேரா. தொல். பொருள். 314)

**தொடையானந்தம்** — அளபெடைத் தொடைப் பாட்டினுட் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்த்தி அளப்பெடுப்பத் தொடுப்பது. (யாப். 96)

**தொழில்** — பொருளினது புடைபெயர்ச்சி.
(சேனா. தொல். சொல். 200; நச். தொல். சொல். 202)

**தொழில் (இ)** — தொழில் நான்கு வகைப்படும். அவை கொட்டு, அசை, தூக்கு, அளவு என்பன.
(அடி. சிலம்பு. 3:16)

**தொழிற்பெயர்** — பெயர்ச்சொல் காலந் தோன்றா எனவே தொழிற்பெயர் காலந் தோன்றுதலும் தோன்றாமையும் உடைய என்பதாம்.

தொழில் நிலைப் பெயர்ச்சொல் காலந் தோன்றா; காலம் ஒட்டும் தொழிற் பெயர் அல்லாவிடத்து என்றவாறு.

காலந்தோன்றாதன: உண்டல் தின்றல் என்பன.

இவை அத்தொழில் மேல் நின்ற பெயர். இனிக் காலம் ஒட்டும் தொழிற் பெய ராவன; உண்டான் தின்றான் என்பன. இவை அத்தொழில் செய்வான் மேல் நின்ற பெயர்.
(இளம். தொல். சொல். 71)

தொழில் மாத்திரம் உணர்த்துவன வெல்லாம் தொழிற் பெயர்.
(சேனா. தொல். சொல். 415)

தொழிற் பெயர் தொழிலின்மேல் நின்ற தொழிற் பெயரும், பொருள்மேல் நின்ற தொழிற்பெயரும் என இருவகைப்படும்... இனிப் பொருள்மேல் நின்றனவும் வினை முதற்பொருள்மேல் நிற்பனவும் செயப் படுபொருள் மேல் நிற்பனவும் என இரு வகைப்படும். (கல். தொல். சொல். 71)

**தொன்மை** — பழைமைத்தாய் நிகழ்ந்த பெற்றி உரைக் கப்படுவனவற்றின் மேற்று. (யாப். 95)

பழையதாகி நிகழ்ந்த பெற்றியுரைக்கப் படுவது. (யாப். கா. 58)

## தோ

**தோரம் (நா)** — இரண்டு கையும் பதாகையாக்கி அகம் புறம் ஒன்றி முன் தாழ்ந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3:18)

**தோரிய மடந்தை** — ஆடி முதிர்ந்தாற் பின்பு ஆடன்மகளிர் காலிற்கு ஒற்றறுத்துப் பாடுவாள். (அடி. சிலம்பு. 6:19)

**தோரையிடைச் செய்யுள்** — [பார்க்க: 'யவாத்திமம்']

**தோல்** — இழுமென்று மெல்லியவாய சொற்களால் விழுமியவாய்க் கிடப்பனவும், எல்லாச் சொற்களோடும் கூடிய பல அடியை உடையவாய்க் கிடப்பனவும் என இரண்டு வகைப்படும். (யாப். 95)

இழும் என்னும் மெல்லியவாகிய சொற் களால் விழுமியவாய்க் கிடப்பனவும்

எல்லாச் சொற்களாலும் பலவடியாய்க் கிடப்பனவும் என இரு திறத்தனவாம். (யாப். கா. 58)

**தோழி** — தோழி என்பாள் குற்றேவல் மகள். (இறை. 5)

பயின்றாரெல்லாரும் தோழியராகார்; அருமறை கிளக்கப்படுதலான் உடன் முலையுண்டு வளர்ந்த செவிலி மகளே தோழி எனப்படுவாள். (இளம். தொல். 123)

**தோற்கருவிகள் (இ)** — பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முடிவு, சந்திர வளையம், மொந்தை, முரசு, கண் விடு தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும் பறையெனத் தோலாற் செய்யப்பட்ட கருவிகள். இவை அகமுழவு, அகப்புற முழவு, புறமுழவு; புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நாண்முழவு, காலை முழவு என எழு வகைப்படும். (அடி. சிலம்பு. 3:27)

**தோற்பாவை** — தோற்பாவை யென்பது தோலாற் பாவை செய்து ஆட்டுவிப்பது. (அடி. சிலம்பு. 3:12)

## ந

**ந** — சிறப்புப் பொருள் உணர்த்துவதோர் இடைச்சொல்; (நச். சீவ. 482)

**நகை** — இகழ்ச்சியிற் பிறப்பது.

இகழ்ச்சி முதலாயினவற்றாற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247, 245)

சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்த லுமென மூன்றென்ப. (பேரா. தொல். பொருள். 251)

**நகை (உவமம்)** நகையினாற் பிறிதொரு பொருள் உணர நிற்றல். (இளம். தொல். பொருள். 238)

**நட்டம்** பிரத்தாரிக்கப்பட்டனவற்றுள் இனைத்தாவது என்று அறிவதன் அலகுநிலை. (யாப். 95)

**நட்பு** நட்புத்தான் இயற்கை செயற்கை என இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்பு முறையான தூஉம், தேய முறை யான தூஉம் என இருவகைப்படும். (பரிமே. திருக். 781)

**நட்பு நரம்பு (இ)** நாலு நரம்பு. (அடி. சிலம்பு. 8:33)

**நட்புருவகம்** ஒரு பொருளை நன்றாக உருவகஞ் செய்து அதனைத் தீங்கு தருவதாகக் கூறி அத் தீங்கு அதனால் வந்ததன்றென்பதற்குப் பிறிதோர் காரணங் கூறுதல். (காரி. மாற. 120)

**நடுக்கம்** நடுக்கமென்பது யாதானுமொரு பொருளை இழக்கின்றோமென வரும் மனநிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 256)

**நடுவுநிலை (நா)** ஒன்பது சுவையுள் ஒன்றென நடக நிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை. (பேரா. தொல். பொருள் 260)

**நடுவு நிலைமை** பகைவர் மாட்டும் நட்டார் மாட்டும் ஒக்க நிற்கும் நிலைமை. (மணக். திருக். அதி. முன்; இளம். தொல். பொருள். 256)

ஒருமருங்கு ஓடாது நிகழும் மனநிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 256)

யாதொன்றானும் விகாரப்படாமை. (இளம். தொல். பொருள். 245)

பகை, நொதுமல், நண்பு என்னும் மூன்று பகுதியானும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை. (பரிமே. திருக். அதி. 12)

**நடை** நடையென்பது (பாக்கள்) இயலுந்திறம் (இளம். தொல். செய். 104)

| | |
|---|---|
| நடையறிபுலவர் | இயலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமை முதல்வனும் முதலாயினோர். (நச். சீவ. 672) |
| நண்பகல் | நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு. (இளம். தொல். பொருள். 11) |
| நம்பி | நம் முதனிலையாக நமக்கு இன்னான் என்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச் சொல். (நச். சீவ. 1909) |
| நரகம் ஏழு | இரத்தினப்பிரபை, சருக்கராப்பிரபை, வாலுகாப்பிரபை, பங்கப்பிரபை, தூமப்பிரபை, தமப்பிரபை, தமத்தமப்பிரபை, எனவிவை. (நச். சீவ. 2817) |
| நரம்பு (இ) | நரம்பு எழுவகைய. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என. (யாப். 96) |
| நல்குரவு | நுகரப்படுவன யாவும் இல்லாமை. (பரிமே. திருக். அதி. 105) |
| நல்ல இராசிகள் | நல்ல இராசிகளாவன: இடபம், சிங்கம், துலாம், கற்கடகம், விருச்சிகம், மிதுனம் எனவிவை. (அடி. சிலம்பு. 3:123) |
| நல்ல நாள் | பூராடம், கார்த்திகை, பூரம், பரணி, இரேவதி, திருவாதிரை, அவிட்டம், சித்திரை, விசாகம், மகம் எனவிவை. (அடி. சிலம்பு. 3:123) |
| நலன் | நலனென்றது அழகு. (பேரா. தொல். பொருள். 279) |
| நலிதல் | பிறர்க்கின்னா செய்து நெருங்குதல். (பேரா. தொல். பொருள். 260) |
| நற்குணம் (மனைவி) | வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டில் தொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின. (பரிமே. திருக். 51) |
| நன்னெறி | அறம் பொருளின்பம் வழுவாத நெறி. (இளம். தொல். பொருள். 144) |

**நாகபந்தம்** இரண்டு பாம்புகள் தம்முள் இணைவண வாக உபதேச முறையான் எழுதி ஒரு நேரிசை வெண்பாவும், ஒரு இன்னிசை வெண்பாவும் எழுதிச் சந்தங்களினின்ற எழுத்தே மற்றை யிடங்களினும் உறுப்பாய் நிற்கப் பாடுவது.

இது நாக உருவத்தில் பந்திக்கப்படுவ தாகலின் நாக பந்தம் எனப்பட்டது. (பழை, தண்டி. சொல்ல. 7)

**நாகரிகம்** அறம் பொருள் இன்பத்தின்கண் நற் குணங்கள் பலவும் உடைமை. (மணக். திருக். 573)

**நாகன்வாயு** நாகன் விக்கல் இடுவிக்கும். (அடி. சிலம்பு. 3:26)

**நாட்டல்** நிலைபெறச் செய்தல். (சேனா. தொல். சொல். 23)

**நாட்டிலமிர்து** செந்நெற் சிறுபயறு சேதா நறுநெய்தீங் கன்னல் கதலியோ டைந்து. (நச், சீவ. 2110)

**நாடகச்சாதி** நாடகச்சாதியாவன நாடகம், பிர கரணம், பாணம், பிரகசநம், டிமம், வியாயோகம், சமவாகரம், வீதி, அங்கம், ஈஹாமிருகம் எனவிவை. (பழை. தண்டி. பொது. 7)

**நாடகம்** கண்டார்க்கு இன்பம் செய்தலின் நாடக மென்றார். (பேரா. திரு. 16:26)

கதை தழுவி வருங் கூத்து. (அடி. சிலம்பு. 3:12; நச். சீவ. 672)

**நாடுகாவல் பிரிவு** நலிவார் உளராக நலிவு காத்தற்குப் பிரியும். (இறை. 35)

**நாண்** பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை. (இறை. 2)

பெரியோர் ஒழுக்கத்து மாறாயின செய் யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 243)

| | |
|---|---|
| | பழி பாவங்களின் மடங்குதல். (பரிமே. திருக். 951) |
| | இழிவாயின செய்தற்கண் விலக்குவது. (பரிமே. திருக். 1133) |
| | செய்யத் தகாதனவற்றின்கண் உள்ள மொடுங்குதல். (நச். தொல். பொருள். 247) |
| நாணம் | பெண்டிர்க்கியல்பாகிய குணம். (நம்பி. 35) |
| நாணல் | தமக்குப் பழி வருவன செய்யாமை. (இளம். தொல். பொருள். 256) |
| நால்வகைத் தேவர் | வசுக்கள், திவாகரர், உருத்திரர், மருத்துவர். (அரும். சிலம்பு. 5:176) |
| | நால்வகைத் தேவராவார் முப்பத்து மூவர்; அவர் வசுக்கள் எண்மரும், திவாகரர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவர் இருவரு மெனவிவர். (அடி. சிலம்பு. 5:176) |
| நாலமிர்தம் | உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. (நச். சீவ. 2827) |
| நாலுறுப்பு (இ) | உக்கிரம் துருவை ஆபோகம் பிரகலை எனவிவை. (அரும். சிலம்பு. 3:150) |
| நாற்கவி | நாற்கவியாவன ஆசு, மதுரம், சித்திரம், வித்தார மென்பனவாம். (நம்பி. பாயி.) |
| நாற்சாதி | ஏகேந்திரிய சாதி நாமகர்மம், துவீந்திரிய சாதி நாமகர்மம், திரீந்திரிய சாதி நாம கர்மம், சதுரிந்திரிய சாதி நாமகர்மம். (நச். சீவ. 3076) |
| நாற்சீரடி | வெண்பாவும், ஆசிரியப்பாவும் கலிப்பா வும் அவ்வடியினால் (வரும்). (இளம். தொல். செய். 64) |
| நாற்சொல் | நாற்சொல்லாவன: இயற்சொல், திரி சொல், திசைச்சொல், வடசொல். (நச். தொல். செய். 80) |
| நாற்பெருந்தெய்வம் | இந்திரன், யமன், வருணன், சோம னென்னும் தெய்வங்கள். (நச். திரு. 160) |

நானெறி — சதுர்க்கதி. அவையாவன: நரககதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி. (நச். சீவ. 374)

நி

நிகழ்காலம் — தொழில் தொடங்கப்பட்டு முற்றுப் பெறாத நிலைமை.

தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சியாகலின் அஃதொருகண் நிற்ப தல்லது இரண்டு கணநில்லாமையின் நிகழ்ச்சி யென்பதொன்று அதற்கில்லை. (சேனா. தொல். சொல். 200)

நிகழ்வு — தொழில் தொடங்கி முற்றுப் பெறாமல் நடக்கின்ற நிலைமை. (நச். தொல், சொல். 202)

நிகோதம் — இரத்தினப் பிரபை முதலிய நரகம் எழினுக்கும் கீழுள்ளது. (நச். சீவ. 2/93. அடிக்குறிப்பு)

நிசாத்து — அளவழிச் சந்தங்களில் சீர் ஒத்து ஓர் அடியுள் ஓர் எழுத்துக் குறைந்து வருவது நிசாத்து. (யாப். 95)

நிடதம் (நா) — முட்டியாக இரண்டு கையும் சமஞ் செய்வது. (அடி, சிலம்பு. 3:18)

நித்தாதி மூன்று — நித்திரா நித்திரையும், பிரசலாப் பிரச லையும், ஸ்தியானக் கிராந்தியுமாம். (நச். சீவ. 3076)

நித்திரா நித்திரை — உறக்கத்தின் மேலுறக்கம். (நச். சீவ. 3066)

நிதரிசனம் — ஒரு பொருளின் பண்பு தொழில் பயன் முதலிய கூறுபாட்டைப் பிறிதொரு பொருள் காட்டுவதாகப் படுத்திப் பிற வினையாற் கூறுதல். (காரி. மாற. 139)

நிந்தை யுவமை — உவமையைப் பழித்து உவமிப்பது. (பழை. தண்டி. பொரு. 5)

உவமையை இகழ்ந்து உவமிப்பது. (காரி. மாற. 101)

**நிம்பிரி** பொறாமை தோன்றுங் குறிப்பு.
(பேரா. தொல். பொருள். 274; நச். தொல். பொருள். 244)

**நியமச்சிலேடை** சிலேடித்தவற்றை நியமித்துச் சொல்லு வது நியமச்சிலேடையாம். (வீர. 170)

சிலேடித்தவற்றை நியமஞ் செய்வது.
(பழை. தண்டி. 51)

**நியமச் சூத்திரம்** முன் ஒன்றனால் முடிய வைத்துப் பின்னும் அதனையே எடுத்துக் கொண்டு விதி முகத்தான் விலக்குவதூஉம் விலக்கும் வகையான் விதிப்பதூஉம் ஆம்.
(யாப். பாயி.)

**நியமம் (சமயம்)** பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்
கற்பன கற்றல் கழிகடுந்தூய்மை
பூசனைப் பெரும்பய மாசாற் களித்த லொடு
பயனுடை மரபினியம மைந்தே.
(அடி. சிலம்பு. 14:11)

**நியமவிலக்குச் சிலேடை** சிலேடித்த பொருளை நியமஞ் செய்து அந்நியமத்தை விலக்குவது.
(பழை. தண்டி. பொரு. 51)

**நியமவுவமை** இன்னதற்கு இன்னதே உவமையாவ தென்று தேற்றேகாரம் புணர்த்துத் துணிந்து சொல்வது.
(பழை. தண்டி. பொரு. 5)

இன்னதற்கு இன்னதே கூவமையென்று தேற்றேகாரம் பெறத் துணிந்து சொல்லு வது. (காரி. மாற. 101)

**நிரனிறை** நிரனிறை இருவகைப்படும். பெயர் நிரனி றையும் வினை நிரனிறையும் என.
(யாப். கா. 58)

**நிரனிறை அணி** சொல்லை நிறுத்தி அடைவே பொருளாலே கண்ணழித்தல் நிரனிறை என்னும் அலங் காரமாம். (வீர. 168)

| | |
|---|---|
| **நிரனிறைத் தொடை** | பொருளைச் சேர நிறுத்திப் பயனையும் சேர நிறுத்தல். (இளம். தொல். செய். 87) |
| **நிரனிறைப் பொருள்கோள்** | வினைச் சொல்லான் வருவதூஉம் பெயர்ச் சொல்லான் வருவதூஉம் அவ்விரு சொல் லான் வருவதூஉம் என நிரனிறை மூன்றாம். (நச். தொல். சொல். 405) |
| **நிருத்தாங்கம் (இ)** | நிருத்தத்திற்கு வாசிப்பது. (அடி. சிலம்பு. 3:14) |
| **நிருத்தானுகம் (இ)** | நிருத்தத்துக்கு வாசித்தல். (அரும். சிலம்பு. 3:14) |
| **நிருத்தி** | நிருவசனம் அல்லது நிருத்தி என்பது ஒரு சொற்கு வாக்கியத் தொடராகப் பொருள் உணர்த்துவதாகும். (கோபா. பிரயோ. 9) |
| **நிருவாணம்** | விளைந்த போகம் விதி வரையால் அறுத்துப் படுத்து வைத்துத் துகளுங் களைந்து கொண்டு உண் மகிழ்ந்தாற் போலக் கொள்வது. (வீர. 104) |
| **நிரையொன்றாசிரியத் தளை** | இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு நிரையாய் ஒன்றுவது நிரையொன்றா சிரியத்தளை. (இளம். தொல். செய். 48) |
| **நிரோட்டம்** | இதழ் குவிக்கும் உயிரும் மெய்யும் தீண்டா மற் பாடுவது. (பழை. தண்டி. சொல்ல. 7) |
| **நிலம்** | நிலமாவது முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. (இளம். தொல். பொருள். 234; சேனா. தொல். சொல். 196) |
| **நிலம் (நா)** | நிலந்தான் வன்பால் மென்பால் இடைப் பாலென்று மூன்று வகைப்படும். அவற்றுள் வன்பாலாவது குழியின் மண் மிகுவது; மென்பாலாவது குறைவது; இடைப் பாலாவது ஒப்பு. (அடி. சிலம்பு. 3:96) |
| **நிலைமண்டில ஆசிரியம்** | எல்லா வடியும் ஒத்து வருவதனை நிலை மண்டில ஆசிரியம் என்ப. (இளம். தொல். செய். 113) |

**நிலைமாறுதல்** — எழுத்துக்கள் ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று தம்முள் வேறின்றி நிலை மாறு தல்.
யாது, யாவது; யாவர், யார்; தசை, சதை. (சுவாமி. இலக். 113)

**நிலையாமை** — மயக்கத்தினால் தானென்று நினைத்திருக் கின்ற யாக்கையும் தனதென்று நினைத் திருக்கின்ற பொருளும் நிலை நில்லாமை, (மணக். திருக். அதி. முன்.)

நிலையாமை மூன்று வகைப்படும்; செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என.
(மணக். திருக். 332)

நிலையாமை மூவகைப்படும். இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என.
(இளம். தொல். பொருள். 74)

நிலையாமை யாவது அறம், பொருள், இன்பம், இளமை, யாக்கை, உயிராதி நிலையாமை. (வீர. 100)

தோற்றம் உடையனயாவும் நிலையுதல் இலவாம் தன்மை.
(பரிமே. திருக். அதி. 34)

**நிலைவெளி விருத்தம்** — அடிதோறும் பொருள் அற்று மண்டில மாய் வராதது. (யாப். 68)

**நிறை** — காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். (இறை. 2)

காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகு தல். (மணக். திருக். 153)

அடக்கம். (இளம். தொல். பொருள். 90)

மறை பிறரறியாமை நெஞ்சினை நிறுத் தல். (பேரா. தொல். பொருள். 273)

நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்துதல்.
(பரிமே. திருக். 57)

மறை பிறரறியாமை.
(பரிமே. திருக். 864)

| | |
|---|---|
| | மறை புலப்படாமை நிறுக்கும் நெஞ்சுடைமை. (நச். தொல். பொருள். 152) |
| | மறை புலப்படாமல் நிறுத்தும் உள்ளம். (நச். தொல். பொருள். 209) |
| **நிறை எண் நிரல்நிறை** | இரண்டு பொருள் நிறுவிப் பின்னும் இரண்டு பொருள் நிறுவுதல். (யாப். 95) |
| **நிறை காவல்** | காப்பன காத்து கடிவன கடிந்து ஒழுகுதல். (இறை. 27) |
| **நிறையிற்று ஒரு பொருள் இரட்டை** | இறுதி குறையாது வரும் ஒருபொருள் இரட்டையாகும். (யாப். 53) |
| **நிறைவு** | அமைதி. (இளம். தொல். பொருள். 206) அறிவோடு கூடிய ஒழுக்கம். (பேரா. திரு. 18:1) |
| **நினைதல்** | விருப்புற்று நினைத்தல்; நின்னை மிகவும் நினைத்தேனென்பது வழக்காதலின். (பேரா. தொல். பொருள். 260) |
| **நினைதல் (சமயம்)** | நிறுத்திய அம் மனம் நிலைதிரியாமற் குறித்த பொருளொடு கொளுத்துவது நினைவே. (அடி. சிலம்பு. 14:11) |

## நீ

| | |
|---|---|
| **நீக்கப் பொருள்** | பிரிவை உண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவை மாத்திரம் தன்னிடத்துடைய பொருளாம். (ஆறு. நன். 299) |
| **நீருருள்** | சகடமாகப் பண்ணி தண்ணீரேற்றி உருட்டுவதொன்று. (நச். சீவ. 1831) |

## நு

| | |
|---|---|
| **நுகர்வு** | இன்ப துன்பங்களை நுகரு நுகர்ச்சி. (நச். தொல். பொருள். 247) |
| **நுதல்** | மெய்யெல்லாம் கோலஞ் செய்தாலும் நுதற்குத் திலகம் தீட்டாக்கால் அவை கோலமாய்த்தோன்றாத தன்மை நுதற்கு உள்து. (நச். கலி 25: 22) |

நூ

**நூல்** — நூல் போறலின் நூல் என்ப; பாவை போல் வாளைப் பாவை யென்றாற் போல...சுகிர்ந்து பரந்த சொற்பரவை களாற் பெரும் புலவன் தனது உணர்வு மாட்சியிற் பிண்டம் படலம் ஒத்துச் சூத்திரம் என்னும் யாப்பு நடைபடக் கோத்தல் ஆயிற்று; அவ்வகை நூற்கப் படுதலின் நூல் எனப்பட்டது. (இறை. பாயி; யாப். பாயி.)

நூல் முத்திறப்படும் முதல்நூலும் வழி நூலும் சார்பு நூலும் என. (இறை. யாப். பாயி; நம்பி.1)

நூல் என்ற சொற்குப் பொருளுரைக் குங்கால் தந்திரமென்னும் வடமொழியை நூலென்று வழங்குவது தமிழ் வழக்கெனக் கொள்க. (இறை. 1. நம்பி. 1)

நூலென்றது நூல் போறலின் நூலென் றொப்பினானாயதோர் ஆகுபெயராம். (நச். தொல். எழுத்து. 1)

**நூல் கற்றல்** — மெய்யாராய்ச்சியாகிய நூலைக் கற்றலும், வேதமும் ஆகமும் கற்றலும், உழ்வும் வாணிகமும் கற்றலும், படைவழங்கல் மநு நீதி கற்றலுமென நால்வகைப்படும். (மணக். திருக். 729)

**நூல் செய்தல்** — தொகுத்துச் செய்தலும், விரித்துச் செய் தலும், தொகை விரிப்படுத்துச் செய் தலும், மொழி பெயர்த்துச் செய்தலும் எனப்படும். (நேமி. பாயி.)

**நூல் செய்வார் மரபு** — உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது அறிவிலாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே. யாதானும் ஒருநூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்து ஓதுவாராயின் ஓதுகின்றதனாற் பயன் இன்றாமாதலால் முன்னூலாசிரியர் விரித்துக் கூறின பொருளைத் தொகுத்துக்

கூறலும் தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய்யும் மரபு என்று உணர்க.
(இளம். தொல். பொருள். முன்.)

**நூல் பெயர் பெறுதல்** நூல் பெயர் பெறுமிடத்துப் பலவிகற்பத் தாற் பெயர் பெறும். என்னை; செய் தானாற் பெயர் பெறுதலும், செய்வித் தானாற் பெயர் பெறுதலும், இடுகுறியாற் பெயர் பெறுதலும், அளவினாற் பெயர் பெறுதலும், சிறப்பினாற் பெயர் பெறு தலும் என்க. (இறை. 1)

**நூலுரைத்தல்** அதுதான் நான்கு வகையாக உரைக்கப் படும். அவை யாவையோ எனின் நூல் நுதலியது உரைத்தலும், நூலுள் அதிகாரம் நுதலியது உரைத்தலும், அதிகாரத்துள் ஒத்து நுதலியது உரைத் தலும், ஒத்தினுட் சூத்திரம் நுதலியது உரைத்தலும் என இவை. (இறை. 1)

**நூழில்** கொன்று குவித்தல்.
(நச். தொல். பொருள் 72)

**நூற்பா அகவல்** விழுமிய பொருளைத் தழுவிய சூத்திர யாப்பினவாய் வருவன. (யாப். 77)

**நூன் மூன்று** அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதி யாகமம். (நச். சீவ. 2813)

## நெ

**நெட்டெழுத்து** நீரும் நீருஞ் சேர்ந்தாற் போலக் குற்றெழுத்து இரண்டொத்து நின்று நீண்டிசைப்பது. (சிவ. தொல். சூ. ப. 35)

**நெடில்** குறிலினது விகாரமே நெடில்.
(சிவ. நன். 72)

**நெடில் மோனை** நெட்டெழுத்து என்னும் மாத்திரை ஒப்புமை நோக்கி இயைந்து இனிது கிடப்பது நெடில் மோனை. (யாப். 37)

**நெடிலடி** பதினைந்தும் பதினாறும் பதினேழும் என மூன்று நிலம் பெறும்.
(இளம். தொல். செய். 38)

நெடுவெண்பாட்டு — அளவின் நெடிய பாட்டு.
(இளம். தொல். செய். 114)

நெறியறியாதார் — ஒருவரால் ஒரு கருமம் ஆகாமை அறிந்தே அவருழைச் சென்று அக்கருமத்திற்கு முயல்வார் (இறை. 5)

## நே

நேராசிரியம் — ஈற்றயலடி முச்சீரான் வருவதனை நேராசிரியம் என்ப.
(இளம். தொல். செய். 113)

நேரொன்றாசிரியத் தளை — இயற்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையொடு நேராய் ஒன்றுவது.
(இளம். தொல். செய். 48)

## நொ

நொச்சி — நொச்சியாவது காவல்.
(நச். தொல். பொருள். 68)

## நோ

நோக்கு — யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங் காறும் பிறிதுநோக்காது அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை... ஓரடிக்கண்ணும் பலவடிக்கண்ணும் நோக்குதல் கொள்க. இஃது ஒரு நோக்காக ஓடுதலும் பல நோக்காக ஓடுதலும் இடையிட்டு நோக்கு தலும் கொள்க.
(இளம். தொல். செய். 100)

மாத்திரை முதலிய உறுப்புக்களைக் கேட் போர்க்கு நோக்குப்படச் செய்தல்.
(பேரா. தொல். பொருள். 313)

மாத்திரை முதலிய உறுப்புக்களை யுடைத் தாய்க் கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல். நோக்குதல்—பயன்படச் செய்தல். (நச். தொல். செய். 1)

மாத்திரை முதலாக நிரம்பும் அடிகளா லாய தொடையுடையவாஞ் செய்யுள்

| | |
|---|---|
| | நடந்த அடி எத்துணையவாயினும் அவை முடியுங்காறும் வெள்ளைமையும் பிள்ளைமையுமின்றி வந்த வாக்கியங் கேட்டோர் மறித்து நோக்கிப் பயன் கொள்வதோர் கருவியாகிய யாப்புக்கால். (காரி. மாற. 233) |
| நோக்கு (நா) | நோக்கென்றது பாரமும் நுண்மையும் மாயமும் முதலாயினவற்றை உடையது. (அடி. சிலம்பு. 3 : 12) |
| நோய் | துன்பம். (இளம். தொல். பொருள். 243) |
| நோய் நான்கு | வெயிலும் காற்றும் நீரும் நிழலும் மிகுதல். (நச். சீவ. 720) |

## ப

| | |
|---|---|
| ப:றொடை வெண்பா | ஐந்தடி முதற் பன்னிரண்டடிகாறும் வருவன பஃறொடை வெண்பா எனப்படும். இதனுள்ளும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத்தொடையின்றி வருவனவற்றை இன்னிசைப் பஃறொடை எனவும் வழங்கப்படும். (இளம். தொல். செய். 114) |
| | புறப்பொருட்கண் வரும் வெண்பாக்களைப் பஃறொடை வெண்பா எனவும், பரி பாடற்கு உறுப்பாய் வரும் வெண்பாக்களைப் பரிபாடல் எனவும், கொச்சகக் கலிப்பாவிற் குறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாவைக் கொச்சகக் கலிப்பா எனவும் (கூறுவர்). (இளம். தொல். செய். 147) |
| பகுதி | கருவிகளாறும் முறையே தன்னியல்பில் நிற்றலின் பகுதியாம். (சிவ. நன். 133) |
| பகைதணிவினைப் பிரிவு | தூதுவர் போலச் சந்து செய்வித்தற்குப் பிரியும் (பிரிவு) (இறை. 35) |
| பகை நரம்பு (இ) | ஆறும் மூன்றும்; கூடமெனினும், பகையெனினும் ஒக்கும். (அடி. சிலம்பு. 8 : 33) |

| | |
|---|---|
| பகைவயிற் பிரிவு | மாற்று வேந்தரொடு போர் கருதிப் பிரிதல். (இளம். தொல். பொருள். 27) |
| | போரைக் குறித்துப் பிரிதலும் அரசர்க்கு உரித்தென்று கொள்க. |
| | இதனுள் அரசன் தலைமகனாயுழிப் பகைதணிவினைப்பிரிவு எனவும், அவனொடு சிவணி ஏனோர் தலைவராயுழி வேந்தற்குற்றுழிப் பிரிவு எனவும் இதனை இருவகையாகக் கொள்க. (இளம். தொல். பொருள். 30) |
| பசாசம் (நா) | பெருவிரலும் சுட்டு விரலுமன்றி ஒழிந்த மூன்று விரலும் தம்மிற் பொலிந்து நிற்பது (அடி. சிலம்பு. 3 : 18) |
| பஞ்சபரமேட்டிகள் | அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள். (அரும். சிலம்பு. 10 : 19) |
| பஞ்சமந்திரம் | அ ஸி ஆ உ ஸா=அ சி ஆ உ சா (என்பதாகும்). (அடி. சிலம்பு. 10 : 99) |
| பஞ்சவாசம் | தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம் கப்பூரஞ் சாதியோ டைந்து. (அரும். சிலம்பு. 5 : 26; அடி. சிலம்பு. 5 : 26) |
| பஞ்சவிருத்தி | மெய்ம் முதலான ஞானேந்திரியங்கள் ஐந்தும், பூமி முதலான மகாபூதங்கள் ஐந்தும், சுவை முதலான தன் மாத்திரைகள் ஐந்தும், வாக்கு முதலானகன்மேந்திரியங்கள் ஐந்தும், மனமுதலாகிய அந்தக்கரணம் நான்கும் சீவனுமாகிய ஐந்து. (சாமு. புறம். 187) |
| பட்டிமண்டபம் | வித்தியா மண்டபம், ஓலக்க மண்டபம் என்ப. (அடி. சிலம்பு. 5 : 102) |
| படர்க்கை | சொல்வானும் கேட்பானுமாகிய இருவர் கூட்டத்துப் பிறந்த சொல் அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்தில் படர்தலின் படர்க்கை எனப்பட்டது. (சிவ. நன். 266) |

**படலம்** வேற்றுமையுடைய பல பொருள்களால் தோற்றம் உடைத்தாகத் தொடர வைப்பது. (யாப். பாயி.)

பலவினப் பொருள்களுக்கும் பொதுவாகிய இலக்கணங் கூறுவது படலம்.
பல வோத்துக்களினது தொகுதி படலம்.
படலமென்றது அதிகாரத்தை.
(ஆறு. நன். 17)

**படலை** தழைவிரவின மாலை. (நச். பெரும். 60)

**படிச்சந்தம்** ஒன்றன் வடிவை யுடைத்தாய் அது வென்றே கருதப்படுமியல்பையுடையது. படிச்சந்தமென்பது— பிரிதிசமென்னும் வடமொழிச் சிதைவு.
(பேரா. திரு. 10 : 6)

**படிமை** படிமை யென்பது ப்ரதிமா என்னும் வடமொழித் திரிபு.
(இளம். தொல். பொருள். 30)

**படுமலைப் பாலை (இ)** துத்தம் குரலாகப் படுமாமாலை பிறக்கும். (யாப். 96)

**படை** மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப் படை என்னும் அறுவகைப்படை. இப்படையை வடநூலார் மௌலம் என்ப. (பரிமே. திருக். 762)

**படைத்தற்கரிய கற்பு** கணவன் கருத்தே தன் கருத்தாதலின் பிறர் படைத்தற்கரிய கற்பாயிற்று.
(நச். சீவ. 555)

**படை மூன்று (சமயம்)** படை மூன்றாவன இரத்தினத்திரயம். அவை : நற்காட்சி, நன்ஞானம், நல் லொழுக்கம். (நச். சீவ. 2813)

**பண் (இ)** பண் நான்கு வகைய. அவை பாலை யாழ், குறிஞ்சியாழ், மருத யாழ், செவ்வழி யாழ் என்பன. (யாப். 96)

பெருந்தான மெட்டினும் கிரியைக ளெட்டாலும் பண்ணிப் படுத்தலாற்

பண்ணென்று பெயராயிற்று.
(அடி. சிலம்பு. 3:26)

பண் நான்காவன பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன.
(அடி. சிலம்பு. 14:166)

பண்ணாவன பாலை யாழ், குறிஞ்சி யாழ், மருத யாழ், செவ்வழி யாழென நான்கு.
(வீர. 179)

**பண்ணத்தி** பண்ணைத் தோற்றுவித்தலாற் பண்ணத்தி யென்றார். (இளம். தொல். 173)

பண்ணத்தி யெனினும் பாவினம் எனினும் ஒக்கும். (இளம். தொல். செய். 175)

மெய் வழக்கல்லாத புறவழக்கு. எழுதும் பயிற்சியில்லாத புறவுறுப்புப் பொருள் களைப் பண்ணத்தி யென்ப.
(பேரா. தொல். பொருள். 492)

**பண்ணல் (இ)** பாட நினைத்த பண்ணுக்குக் கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந் தன்மை மாத்திரை அறிந்து வீக்குதல்.
(நச். சீவ. 657)

**பண்ணின் திறம் (இ)** பாலைக்குப் புறம் — தேவாளி; அருகு— சீர் கோடிதம்; பெருகு—நாகராகம்; குறிஞ்சிக்குப் புறம் — செந்து; அருகு — மண்டிலம்; பெருகு—அரி. மருதத்திற்குப் புறம்—ஆகரி; அருகு—சாயா வேளா கொல்லி; பெருகு—கின்னரம். செவ் வழிக்குப் புறம்—வேளாவளி; அருகு— சீராகம்; பெருகு—சந்தி.
(அடி. சிலம்பு. 14:166)

**பண்பு** பண்பு எனினும், இலக்கணம் எனினும், இயல்பு எனினும் ஒக்கும். (இறை. 26)

பண்பு பொறியா னுணரப்படுவது.
(சேனா. தொல். சொல். 297)

ஒரு பொருள் தோன்றுங்காலத்து உடன் தோன்றி அது கெடுந்துணையும் நிற்பது.
(நச். தொல். சொல். 216; சிவ. தன். 321)

பண்பாவது தமக்குள்ள தோரியல்பு.
(தெய். தொல். சொல். 18)

பண்பு பொறியா லுணரப்படும் குணம்.
(சிவ. நன். 443; ஆறு. நன். 427)

**பண்புடைமை** — பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து ஒழுகுதல்.
(பரிமே. திருக். அதி. 100)

**பணியாமை** — தாழ்வு வாராமற் பழைய உயர்ச்சிக் கண்ணே நிற்றல். (பரிமே. திருக். 963)

**பத்தல் (இ)** — குமிழும் முருக்கும் தணக்குமாம் பத்தற்கு மரம். (நச். பெரு. 4)

**பத்தினி** — தன் தலைமகனையன்றிப் பிறிதோர் தெய்வம் வணங்கார் பத்தினியார்.
(இறை. 14)

ஆக்கலும் அழித்தலும் வல்லளாதல்.
(அரும். சிலம்பு. பதி. 33)

**பத்துத்துவர்** — பூவந்தி திரிபலை புணர் கருங்காலி
நாவலோடு நாற்பான் மரமே.
(அடி. சிலம்பு. 6:76)

**பத்மாசனம் (நா)** — நேரிருந்து காலடிகள் மாற்றிக் குதிமேலாப் பாரிருத்தல் பத்மாசனம். (நச். சீவ. 656)

**பதம்** — பதமெனினும், மொழி யெனினும், சொல் லெனினும் ஒக்கும். (மயிலை. நன். 127)

**பதலை (இ)** — ஒருதலை முகமுடையதொரு தோற்கருவி.
(பழை. புறம். 103)

**பதாகை (நா)** — நான்கு விரலும் தம்முள் ஒட்டி நிமிரப் பெருவிரல் குஞ்சித்து நிற்பது.
(அடி. சிலம்பு. 3:18)

**பதிகம்** — ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்லுதலின் பதிகம். (சிவ. நன். 1)

பிரதீகம் என்பது பதிகம் என நின்றது.
(சுப்பி. பிரயோ. 3)

**பதினெண் கணங்கள்** தேவரும், அசுரரும், முனிவரும், கின்னரரும், கிம்புருடரும், கருடரும், இயக்கரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், வித்தியாதரரும், நாகரும், பூதமும், வேதாளமும், தாராகணமும், ஆகாசவாசிகளும், போகபூமியோருமென இவர். (பழை. புறம். 1)

அவர் தேவரும், அசுரரும், தைத்தியரும், கருடரும், கின்னரரும், கிம்புருடரும், இயக்கரும், விஞ்சையரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், பூதரும், பைசாசகணமும், தாராகணமும், நாகரும், ஆகாய வாசிகளும், போகபூமியோருமென இவர். (நச். திரு. 168)

**பதும கோசிதம் (நா)** பதும கோசிதம் பகருங்காலை
ஒப்பக் கைவளைத் தைந்து விரலும்
மெய்ப்பட அகன்ற விதியிற் றாகும்.
(அடி. சிலம்பு. 3:18)

**பதுமாஞ்சலி (நா)** இருகையும் பதும கோசிகமாகக் கட்டுவது. (அடி. சிலம்பு. 3:18)

**பயனில சொல்லாமை** கேட்டார்க்கும் தனக்கும் நற்பயன் படாத சொற்களைக் கூறாமை.
(மணக். திருக். அதி. முன்.)

தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. (பரிமே. திருக். அதி. 20)

**பயனிலை** முடிக்குஞ் சொற்பொருள் அத்தொடர் மொழிக்குப் பயனாகலின் பயனிலையென்றார். (சேனா. தொல். சொல். 65)

பெயர் வாளாது நிற்குமாயின் செப்பின்கட் பயனின்றாம் ஆதலான் அதனை முடிக்குஞ் சொல் பயனிலை என்றாயிற்று. (தெய். தொல். சொல். 63)

**பயிர்ப்பு** பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. (இறை. 2)

பயிலாத பொருட்கண் வந்த அருவருப்பு. (பேரா. திரு. 1:12)

**பயிர்முகம் (நா)** பயிர் முகமாவது முளைத்த அங்குரம் ஓங்கி மூத்தாற் போலத் தலைமக்கள் சொன்ன பொருளைப் பொலியுமாற்றால் விரிவாற் சொல்வது. (வீர. 104)

**பரணி** காடு கெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கையுங் கொடுத்து வழிபடுவதோர் வழக்குப் பற்றியது. (நச். தொல். செய். 149)

**பரத்தை** தாம் இயல்பாகவேயும் பிறரான் நயக்கப் படும் வனப்புடையார், ஆடற்றகை யானும், பாடற்றகையானும், பாடற் குரலானும் நயப்பித்துக் (கொள்வர்). (இறை. 35)

பரத்தையராவார் யாரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையுங் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதார். (இளம். தொல். பொருள். 149)

காமம் விரும்பும் பரத்தையர். மாயமென்பது பரத்தைக்குப் பண்பு. (இளம். தொல். பொருள். 145)

**பரத்தையிற் பிரிவு** பொதுப் பெண்டிர் மாட்டுப் பிரிவு. இவள் கண் (தலைவி) அன்பிலனாய்க் கண்டார்கண் தாழ்ந்து நிறையிலானாய்ப் பிரிந்தான் அல்லன்; தலைமகளின் நீங்கி ஆடல் காண்பல் பாடல் கேட்பல் எனப் பிரியும். (இறை. 35)

**பரவசவிலக்கு** தன்வசமல்லாமை கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**பரிகரம்** (காரண காரியம்). அவை யிரண்டும் வெளிப்படையாயும் அவற்றாலாய தொழில்கள் பிறவற்றை அறிவிப்பன பரிகரமாம். (காரி. மாற. 233)

| | |
|---|---|
| பரிப்பு | இத்துணை நாழிகைக்கு இத்துணை யோசனைச் செல்லுமென்னும் இயக்கம். (பழை. புறம். 30) |
| பரிபாட்டு | பரிபாட்டாவது பரிந்தபாட்டாம். அஃதாவது ஒரு வெண்பாவாக வருத லின்றிப் பல வுறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது. (இளம். தொல். செய். 114) |
| பரிபாடல் | பரிபாடற்கண் மலையும் யாறும் ஊரும் வருணிக்கப்படும். |
| | நான்கு பாவினும் பரிபாடல் வெண்பா யாப்பிற்றாதலிற் கடவுள் வாழ்த்தாகியும் வரப்பெறும். பரிபாடலுட் கொச்சகமும் வரும்வழித் தரவும் சுரிதகமும் இடையிடை வருதலுங் கொள்க. (இளம். தொல். செய். 117) |
| | பரிபாடலென்பது பரிந்து வருவது. அஃதாவது கலியுறுப்புப் போலாது பல வழியும் ஏற்று வருவது. (பேரா. தொல். பொருள். 430) |
| | பரிபாடலென்பது பரிந்து வருவது. (நச். தொல். செய். 118) |
| பரிபாடைச் சூத்திரம் | தெய்வ வணக்கஞ் செயலும் மங்கல மொழி முதல் வகுத்தலும் தொகை வகை விரியாய்ச் சொல்லலும் ஏற்புடைப் பொருளை யுரைத்தலும்என்னும் நான்கும் பரிபாடைச் சூத்திரமாம். (யாப். பாயி. அடிக்குறிப்பு.) |
| பரியாய மொழி | குறித்த பொருளைப் பிறிதொரு வழியாற் சொல்லுவது பரியாய மொழியாம். (வீர. 168) |
| பரிவட்டணை (இ) | வீக்கின நரம்பை அகவிரலாலும் புற விரலாலும் கரணஞ் செய்து தடவிப் பார்த்தல்·( நச். சீவ. 657) |
| பருந்தின் விழுக்காடு | பருந்து நடுவே விழுந்து தான் கருதும் பொருளை எடுத்துக்கொண்டு போவது |

போல இதுவும் முடிக்கப்படும் பொருளை முடித்துப் போம் இயல்பினது.
(மயிலை. நன். 18)

**பருந்தின் வீழ்க்காடு** — பருந்து வீழ்கின்றுழி நடுவே வீழ்ந்து தான் கருதின பொருள் கொண்டுபோம். அது போல இதுவும் தான் கருதி முடிக்கின்ற பொருளை முடித்துப்போம் இயை பின்றியே என்பது. (இறை. 1)

**பருந்து விழுக்காடு** — அவ்வதிகாரத்துட் பொருத்தமில்லாத பொருள் யாதானுமொரு காரணத்தால் இடைவருதல்.
(இளம். தொல். பொருள். 656)

**பலபொருளுருவகம்** — இரு பொருளையும் ஒரு செய்யுளகத்து உருவகஞ் செய்தல். (காரி. மாற. 120)

**பலபொருளுவமை** — ஒரு பொருட்குப் பல பொருள் உவமை காட்டுவது. (காரி. மாற. 101)

**பலவயிற் போலியுவமை** — ஒரு தொடர்மொழிக்கட் பலவுவமை வந்தால் உவமைதோறும் உவமைச் சொல் புணர்ப்பது. (காரி. மாற. 101)

**பலவினைச் சிலேடை** — பலவினையான் வருவது.
(பழை. தண்டி. பொரு. 51)

பலவினை கொண்டு சிலேடிப்பது பல வினைச் சிலேடை. (வீர. 170)

**பழைமை** — நட்டோரது உரிமை.
(மணக். திருக். அதி. முன்.)

பற்றறாக் காலத்துத் தமக்குச் செய்த உபகாரம். (பரிமே. திருக். 521)

**பற்று** — பெற்றதன் மேல் நிகழும் ஆசை.
(நச். சீவ. 3038)

**பன்மை** — பல்லோர்க்கும் பலவற்றிற்கும் பொது வாகிய பன்மை.
(சேனா. தொல். சொல். 190)

## பா

**பா** — சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமற் பாட

மோதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற் கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை.
(பேரா. தொல். பொருள். 313)

பாவென்றது சேட்புலத்திருந்து சொல்லும் பொருளும் தெரியாமல் ஒருவன் கூறியவழியும் இஃது என்ன செய்யுளென்று அறிவதற்கு ஏதுவாகிப் பரந்துபடச் செய்வதோர் ஓசை.
(நச். தொல். செய். 1)

**பாக்கம்** கடற்கரையில் ஊர்கள். (நச். பட். 77)

**பாங்கற்கூட்டம்** அவன் (பாங்கன்) குறிவழிச் சென்று தலைமகன் நின்ற நிலையை உணர்த்தச் சென்று கூடுதல்.
(இளம். தொல். களவியல். முன்.)

தன் பாங்கனானாதல் இடந்தலைப் பாட்டானாதல் இரண்டனுள் ஒன்றாற் சென்றெய்தல் முறைமை. (பேரா. திரு. 2)

**பாங்கன்** ஒத்த குலத்தானும் இழிந்த குலத்தானுமாகிய தோழன்.
(இளம். தொல். செய். 181)

தலைமகன்வழி நின்றொழுகி (வருபவன்).
(பேரா. தொல். பொருள். 501)

தலைவன்வழி நின்றொழுகுபவன்.
(நச். தொல். செய். 189)

**பாசி நீக்கம்** சொற்றோறும் அடிதோறும் பொருளேற்று நிற்பது. (இறை. 56)

**பாட்டுடைச் செய்யுள்** பல பாக்களோடு உரைப்பாட்டையும் இசைப்பாட்டையுமுடைய இயலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச் செய்யுள். (அடி. சிலம்பு. பதி. 55-60)

**பாடகம்** மகளிர் காலிற் பாடகம் ஒரு கம்பியாய்ப் பல முடக்காலே போக்கும் வரவும் உண்டானாற் போலத் தோன்றிக் காலை விடாதே கிடப்பது. (நச். சீவ. 510)

**பாடாண்** — ஒரு பாற்கு உரித்தன்றி ஒருவனை ஒருவன் யாதானும் ஒரு பயன் கருதியவழி மொழிந்து நிற்பது.
(இளம். தொல். பொருள். 78)

**பாடாண் பாட்டு** — ஒருவனைப் புகழ்தலாற் பாடாண் பாட்டு ஆயிற்று. (இளம். தொல். பொருள். 79)

**பாணம் (நா)** — பாணமாவது தூர்த்தனாதல் தலைவனாதல் தானுஞ் சொல்லி நின்றார் சொல்லையும் அனுவதித்துச் சொல்லிய ஐவகைச் சந்தியுள்ளும் கடைக்கண் சந்தியங்கம் ஒன்றாவது. (வீர. 104)

**பாத மயக்கம்** — மூவர் மூன்று ஆசிரிய அடி சொன்னால் தான் ஓரடி பாடிக் கிரியை கொளுத்துவது. (யாப். 96)

மூவர் மூன்று ஆசிரியவடி சொன்னால் தான் ஓரடி சொல்லிக் கிரியை கொளுத்துவது. (வீர. 179)

**பாதிச்சமச் செய்யுள்** — அளவழிச் சந்தங்களில் முதலிரண்டடியும் ஒத்துக் கடையிரண்டடியும் எழுத்து மிக்கு வருவதும், முதலிரண்டடியும் தம்முள் ஒத்து எழுத்து மிக்குக் கடையிரண்டடியும் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவதும், முதலிரண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து கடையிரண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவதும், ஒன்றிடையிட்டுக் குன்றி வருவதும், ஒன்றிடையிட்டு மிக்கும் குறைந்தும் வருவதும் பாதிச் சமச் செய்யுள் என்றும் வழங்கப்படும். (யாப். 95)

**பாம்பு** — தடுத்ததனை வெட்டுதல் பாம்பிற்கியல்பு. (நச். சீவ. 1271)

நாகம் தோலுரிக்கும்பொழுது நஞ்சு காலும். (நச். சீவ. 1546)

**பாயிரம்** — பாயிரம் என்ற சொற்குப் பொருள் யாதோ எனின் புறவுரை என்றவாறு. பாயிரம் தான் இருவகைப்படும் பொதுப்

| | |
|---|---|
| | பாயிரமும் சிறப்புப் பாயிரமும் என. அவற்றுள் பொதுப்பாயிரம் என்பது எல்லா நூன் முகத்தும் உரைக்கப்படுவது; சிறப்புப் பாயிரம் என்பது தன்னால் உரைக்கப்படும் நூற்கு இன்றியமையாதது. (இறை. 1) |
| | பாயிரம் என்பது புறவுரை. (இளம். தொல். எழுத்து. பாயி; நச். தொல். எழுத்து. பாயி.) |
| | பாயிரம் என்பது முகவுரை; அப்பாயிரந் தான் பொதுவும் சிறப்பும் என இருவகைப் படும். (நேமி. பாயி.) |
| | பாயிரம் என்பது புறவுரை என்றவாறு. பாயிரம் பொதுப்பாயிரமும், சிறப்புப் பாயிரமும் என இரண்டு வகைப்படும். (நம்பி. பாயி.) |
| | பொது எனவும் சிறப்பு எனவும் பாயிரம் இரு பகுதிப்பட்டது. (சிவ. நன். பாயி.) |
| பாயிரம் செய்வார் | தன்னாசிரியனும், தன்னொடு ஒருங்கு கற்ற மாணாக்கனும், தன் மாணாக்கனு மென மூவகையர். (இளம். தொல். எழுத்து. பாயி.) |
| | தன்னாசிரியருந் தன்னோடொருங்கு கற்ற ஒரு சாலை மாணாக்கரு மாவர். (நச். தொல். எழுத்து. பாயி.) |
| பார்ப்பான் | பார்ப்பான் உயர்ந்த குலத்தானாகிய தோழன். (இளம். தொல். செய். 181) |
| | நன்றும் தீதும் ஆராய்ந்து உறுதி (கூறு பவன்). (பேரா. தொல். பொருள். 501) |
| | நன்றும் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுபவன் பார்ப்பான். (நச். தொல். செய். 189) |
| பார்வல் | தம் பகைவர் செய்மைக்கண் வருதலைப் பார்த்திருத்தற்குரிய உயர்ச்சியையுடைய அரண். (நச். மதுரை. 231) |
| பாரதி (நா) | பாரதியாவது கூத்தன் தலைவனாக நடன நடிப் பொருளாகக் காட்டியும் உரைத்தும் வருவது. (அடி. சிலம்பு. 3;13) |

கவுத்தனையே தலையாகக் கூத்துக் கொடுக்கப்படுவது. (வீர. 104)

**பால்** ஐந்து பாலாவன : ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்பன.
(இளம். தொல். சொல். 1)

**பால் வழு** ஒருபால் சொல் அத்திணைக்கண் ஏனைப் பாற் சொல்லோடு முடியும்.
(சேனா. தொல். சொல். 11)

அவை (உயர்திணை மூன்று பாலும் அஃறிணை இரண்டு பாலொடு) தம்முள் தாம் மயங்குதல் பால் வழுவாம்.
(தெய். தொல். சொல். 11)

திணையிட மயக்கமின்றிப் பாலே மயங்கு வது. (மயிலை. நன். 374)

**பாலக்கிரகாரிட்டம்** அரசர்க்குப் பதினோராண்டிலே உப நயனம் பண்ணிப் பன்னீராண்டிலே இல்லறக் கிழமை பூண்டு அரச வுரிமை யெய்துதல் இயல்பாகலின் பன்னீராண்டும் உலகத்தார்க்குத் தானமாக விடுதல் இயல்பு. (நச். சீவ. 309)

பாலர்களைப் பிடித்து வருத்தும் பேய் களால் உண்டாகும் தீங்கு.
(நச். சீவ. 309. அடிக்குறிப்பு)

**பாலிடத் திணைவழு** அம்மும்மையும் (பால் இடம் திணை) மயங்கி வருவது. (மயிலை. நன். 374)

**பாலிடவழு** திணையின்றிப் பாலும் இடமும் மயங்கி வருவது. (மயிலை. நன். 374)

**பாலை** தனக்கென ஒரு நிலம் இன்றி எல்லா நிலத் தினும் காலம் பற்றிப் பிறப்பது.
(இளம். தொல். பொருள். 15)

பாலை என்பதற்கு நிலம் இன்றேனும் வேனில் காலம் பற்றி வருதலின், அக் காலத்துத் தளிரும் சினையும் வாடுத லின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை யென்று குறியிட்டார்.
(இளம். தொல். பொருள். 5)

| | |
|---|---|
| பாலை (இ) | செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப் பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என. (யாப். 96; நச். சிவ. 619) |
| | பாலையாவன செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப் பாலை, அரும்பாலை, கொட்டிப்பாலை, இனப்பாலை, விளரிப் பாலை என வேழும் என்ப. (வீர. 179) |
| பாலைப் பொருள் | பாலைப் பொருளாவது பிரிவு. அப்பிரிவிற் கண் தலைமகற்கு வருத்தமுறும் என்று தலைமகள் கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாதவழி ஏகினார் எனவும் கவலும். (இளம். தொல். பொருள். 12) |
| பாவ பாணம் | இங்கிதம், மதனம், வசீகரணம், மோகனம், சந்தாபம். (நச். சீவ. 706) |
| பாவிற் புணர்ப்பு | நால்வர் நான்கடிக்கு ஈற்றுரை சொன்னால் இவன் நாலடிக்கு முதல்பாடிப் பொருள் முடிப்பது. (வீர. 179) |
| | நால்வர் நான்கு பாவிற் கட்டுரை சொன்னால் அவையே அடிக்கு முதலாகப் பாடிப் பொருள் முடிப்பது. (யாப். 96) |
| பாவை | பாவை என்றது பிறிது எவ்வுணர்வுமின்றிக் காம வேட்கையாகிய ஒரு குறிப்பு. (பழை. புறம். 251) |
| | வேறு கருத்துச் செல்லாமல் தன்னையே கருதுவித்தலின் பாவை என்றார். (நச். சீவ. 197) |
| | இஞ்சிக் கிழங்கைப் பாவை என்றல் மரபு. (நச். மலை. 125) |
| பாற்றிணை வழு | இடமயக்கமின்றிப் பாலுந் திணையும் மயங்குவது. (மயிலை. நன். 374) |

## பி

| | |
|---|---|
| பிசி | இரண்டடி அளவின்கண்ணே வருவது. (இளம். தொல். செய். 174) |
| பிண்டம் | உறுப்பு மூன்றும் உள்ளடக்கி நெறிப்பாடு உடைத்தாய்க் கிடப்பது. (யாப். பாயி.) |

சூத்திரம் பலவுண்டாகி ஓத்தும் படலமும் இன்றாகிவரினும், ஓத்துப் பலவுண்டாகிப் படலமின்றி வரினும், படலம் பலவாகி வரினும் அதற்குப் பிண்டமென்று பெயராம். அவற்றுட் சூத்திரத்தாற் பிண்டமாயிற்று இறையனார் களவியல். ஓத்தினாற் பிண்டமாயிற்று பன்னிரு படலம். அதிகாரத்தாற் பிண்டமாயிற்று இந்நூலென்று (தொல்காப்பியம்) கொள்க. (இளம். தொல். செய். 165)

பலபொருள் தொகுதி
(சேனா. தொல். சொல். 90)

**பிண்டம் (பிறப்பு)** பிண்டமென்பது மணைபோலப் பிறக்கும். (பழை. புறம். 28)

**பிண்டி (நா)** சுட்டுவிரல் பேடிவிரல் அநாமிகை சிறுவிரல் ஒட்டி நெகிழ முடங்க அவற்றின் மேலே குறுக்கிடப் பெருவிரல் கட்டி விலங்கி விரல்வழி முறையொற்றல்.
(அடி. சிலம்பு. 3:18)

**பிண்டிபாலம்** தலையிலே பீலி கட்டப்பட்டு எறிவதொரு படை. (நச். சீவ. 2269)

**பிணி** பிணித்தலை யுடையது பிணியாயிற்று. (நச். சீவ. 2752)

**பிணி முகம்** பிள்ளையாரேறும் யானை என்றும் சொல்லுப. (பழை. புறம். 56)

**பிணையல்** மலர் நெருங்கு மார்பின் மாலை.
(நச். சீவ. 193)

**பிணையல் (நா)** பிணையலென்றது இரட்டைக்கை. அஃதாவது இணைக்கை. அது பதினைந்து வகைப் படும். அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம், நிடதம், தோரம், உற்சங்கம், புட்பபுடம், மகரம், சுபந்தம், அபயவத்தம், வருத்தமானம் என்றிவை. (அடி. சிலம்பு. 3:18)

**பிதிரர்** பிதிரராவர் படைப்புக் காலத்து அயனால் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி;

அவர்க்கு இடம் தென்றிசை. (பரிமே. திருக். 43)

பிந்துமதி — எல்லா எழுத்தும் புள்ளியுடையனவாகவே (வரும் செய்யுள்). (யாப். 96)

பிபீலிகாமத்திமம் — அளவழிச் சந்தங்களில் இடை இரண்டடியும் குறைந்து வருவது பிபீலிகாமத்திமம் என்றும் எறுப்பிடைச் செய்யுள் என்றும் வழங்கப்படும். (யாப். 95)
[பார்க்க: அளவழிச் சந்தம்]

பிரசலாப் பிரசலை — துளக்கத்தின் மேல் துளக்கம். (நச். சீவ. 3076)

பிரசாபத்தியம் — மைத்துன கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறாது கொடுப்பது; இதனை ஒப்பு என்று உணர்வது. (யாப். 1)

மகட்கோடற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டியவழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது. (இளம். தொல். பொருள். 89)

மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது. (நச். தொல். பொருள். 92)

தலைமகன் குரவர் வேண்டத் தலைமகள் குரவரும் மறாதே உடன்பட்டுத் தலைமகளை அலங்கரித்துத் தீமுன்னர்க் கொடுப்பது. (நம்பி. 117)

பிரசானச்சந்தி — பிரசானச் சந்தியாவது சுத்தமும் சங்கிரணமும் என இரண்டாம். (வீர. 104)

பிரத்தாரம் — பிரத்தாரம் எனினும் உறழ்ச்சி எனினும் ஒக்கும். (யாப். 95)

பிரத்தியயம் — பொதுவாக விகுதி, இடைநிலை, வேற்றுமை உருபுகளைக் குறிக்கும் சொல். (கோபா. பிரயோ. 29)

பிரத்தியாகரித்தல் — ககரம் முதல் னகரம் இறுவாய்ப் பதினெண் எழுத்திற்கும் ஆதியிலே நின்ற ககரத்தையும் அந்தத்திலே நின்ற னகரத்

ஹையும் கூட்டிக் கன என பெயரிட்டாற் போல்வது. (சுப்பி. பிரயோ. 4)

**பிரதிக்கினை** — கூறுவதற்கு மேற்கொண்ட செய்தி. (கோபா. பிரயோ. 2)

**பிரதிபதம்** — அதே பொருளைத் தரும் வேற்றுச் சொல்லாகிய பரியாயப் பெயர். (கோபா. பிரயோ. 9)

**பிரதிமுகம் (நா)** — முளைத்தல் முதலாய் இலை தோன்றி நாற்றாய் முடிவது போல்வது. (அடி. சிலம்பு. 3 : 13)

**பிரபந்தம் (இ)** — அடிவரையின்றிப் பல தாளத்தாற் புணர்ப்பது. (அடி. சிலம்பு. 3 : 14)

**பிரமம்** — நாற்பத் தெட்டியாண்டு பிரமசரியங் காத்தற்குப் பன்னீராட்டைப் பிராயத் தாளை அணிகலன் அணிந்து கொடுப்பது. கொடாவிடின் ஓர் இருதுக்காட்சி ஒருவனைச் சாராது கழிந்த விடத்து ஒரு பார்ப்பனக் கொலையோடு ஒக்கும். இதனை அறநிலை என்றுணர்வது. (இறை. 1)

ஓர் இருதுக் கண்ட கன்னியை மற்றைய இருதுக் காணாமே கொளற்பால மரபினோர்க்கு நீர் பெய்து கொடுத்தல். (யாப். 96)

கன்னியை அணிகலன் அணிந்து பிரமசாரியா யிருப்பான் ஒருவனுக்குத் தானமாகக் கொடுப்பது. (இளம். தொல். பொருள். 89)

ஒத்த கோத்திரத்தானாய நாற்பத்தியெட்டி யாண்டு பிரமசரியம் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பெய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது. (நச். தொல். பொருள். 92)

பிரமசாரியாய் தக்காணுமாய் இருப்பா னுக்குக் கன்னியை அலங்கரித்துத் தீமுன்னர்க் கொடுப்பது. (நம்பி. 117)

**பிரமரம் (நா)**
அநாமிகை விரலும் நடுவிரலும் தம்மிற் பொருந்தி வலஞ்சாயப் பெருவிரல் நடு விரலினுள்ளே சேரச் சுட்டு விரலும் சிறு விரலும் பின்பே வளைந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3 : 18)

**பிரமாணம்**
இலகுவின் பின் குருவாய் முற்றவரிற் பிரமாணமாம். (வீர. 137)

இலகுவும் குருவும் புணர்ந்து முறை வருவது. (யாப். 95)

**பிராகிருதம்**
எல்லா நாட்டு மேலோர் மொழி எனப் படும். பிராகிருதத்தைத் தற்பவம், தற் சமம், தேசியம் என மூன்றாக்கினர். (பழை. தண்டி. பொது. 25)

**பிரிந்திசைத் துள்ளல்**
பல தளையும் விரவலான் வருவது பிரிந் திசைத் துள்ளலோசை. (யாப். 22)

**பிரிந்திசைத் தூங்கல்**
பல தளையும் விரவலான் வருவது பிரிந் திசைத் தூங்கலோசை. (யாப். 22)

**பிரிநிலை எச்சம்**
பல பொருளில் ஒன்று பிரிந்தவழிப் பிரிக்கப் பட்ட பொருண்மையுந் தோன்ற நிற்பது. (தெய். தொல். சொல். 422)

**பிரிநிலை ஏகாரம்**
பலவற்றுள் ஒன்று பிரிப்பது பிரிநிலை ஏகாரம் எனப்படும். (இறை. 2)

**பிரிமொழிச் சிலேடை**
ஒருவகையான் நின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்துப் பல பொருளாகக் கொள்வது. (பழை. தண்டி. பொரு. 50)

ஒருவழி நின்ற சொல் பிரிந்து தொகை வேறுபட்டுப் பல பொருள் கொள்வது பிரிமொழிச் சிலேடை. (வீர. 170)

**பிரிவச்சம்**
தான் பிரிவு அஞ்சிற்றும் பிரிவச்சம்; அவளைப் பிரிவு அஞ்சுவித்ததும் பிரி வச்சம். (இறை. 2)

**பிறப்பறுதல்**
நுகர்தற்குரிய மகளிரை நுகர்ந்து பற்ற றாக்கால் பிறப்பறாது. (நச். சிறு. 213)

**பிறப்பு** — பிறப்பாவது அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் ஆயர் வேட்டுவர் குறவர் நுளையர் என்றாற் போல வருங் குலம். (இளம். தொல். பொருள். 90)

**பிறப்பு ஏழு** — பறப்பு ஏழாவின.
ஊர்வ பதினொன்றாம் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்கால் ஓர் பப்பத்துச்—சீரிய
பந்தம்ஆம் தேவர் பதினான்கு அயன் படைத்த
அந்தம்இல் சீர்த்தாவரம் நாலைந்து.
(பரிமே. திருக். 92)

**பிறவித் துன்பங்கள்** — பிறவித் துன்பங்களாவன : தன்னைப் பற்றி வருவனவும், பிற உயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப் பற்றி வருவனவும் என மூவகையான் வருந்துன்பங்கள். (பரிமே. திருக். 4)

**பிறனில் விழையாமை** — காம மயக்கத்தால் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. (பரிமே. திருக். அதி. 15)

**பிறிதின் கிழமை** — பொருளின் கிழமையும், நிலத்தின் கிழமையும், காலத்தின் கிழமையும் எனப் பிறிதின் கிழமை மூவகைப்படும். (சேனா. தொல். சொல். 79; நச். தொல். சொல். 80)

**பிறிதுபடுபாட்டு** — ஒரு செய்யுளை அடியும் தொடையும் வேறுபடுப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொரு செய்யுளாய் முடிவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

**பின்பனி** — மாசித் திங்களும் பங்குனித் திங்களும். (இளம். தொல். பொருள். 12)

**பின் முரண்** — இடை இருசீரும் மறுதலைப்படத் தொடுப்பது. (யாப். 39)

நாலாஞ்சீரும் இரண்டாஞ்சீரும் ஒன்றத் தொடுப்பது. (இளம். தொல். செய். 78)

பு

**புகழ்** ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத் தந்து பூமியுள்ளளவும் நிற்பது புகழ். (அடி. சிலம்பு. 11;114)

**புகழுவமை** உவமையைப் புகழ்ந்து உவமிப்பது. (காரி. மாற. 101)

**புகை** மயிருக்குப் புகைக்கும் அகின் முதலாயின. அவை யாவன.
''அஞ்சனக்கட்டி அரியாசம் பச்சிலை ஆரம் அகிலுறுப் போரைந்து.''
(அரும். சிலம்பு. 5:14)
''நேர்கட்டி செந்தேன் இரியாசம் பச்சிலை ஆரம் அகிலுறுப்போ டாறு''
(அடி. சிலம்பு. 5:14)
நேர்கட்டி செந்தேன் இரியாசம் கப்பூரம் ஆரம் அகிலுறுப்போ ரைந்து
(நச். சீவ. 534)

**புட்ப புடம் (நா)** குடங்கையிரண்டும் தம்மிற் பக்கங்காட்டி நிற்பது. (அடி. சிலம்பு. 3:18)

**புட்பாஞ்சலி (நா)** இரண்டு கையும் குடங்கையாய் வந்து ஒன்றாவது. (அடி. சிலம்பு. 3: 18)

**புணர்ச்சி விழையாமை** புணர்ச்சி விழையாமையாவது பிரம சரியம் காத்தல். (இளம். தொல். பொருள். 74)

**புணர்வு** காமப் புணர்ச்சி முதலாயின. (பேரா. தொல். பொருள். 259)

**புதிதாகப் புனைதல்** ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல். (இளம். தொல். செய். 231)

**புதுமை** யாதொன்றானும் எவ்விடத்தானும் எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள் தோன்றுதல். (இளம். தொல். பொருள். (251)

**புரிக்கு** அளவழிச் சந்தங்களிற் சீரொத்து ஓரடியுள் ஓரெழுத்து மிக்கு வருவது. (யாப். 95)

**புரிசை** மனையைச் சூழ்ந்த மதில். (நச். சீவ. 468)

**புரோவாதம்** ஒரு பொருளை முன்னர் எடுத்துக் கூறுவது. (சுப்பி. பிரயோ. 50)

**புலவி** புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறை படாமற் காலங்கருதிக் கொண்டுய்ப்ப தோர் உள்ள நிகழ்ச்சி. (பேரா. தொல். செய். 499; நச். தொல். செய். 187)

இருவர் நெஞ்சும் புணர்ச்சி விரும்பாது புலக்கக் கருதியவழி ஒருவரோடு ஒருவர் புலத்தல். (பரிமே. திருக். அதி. 131)

**புலவி தீர்த்தல்** புலவியாயின் உணர்த்தாது குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்குதன் முதலிய வற்றான் நீங்கும். (நச். தொல். செய். 187)

**புலவி நுணுக்கம்** தலைமகனும் தலைமகளும் ஓர் அமளிக் கண் கூடியிருந்துழி அவள் மாட்டுப் புலத்தற் காரணம் இல்லையாகவும் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணம் உளதாக உட்கொண்டு அதனை அவன் மேலேற்றி அவள் புலத்தல். (பரிமே. திருக். அதி. 132)

**புலன்** கல்விப் பயனாகிய அறிவுடைமை. (பேரா. தொல். பொருள். 259)

**புலன் (வனப்பு)** இயற்சொல்லாற் பொருள் தோன்றச் செய்யப்படும் பாட்டு. (யாப். 95)

இயற்சொல்லாற் பொருள் தோன்றச் சொல்லப் படுவது. (யாப். கா. 58)

**புழை** சிறு வாசல். (நச். பட். 144)

**புளகம்** யானையின் பருமத்தில் தைத்த கண்ணாடி. (நச். சீவ. 809)

**புறங்கூறாமை** யாவரையும் இகழ்ச்சியானவற்றைப் புறத் துரையாமை. (மணக். திருக். அதி. முன்.)

ஒருவரையொருவர் அவர் புறத்துரை யாமை. (இளம். தொல். பொருள். 74)

காணாதவழிப் பிறரை இகழ்ந்து உரை யாமை. (பரிமே. திருக். அதி. 19)

**புறநிலை வாழ்த்து** — வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவை யிரண்டும் புணர்ந்த மருட்பாவினும் வரப் பெறும். (இளம். தொல். செய். 106)

தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்துதல். (பேரா. தொல். பொருள். 422)

எடுத்துக்கொண்ட காரியத்துக்கு ஏது வாகிய தெய்வத்தினைப் படர்க்கையாக்கி அத்தெய்வத்தால் பயன்பெற நின்றான் ஒருவனை முன்னிலையாக்கிக் கூறலிற் புறநிலையாக்கிற்று. (நச். தொல். செய். 110)

**புறப்பா அகவல்** — பாடாண்துறை மேற்பாடும் ஆசிரியம். (யாப்பு. 77)

**புறப்பொருள்** — மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆயபயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார்.

புறப்பொருள் உலகியல்பானன்றி வாரா மையின் அது நாடக வழக்கம் அன்றா யிற்று. (இளம். தொல். பொருள். 56)

**புறம்** — புறமாவது நிரை கோடற் பகுதியும், பகை வயிற் சேறலும் எயில் வளைத்தலும் இரு பெரு வேந்தரும் ஒருகளத்துப் பொருதலும், வென்றி வகையும், நிலையாமை வகையும் புகழ்ச்சி வகையும் என எழுவகைப்படும். (இளம். தொல். புறத்திணையியல், முன்.)

**புறவம்** — சித்திரப்புறா. (நச். சீவ. 564)

**புறவரி (நா)** — தலைவனுடன் அணையாது புறத்து நின்று விளையாடுவது. (அடி. சிலம்பு. 8 : 93)

**புறவுரை** — நூல் நுதலிய பொருளல்லனவற்றை உரைத்தலின் புறவுரை. (சிவ. நன். 1)

புறவுரை நூல் சொல்லிய பொருளல்லா தவைகளைச் சொல்வது. (ஆறு. நன். 1)

**புறனடை** — நூலுள்ளே தொகாதவற்றைப் பாதுகாத்து நூற்கு முட்டாகாமை உணர்தற் பொருட் டாக வைத்து உரைப்பது. (இளம். தொல். இடை. 291)

| | |
|---|---|
| | புறத்து அடையாய் வரும் புறணடை. (சிவ. நன். 20) |
| | புறன்+ அடை= புறனடை. புறத்து அடையாய் வந்தது. புறம்+நடை=புற நடை வேறுவிதமாகிய நடக்கையெனினும் பொருந்தும். (ஆறு. நன். 20) |
| **புனல்யாற்றுப் பொருள் கோள்** | அடிதோறும் பொருள் அற்று மீளாது சேறல். (யாப். 95) |
| **புனைந்துரை** | புனைந்துரை இருதிறத்தன; பெரிய தனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறிய தனைப் பெருக்கிச் சொல்லுதலும் என. (யாப். 95; யாப். கா. 58) |

## பூ

| | |
|---|---|
| **பூ** | விடுபூ, தொடைப்பூ, கட்டுப்பூ என்னும் மூவகை. (அடி. சிலம்பு. 5 : 14) |
| **பூட்டுவிற் பொருள் கோள்** | பொருள் நோக்கு உடையதாய் நிற்றல். (யாப். 95) |
| **பூதத் தெய்வங்கள்** | சதாசிவனும், மயேச்சுரனும், உருத் திரனும், அரியும், அயனும் பூதங்கட்குத் தெய்வங்கள். (நச். திரு. 254) |

## பெ

| | |
|---|---|
| **பெண்கள்** | வேட்கை பிறவாப் பருவத்தாரும், பிறக் கின்ற பருவத்தாரும், பிறந்த பருவத் தாரும் என மூவகையர். (நச். சீவ. 2529) |
| **பெண்மை** | ஒரு பொருளை பட்டாங்கு அறியாமை. (இறை. 1) |
| | பெண்டிர்க்கு இயல்பாகிய நாணம் முதலா யினவும் பெண்ணீர்மையும். (இளம். தொல். பொருள். 80) |
| | கட்புலனாயதோர் அமைதித் தன்மை. (நச். தொல். சொல். 57) |
| | அமைதித் தன்மை. (நச். சீவ. 355) |

| | |
|---|---|
| **பெண்மைக்கு அங்கம்** | தலைவியிடத்து நிலைமை பெற்று வருகின்ற நாணமும் மடனும் பெண்மைக்கு அங்கம். (இளம். தொல். பொருள். 106) |
| **பெண்வழிச் சேறல்** | இன்பங்காரணமாக மனையாள் வழி ஒழுகுதலும், கணிகையரோடு கூடி ஒழுகுதலும், நறவுண்டு களித்தலும், சூதாடலும், தீயளவன்றி மிக உண்டலுமென ஐந்து வகைப்படும். |
| | பெண்வழிச் சேறலாவது மனைவியர்வழி ஒழுகுதல். (மணக். திருக். அதி. முன்.) |
| | தன்வழி ஒழுகற்பாலளாய இல்லாள் வழித்தான் ஒழுகுதல். (பரிமே. திருக். அதி. 91) |
| **பெதும்பை** | வேட்கை பிறக்கின்ற பருவம். (நச். சீவ. 2529) |
| **பெயர்** | பயனிலை செப்பலும், உருபேற்றலும், காலந்தோன்றாமையும் பெயரது இலக்கணம். (இளம். தொல். சொல். 63) |
| | பெயர்ப் பெயரும் ஒட்டுப் பெயருமென இரண்டு வகைப்படும். (நச். தொல். எழுத்து. 108) |
| **பெயர்ச் சூத்திரம்** | இடுகுறியானும் காரணக் குறியானும் பொதுவகையானும் இலக்கணங்கட்கு ஓர் உபகாரம் நோக்கி இஃது இதற்குப் பெயர் என்று இடுவது; (யாப். பாயி.) |
| **பெயர்ச்சொல்** | பொருளையுணர்த்துஞ் சொல் பெயர்ச் சொல். (சிவ. தொல். சூ. ப. 51) |
| **பெயரெச்சம்** | பெயரொழிந்து வருவது (பெயரெச்சம்). (வீர. 94) |
| | பெயரெச்சம் ஒரு முறையானடுக்கி ஒரு சொல்லான் முடியும். (சேனா. தொல். சொல். 233) |
| | ஒரு பெயர் எஞ்சி நிற்பது. (தெய். தொல். சொல். 423) |

பெயரெச்சங்கள் காரணப்பொருட்டாயும் காரியப்பொருட்டாயும் வரும். (சிவ. நன். 340)

**பெருகும் அன்பு** — புணர்வதன் முன்னும் பின்னும் ஒரு தன்மைத்தாய்ச் செயற்கையால் மிகு மன்பு. (நச். சீவ. 189)

**பெருந்தானம் (இ)** — பெருந்தானம் எட்டாவன : நெஞ்சும் மிடறும் நாக்கும் மூக்கும் அண்ணாக்கும் உதடும் பல்லும் தலையும் என இவை. (அடி. சிலம்பு. 3:26)

**பெருந்திணை** — ஒப்பில் கூட்டமாகிய பெருந்திணை. (இளம். தொல். களவு. முன்.)

பொருந்தாக்காமம். (வீர. 95; பேரா. திரு. 8:4)

**பெருமிதம்** — பெருமிதம் வீரத்திற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247)

பெருமிதமென்பது வீரம். (பேரா. தொல். பொருள். 251)

**பெருமை** — பண்டு கண்ட பொருள்கள் போலாத பொருள்கள் அவ்வளவிற் பெருத்தல். (இளம். தொல். பொருள். 251)

பெருமை யென்பது பழியும் பாவமும் அஞ்சுதல். (நம்பி. 35)

## பே

**பேடி** — பெண் இயல்பு மிக்கு ஆண் இயல்பும் உடையவள். (பரிமே. திருக். 727)

பெண் அவாய் ஆணிழந்தனைப் பேடி (என்பர்). (சிவ. இலக்க. ப. 111)

**பேதம்** — மென்மையாலும் வன்மையாலும் மனத்தினைப் பேதித்தல். (நச். சீவ. 747)

**பேதை** — வேட்கைப் பிறவாப் பருவம். (நச். சீவ. 2529)

**பேதைமை** — கேட்டிற்குக் காரணமாகியவற்றை அறியாதாரியல்பு. (மணக். திருக். அதி. முன்.)

கேட்டதனை உய்த்துணராது மெய்யாகக் கோடல். (இளம். தொல். பொருள். 248).
அறிவின்மை.
(பேரா. தொல். பொருள். 252)

**பேய்க்காரம் (நா)** தலைமக்கள் தேவகாந்தர்வ பைசாச சாதி பதினறுவராய்ப் பெண்ணுடைத் தாய் முன்பின் மூன்றினும் ஒன்றின் பொருள் பெறுதலும் அங்கமொன்றா தலும் கண்டமொன்றாதலுமாம்.
(வீர. 104)

**பேராண்மை** புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடை யார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்கு தற்கு அருமையின் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மை என்றார்.
(பரிமே. திருக். 148)

**பேறு** தானாந்தராயம், இலாபாந்தராயம், போகாந்தராயம், உபபோகாந்தராயம், வீரியாந்தராயம் என ஐவகைப்படும்.
(நச். சீவ. 3081)

## பை

**பைசாசம்** மூத்தாள்மாட்டும் துயின்றாள்மாட்டும் களித்தாள் மாட்டும் சார்வது; அது பேய் நிலை எனப்படும். (இறை. 1)

துஞ்சினாரோடும், மயங்கினாரோடும், களித்தாரோடும், செத்தாரோடும், விலங்கினோடும் இழிதகுமரபில் யாருமில்லா ஒரு சிறைக்கண் புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம்.
(யாப். 96)

பைசாசமாவது களித்தார் மாட்டும் துயின்றார் மாட்டும் கூடுதல்.
(இளம். தொல். பொருள். 89)

மூத்தார் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடை மாறுதலும் பிறவுமாம்.
(நச். தொல். பொருள். 92)

துயின்றோள் மாட்டும் களித்தோள் மாட்டும் சென்று சேர்வது. (நம்பி. 117)

## பொ

**பொச்சாப்பு** — பொச்சாப்பு எனினும், மறவி எனினும், இகழ்ச்சியெனினும் ஒக்கும். (மணக். திருக். அதி. முன்.)

பொச்சாப்பு என்பது அற்றப்படுதல்; அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓரிகழ்ச்சியால் இடையறவு படுதல்.

கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல். (பேரா. தொல். பொருள். 274)

**பொச்சாவாமை** — உருவும் திருவும் ஆற்றலும் முதலாய வாற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகை அழித்தல் முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. (பரிமே. திருக். 550)

**பொதியில்** — அம்பலம். (நச். திரு. 226)

**பொதுநீங்குவமை** — உவமையைக் கூறி மறுத்துப் பொருளையே உவமையாக்கி உரைப்பது. (பழை. தண்டி. பொருள். 5)

உவமையைக் குறிப்பினானாதல் வெளிப் படையானாதல் கூறி மறுத்துப் பொருள் தன்னையே பொருட் குவமையாக்கி உரைப்பது. (காரி. மாற. 101)

**பொதுப்பாயிரம்** — பொதுப்பாயிரம் என்பது எல்லா நூன் முகத்தும் உரைக்கப்படுவது.

பொதுப்பாயிரந்தான் நான்கு வகைப் படும். அவை ஈவோன்தன்மையும், ஈதலியற்கையும், கொள்வோன் தன்மையும், கோடல் மரபும் என. (இறை 1)

நூன் முகத்து உரைப்பினும் உரையா தொழியினும் அமையுமாதலிற் பொதுப் பாயிரம் என்றாயிற்று. (நம்பி. பாயி.)

| | |
|---|---|
| | எல்லா நூன்முகத்தும் உரைக்கப்படுவது. (மயிலை. நன். 2) |
| **பொதுப்பெயர்** | உயர்திணை அஃறிணை இரண்டுக்கும் பொதுவாய் வரும் பெயர். (ஆறு. நன். 159) |
| **பொதும்பர்** | மரம் செறிந்த இடம். (பேரா. திரு. 2:39) |
| **பொதும்பு** | குறுங்காடு. (நச். சீவ. 3042) |
| **பொய்** | செய்ததனை மறைத்தல். (இளம். தொல். பொருள். 143) |
| | செய்த ஒன்றினைச் செய்திலே னென்றல். (நச். தொல். பொருள். 145) |
| **பொய்கை** | மானிடராக்காத நீர்நிலை. (நச். சீவ. 337) |
| **பொய்யாமை** | தீமை பயக்கும் சொற்களைக் கூறாமை. (இளம். தொல். பொருள். 74) |
| **பொருட்பிரிவு** | பொருளிலனாய் பிரியும் ஏன்பதன்று; தன் முதுகுரவராற் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாம் கிடந்த துடன்; அது கொடு துய்ப்பது ஆண்மைத் தன்மை யன்றெனத் தனது தாளாற்ற லாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும். (இறை. 35) |
| **பொருண்மயக்கம்** | தன் பொருளிற்றீராது பிறிதொன்றன் பொருட்கட் செல்லும் பொருண்மயக்கம். (நச். தொல். சொல். 85) [பார்க்க: பொருள் மயக்கம்] |
| **பொருண்மை** | பொய்ப்பொருளின் மெய்ப்பொருட்கு வேற்றுமை உண்மையாகலின் அவ் வுண்மையைப் பொருண்மை யென்றார். (சேனா. தொல். சொல். 65) |
| **பொருந்** | பொருந் என்பது ஒரு சாதிப்பெயரும் பொருந்துத லென்னும் வினைப்பெயரு மாம். (நச். தொல். எழுத்து. 288) |
| **பொருநுதல்** | ஒருவர் மற்றொருவர் போல வேடங் கொள்ளும் பொருநரது தொழிலாதலின் ஒத்தல் என்னும் பொருட்டு. (சிவ. நன். 208) |

| | |
|---|---|
| பொருப்பு | பக்கமலை. (பேரா. திரு. 18:293) |
| பொருள் | உலகத்துப் பொருள்தான் இரண்டு வகையான் உணர்த்தப்படும். உண்மை மாத்திரை உணர்த்திப் பிழம்பு உணர்த்தப் படாதனவும், உண்மையும் பிழம்பும் உணர்த்தப்படுவனவும் என. (இறை. 1) |
| | பொருளாவது நாடும் அரணும் பொருளும் அமைச்சும் நட்பும் படையும். (இளம். தொல். எழுத்து. பாயி.) |
| | சொற்றொடர் கருவியாக உணரப்படும் அறம் பொருள் இன்பமும் அவற்றது நிலையின்மையாகிய அறுகைப் பொருளுமாம். (நச். தொல். எழுத்து. பாயி.) |
| பொருள் (நா) | பொருள் நான்கு வகைப்படும். அவை நாடகம், பிரகரணப் பிரகரணம், பிரகரணம், அங்கம் எனப் பெயர்வாம். (அடி. சிலம்பு. 3: 13) |
| பொருள்கோள் | பொருள்கோள் ஒன்பது வகைப்படும். நிரனிறை மொழிமாற்றும், சுண்ணமொழி மாற்றும், அடிமறி மொழிமாற்றும், அடி மொழிமாற்றும். பூட்டுவிற் பொருள் கோளும், புனல்யாற்றுப் பொருள் கோளும், அளைமறிபாப்புப் பொருள் கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும் என. (யாப். கா. 58) |
| பொருள்கோள்நிலை | ஆதிவிளக்கு, மத்திம தீபம், இறுதி விளக்கு என்னும் பொருள்கோள்நிலை. (இளம். தொல். செய். 112) |
| பொருள்மயக்கம் | தன் பொருளில் தீராது பிறிது ஒன்றன் பொருட்கண் சென்று உருபு ஏற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லும் சிறுபான்மை தம்முள் இயைபு உடைய வாதல். (சுப்பி. பிரயோ. 15) |
| பொருள்முரண் | மாறுபாடுடைய பொருளைச் சொல்வது. (இளம். தொல். செய். 91) |

**பொருள்வழு** — பொருளதிகாரத்தோடு மாறுகொள்வது. (யாப். 95)

**பொருளானந்தம்** — பாட்டுடைத் தலைமகன் நாட்டின் யாதானும் ஒன்றனைச் சிறப்பித்துச் சொல்லலுற்றவிடத்து அத்திணைக்குரிய இறைச்சிப் பொருளை ஊறுபடச் சாவவும் கெடவும் சொல்லுவதூஉம், புகழ்தலுற்ற விடத்து ஆகாத பெற்றியின் மங்கலம் அழியச் சொல்லுவதூஉம், மங்கலமாகிய உவமையால் மங்கலம் இல்லாத உபமேயத்தை உவமிப்பதூஉம் தலைமகனோடு உவமிக்கப்பட்டதற்கு இடையூறுபடச் சொல்லுவதூஉம் முதலாக உடையன. (யாப். 96)

**பொருளுரைத்தல்** — பொருளுரை நான்கு வகைப்படும். கருத்துரைத்தலும், கண்ணழித்தலும், பொழிப்புத் திரட்டலும் அகலங்கூறலும் என. (நம்பி. 1)

**பொழிப்புத் திரட்டல்** — பொழிப்புத் திரட்டலாவது சூத்திரத்துப் பொருளையெல்லாம் தொகுத்துரைத்தல். (நம்பி. 1)

சூத்திரத்திற் பொருளையெல்லாம் தொகுத்துரைத்தல். (காரி. மாற. 65)

**பொழிப்பு நிரல்நிறை** — முதற்சீர்க்கண்ணும் மூன்றாம் சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப். 95)

**பொறாமை** — பிறர்க்கு ஆக்கம் முதலாயின கண்டவழி அதனைப் பொறாது நடக்கும் மன நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 256)

அழுக்காறு; அஃதாவது பிறர் செல்வங் கண்டவழி வேண்டாதிருத்தல். (பேரா. தொல். பொருள். 260)

**பொறி** — பொறியென்பது ஊழ். (இளம். தொல். பொருள். 109)

ஒரு பெயரை யெழுதப்படுதலிற் பட்டத்திற்குப் பொறியென்று பெயர். (நச். சீவ. 1792)

| | |
|---|---|
| **பொறைநிலை** | மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறை நிலை. (அடி. சிலம்பு. 14:11) |
| **பொறையுடைமை** | தமக்குத் துன்பஞ் செய்தாரைத் தாமும் துன்பஞ் செய்யாது அவர்மாட்டுச் சென்ற வெகுளியை மீட்டல். (மணக். திருக். அதி. முன்.) |
| | பிறர் தமக்கு மிகுதியாகச் செய்தவழி வெகுளாமை. (இளம். தொல். பொருள். 74) |
| | காரணம் பற்றியாதல், மடமையானாதல், ஒருவன் தமக்கு மிகை செய்தவழித் தாமும் அதனை அவன்கண் செய்யாது பொறுத்தலை உடையராதல். (பரிமே. திருக். அதி. 16) |
| **பொன்** | சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதமென்னும் இவை நான்கும் பொன்னின் சாதி. (அடி. சிலம்பு. 14:201) |

## போ

| | |
|---|---|
| **போக்கு** | போக்கு எனினும், சுரிதகம் எனினும், வாரம் எனினும், அடக்கியல் எனினும் ஒக்கும். (இளம். தொல். செய். 128) |
| | குறித்த பொருளை முடித்துப் போக்குதலிற் போக்கு. (பேரா. தொல். பொருள். 444) |
| | செய்யுள் பிறிதொன்றனை அவாவாமல் கடை போகச் செய்தலிற் போக்காகும். (நச். தொல். செய். 136) |
| **போகம்** | எல்லாவற்றினும் நுகரவல்ல தன்மை. (நச். சீவ. 1165) |
| **போகாந்தராயம்** | துய்த்தற்குரிய பொருள்களை விலக்குவது. (நச். சீவ. 3081) |
| **போது** | பேரரரும்பு. (பேரா. திருக். 14:174) |
| | அலர்கின்ற முகை. (நச். சீவ. 1228) |

## ம

**மக்கள்** — முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற் பட்டு அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும்.
(பேரா. தொல். பொருள். 588)

**மகரம் (நா)** — கபோதமிரண்டு கையும் அகம் புறம் ஒன்ற வைப்பது. (அடி. சிலம்பு. 3:18)

**மகரமுகம் (நா)** — பெருவிரலும் சுட்டுவிரலும் நிமிர்ந்து கூட ஒழிந்த மூன்று விரலும் தம்முள் ஒன்றி அதற்கு வேறாய் நிற்பது.
(அடி. சிலம்பு. 3:18)

**மகரயாழ் (இ)** — பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழென்னும் நான்கினும் பத்தொன்பது நரம்பு கட்டினது மகர யாழ். (நச். சீவ. 608)

**மகிழ்ச்சியணி** — நெஞ்சுள் நிகழ்ந்த ஆர்வத்தைப் புலப்பட உரைத்தல் மகிழ்ச்சி யென்னும் ஆரவார மாம். (வீர. 168)

**மங்கலத்திசை** — மங்கல மரபினிற் காரியங்கள் செய்வார் வடக்குங் கிழக்கு நோக்கியுஞ் சிந்தித்துச் செய்வார். (நச். தொல். எழுத்து. பாயி.)

**மங்கலம்** — இடக்கர் போல் கூறத்தகாததன்றேனும் மங்கலம் இல்லதை ஒழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலம் என்பர்.
(சீவ. நன். 267)

மங்கலமில்லதை ஒழித்து மங்கலமாகச் சொல்வது. (ஆறு. நன். 267)

**மங்கலமொழி** — மங்கலத்தாற் கூறுஞ்சொல்.
(இளம். தொல். பொருள். 240)

**மடக்கு** — யகமம்; அதாவது வந்த சொல்லே வருதல். (பழை. தண்டி. சொல்ல. 1)

**மடம்** — கொளுத்தக் கொண்டது கொண்டது விடாமை. (இறை. 2; நச். சீவ. 355)

பொருண்மையறியாது திரியக் கோடல்.
(இளம். தொல். பொருள். 248)

| | |
|---|---|
| | பேதைமை. (நம்பி. 35) [பார்க்க : மடமை, மடன்] |
| மடமை | பெரும்பான்மையும் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. (பேரா. தொல். பொருள். 252) |
| மடன் | பெண்டிர்க்குள்ளதோர் இயல்பு. அது, உய்த்துணர்ந்து நோக்காது கேட்ட வாற்றாலுணரும் உணர்ச்சி. (இளம். தொல். பொருள். 243) |
| | கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. (அடி. சிலம்பு. 16:86; நச். தொல். பொருள். 99) |
| மடிமை | சோம்பு. (பேரா. தொல். பொருள். 29) |
| மண்டல அந்தாதி | இறுதி அடியின் இறுதியும் முதலடியின் முதலும் ஒன்றாய் வருவது. (யாப். 52) |
| மண்டலம் (நா) | மண்டல மென்பது மாசறக் கிளப்பிற்<br>பேடு நுனியும் பெருவிரல் நுனியும்<br>கூடி வளைந்துதம் உகிர்நுனை கௌவி<br>ஒழிந்த மூன்றும் ஒக்க வளைவதென<br>மொழிந்தன ரென்ப முழுதுணர்ந்<br>தோரே.<br>(அடி. சிலம்பு. 3:18) |
| மண்டிலம் | நாற்சீரடி ஒத்து வருவன. (பேரா. தொல். பொருள். 427) |
| மணத்திற்குரிய நாள் | மாசித் திங்களில் ஆறாந்தேதி அமாவாசை முதல் பங்குனித் திங்களில் ஐந்தாந்தேதி வரை சந்திரமான பட்சத்தாற் பங்குனி யாகையாலே மண்டபமெடுத்தலும் விவாகங்களும் உரியவாயின. (நச். சீவ. 493) |
| மணம் | பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என இவை. (இறை. 1) |
| | மணம் எட்டாவன. பிரமம், பிரசா பத்தியம், ஆரிடம், தெய்வம், கந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. (இளம். தொல். பொருள். 89) |

**மத்தளம் (இ)** மத்து ஓசைப்பெயர். இசையிடனாகிய கருவிகட்கெல்லாம் தளமாதலான் மத்தளமென்று பெயராயிற்று.

இக்கருவி பலகூத்துக்களுக்கு உரித்தாகலானும் முடிவுகளெல்லாம் இதனுள்ளே பிறத்தலானும் இதனை நான்முகனென்பர். (அடி. சிலம்பு. 3:27)

**மத்திமதீபகம்** நடுவு நின்ற சொல் எல்லாவிடத்தும் பொருள் கொள நிற்பது. (வீர. 150)

**மத்திமதீபம்** மத்திம தீபமாவது இடைநின்ற பொருள் முன்னும் பின்னும் நோக்குதல். (இளம். தொல். செய். 112)

**மத்தியபதலோபன்** உருபும் பொருளும் உடன்தொக்க தொகையை வடநூலார் இடைப்பதங்கள் தொக்க தொகை எனப் பொருள்படும் மத்தியபதலோபன் என்பர். (கோபா. பிரயோ. 26)

**மதர்வை** மயக்கம். (நச். சீவ. 322)

**மதி** அறிவு. (இறை. 6)

**மதிஞானாவரணீயம்** சுப பாவ புத்தியை மறைப்பது. (நச். சீவ. 3081)

**மதியுடம்படுதல்** மதியுடம்படுதல் எனினும், புணர்ச்சியுணர்தல் எனினும் ஒக்கும். (இளம். தொல். பொருள். 125)

**மதுரகவி** சொற்செல்வமும் பொருட் பெருமையும் உடைத்தாய்த் தொடையும் தொடை விகற்பமும் துதைந்து உருவகம் முதலிய அலங்காரங்களை உட்கொண்டு ஓசைப் பொலிவு உடைத்தாய் உய்த்துணரும் புலவர்கட்கு ஒலிகடல் அமிழ்தம் போன்று இன்பம் பயக்கப் பாடுவான். (யாப். 96) (பார்க்க: கவி)

**மயக்கம்** மயக்கமெனினும், வழு எனினும் ஒக்கும். மயக்கம் எழுவகைப்படும் திணை மயக்கம், பால் மயக்கம், இடமயக்கம், கால மயக்கம், மரபு மயக்கம், செப்பு மயக்கம், வினா மயக்கம் என. (இளம். தொல். சொல். 11)

மயக்கம் எழுவகை என்பது உரையிற் கோடும். அவை திணைமயக்கமும், பால் மயக்கமும், கால மயக்கமும், இட மயக்கமும், செப்பு மயக்கமும், வினா மயக்கமும், மரபு மயக்கமும் என ஏழாம். (நச். தொல். சொல். 11)

கூட்டமெனினும் மயக்கமெனினும் ஒக்கும். (சிவ. நன். 110)

மயக்கமாவது மோகித்தல். (இளம். தொல். பொருள். 97)

**மயக்கு அந்தாதி** (தொடைகள் பல) விரவி வருவது. (யாப். 52)

**மயக்கு இயைபு** பலவாய் வந்து இறுவாய் ஒப்பது. (யாப். 40)

**மயிர்க்கண் முரசு** புலியைப் பொருது கொன்று நின்று சிலைத்துக் கோட்டு மண் கொண்ட ஏறு இறந்துழி, அதன் உரிவையை மயிர் சீவாமற் போர்த்த முரசு. (அடி. சிலம்பு. 5 : 88)

**மயூரவியல் வெண்பா** ஈற்றடி எழுத்து மிக்கு ஏனையடி எழுத்துக் குறைந்து தம்முள் ஒவ்வாது வருவது. (யாப். 95)

**மரகதம் (குற்றம்)** இதற்குக் குற்றம் எட்டுள. அவை கருகல் வெள்ளை கல்மணல் கீற்று பொரிவு தராசம் இறுகுதலென இவை. (அடி. சிலம்பு. 14. 184)

**மரபு** மரபு எனினும், இலக்கணம் எனினும் எல்லாம் ஒருபொருட் பன்மொழி. (இறை. 3)

காலமும் இடனும் பற்றி வழக்கு திரிந்தக் காலும் திரிந்தவற்றிற்கேற்ப வழுப் படாமைச் செய்வதொரு முறைமை. (பேரா. தொல். பொருள். 313)

காலந்தொறும் இடந்தொறும் வழக்குத் திரிந்தவற்றிற்கேற்ப வழுப்படாமற் செய் வதோர் முறைமை. (நச். தொல். செய். 1)

**மரபு வழு** பிறிதோர் காரணம் பற்றாது ஒருபொருட்குரிய வழக்கு ஒரு பொருண்மேற் சென்ற தெனப்படும்.
(சேனா. தொல். சொல். 11)

எல்லாப் பொருளையும் பயின்ற மரபினாற் கூறாதது மரபு வழுவாம்.
(தெய். தொல். சொல். 11)

வரலாற்று முறைமை மயங்கச் சொல்வது.
(மயிலை. நன். 374)

**மருட்கை** மருட்கை வியப்பிற் பிறப்பது.
(இளம். தொல். பொருள். 247)

மருட்கை என்பது வியப்பு; அற்புத மெனினும் அமையும்.
(பேரா. தொல். பொருள். 251)

**மருட்கை யுவமை** உவமை கூறுவான் மருட்கை வயத்தனாகி ஒரு பொருட்குக் கூடாத பண்பினைக் கூடுவதாகக் கொண்டு அதனை யொன்றிற்கு உவமையாக்கி உரைப்பது.
(காரி. மாற. 101)

**மருட்செந்தொடை** மோனை முதலாகிய தொடையும் தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுப்பது மருட்செந்தொடை.
(யாப். கா. 56)

**மருட்பா** வெண்பா முதல் வந்து ஆசிரியமாய் இறுவது. கங்கை யமுனைகளது சங்கமம் போலவும், சங்கர நாராயணரது சட்டகக் கலவியே போலவும், வெண்பாவும் ஆசிரியமுமாய் விராவிப்புறநிலை வாழ்த்து முதலாகிய பொருள்கண் மேல் யாப்புற்று மருட்சியுடைத்தாகப் பாவி நடப்பது.
(யாப். 55)

மருட்பா நான்கு (புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, கைக்கிளை) பொருளினல்லது வரப்பெறா தாயிற்று. (இளம். தொல். செய். 154)

| | |
|---|---|
| **மருட்பாவோசை** | செப்பல் முன்னதாகவும் அகவல் பின்னாகவும் வருவது. (பேரா. தொல். பொருள். 397) |
| | செப்பலும் அகவலும் கூடியது மருட்பா வாயிற்று. (நச். தொல். செய். 85) |
| **மருள் (பிறப்பு)** | மருள் என்பது அறிவின்றியே மயங்கி யிருக்குமது. (பழை. புறம். 28) |
| **மரூஉ** | தோன்று தொட்டதன்றி இடையே இலக்கணம் சிறந்துமரீஇயது மரூஉவாகும். |
| | ஒழிந்த சிதைவெல்லாம் மரூஉ. (சிவ. நன். 267) |
| | தோன்று தொட்டு வருதலின்றி இடையிலே சிலவெழுத்துக் கெட்டும், சிலவெழுத்துத் திரிந்தும், சிலவெழுத்துத் தோன்றியும் இலக்கணத்திற் சிதைந்து தானே மருவி வழங்குவது. (ஆறு. நன். 367) |
| **மரூஉத்தொகை** | இலக்கணப்போலி போல முன்பின்னாக மாறி (வருவது). (கோபா. பிரயோ. 19) |
| **மலிதல்** | இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலியவற்றான் மகிழ்தல். (நச். தொல். செய். 187) |
| **மறப்பு** | யாதொன்றாயினும் கற்றதனையுங் கேட்டதனையும் பயின்றதனையும் மறத்தல். (இளம். தொல். பொருள். 270) |
| **மறுபொருளுவமை** | முன்னர் வைத்த பொருட்கு நிகரானதொரு பொருளைப் பின்னர் வைப்பது. (பழை. தண்டி. பொரு. 5) |
| | முன்னர் வைத்த பொருட்கு நிகராவதோர் பிறிதொரு பொருள் பின்னரும் அதன்கண் வைப்பது. (காரி. மாற. 101) |
| **மறை** | நான்கு கூறுமாய் மறைந்த பொருளுடைமையினான் மறையென்றார். அவை தயித்திரியமும், பௌடிகமும், தலவகாரமும் சாமவேதமுமாம். இனி இருக்கும் எசுரும் சாமமும் அதர்வணமும் என்பாரும் உளர். (நச். தொல். எழுத்து. பாயி.) |

மறையாவன தைத்திரியமும் பௌடிய முந் தலவகாரமும் சாமவேதமுமாம். (நச். கலி. கடவுள் வாழ்த்து)

**மறையோர்** மறையோர் என்றது அந்தணரை. (இளம். தொல். பொருள். 89) [பார்க்க: அந்தணர்]

**மன்றம்** அரண் இல்லாத வீடு. (அரும். சிலம்பு. 23; 46)

ஊர்க்கு நடுவாய் எல்லாரும் இருக்கும் மரத்தடி. (நச். திரு. 226)

**மன்றல்** மன்றலெட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என இவை. (நம்பி. 117; நச். தொல். பொருள். 92)

**மன்னன் கடமை** மன்னர்க்குரிய பக்கமாவது காவல்; அஃதாவது நெறியின் ஒழுகாதாரை நெறியின் ஒழுகப் பண்ணுதல். (இளம். தொல். பொருள். 32)

**மனத்தறிவு** மனத்தாலறியப்படுவது இதுபோல்வன வேண்டுமெனவும், இது செயல் வேண்டுமெனவும், இஃது எத்தன்மைத்து எனவும் அனுமானித்தல். (இளம். தொல். பொருள். 571)

**மனப்பரியய ஞானவரணீயம்** மனப்பரியய ஞானத்தை மறைப்பது என்பது தன்னுடைய முற்பிறப்பையும், பிறருடைய முற்பிறப்பையும் அறியும் அறிவை மறைப்பது. (நச். சீவ. 3081)

## மா

**மா** மா வென்பது விலங்கு வடிவமாகப் பிறக்குமது. (பழை. புறம். 28)

**மாக்கள்** மன உணர்ச்சி இல்லாதார். (பேரா. தொல். பொருள். 587)

மக்கட்குரிய மனன் இன்றி அறிவுகெட்டமையின் ஐயறிவுடையாரை (மாக்கள் என்பர்). (நச். சீவ. 1278)

**மாட்டு** — பல்வேறு பொருட் பரப்பிற்றாயினும் அன்றாயினும் நின்றதனொடு வந்ததனை ஒரு தொடர் கொளீஇ முடித்துக் கொள் ளச் செய்தல்.
(பேரா. தொல். பொருள். 313)

மாட்டென்றது அகன்றும் அணுகியும் கிடந்த பொருள்களைக் கொண்டு வந்து தொடராகக் கூட்டி முடித்தல்.
(நச். தொல். செய். 1)

மாட்டென்னும் உறுப்புாவது இரண்டி றந்த பலவடிக்கண்ணும் பல செய்யுட் டொடரின் கண்ணும் அகன்றும் அணுகி யும் வரும். (நச். தொல். சொல். 409)

**மாடகம்** — பாலிகை வடிவான விசிக்குங் கருவி.
(நச். சீவ. 1697)

**மாணாமை** — ஒரு நிலையில் நில்லாமை.
(பரிமே. திருக். 1297)

**மாத்திரை** — எழுத்தினது குணம்.
(பேரா. தொல். பொருள். 313)

கண்ணிமைத்தலொடு கைநொடித்தல் ஒத்த காலம். (யாப். 2)

**மாத்திரை (இ)** — இரண்டரை நாழிகையை *எட்டுக் கூறிட்டு ஒரு கூறென்றறிக.
(அடி. சிலம்பு. 3:26)

**மாத்திரைச் சுருக்கம்** — ஒருபொருள் பயந்து நிற்பதொரு சொல், ஒரு மாத்திரையைக் குறிப்பப் பிறிதொரு பொருள் பயக்குஞ் சொல்லாய் நிற்பது.
(பழை. தண்டி. சொல்ல. 7)

ஒரு பொருள் பயந்து நிற்கும் ஒரு சொல் லாயினும் பல பொருள் பயந்து நிற்கும் தொடர் சொல்லாயினு முதலெழுத்து ஒரு மாத்திரை குறையப் பிறிதொரு பொருள் பயப்பதாயும் பல பொருள் பயப்பதாயும் பாடுவது. (காரி. மாற.299)

---

* 'இருபத்தெட்டுக் கூறிட்டு' என்றும் பாடம்.

| | |
|---|---|
| **மாத்திரைப் பெருக்கம்** | முன்பு போல வரும் சொற்கள் முதலெழுத்து ஒரு மாத்திரை யேறப் பிறிது பொருள் பயப்பது. (காரி. மாற. 299) |
| **மாத்திரை வருத்தனம்** | ஒரு பொருள் பயந்து நிற்பதொரு ஒரு மாத்திரையைப் பெருக்கப் பிறிதொரு பொருள் பயக்குஞ் சொல்லாய் நிற்பது. (பழை. தண்டி. சொல்ல. 7) |
| **மாலை** | இராப்பொழுதின் முற்கூறு. (இளம். தொல். பொருள். 6) |
| | நிசியின் முன்னும் எற்பாட்டின் பின்னும் உண்டாகிய காலம். (நம்பி. 12) |
| **மாலை மாற்று** | ஈறு முதலாக வாசித்தாலும் அப்பாட்டே வருவது. (யாப். 96) |
| | மீளவாசித்தாலும் அதுவேயாவது. (வீர. 179) |
| | ஒரு செய்யுளை ஈறு முதலாக வாசித்தாலும் அச்செய்யுளேயாவது. (பழை. தண்டி. சொல்ல. 7) |
| **மாலை யுவமை** | ஒரு பொருட்குப் பல உவமை வந்தால் அவை ஒன்றோடொன்று இடைவிடாத தொடர்ச்சி யுடையவாகப் புணர்த்துக் கடைக்கண் பொருள் கூட்டி முடிப்பது. (பழை. தண்டி. பொரு. 5) |
| | ஒரு பொருட்குப் பலவுவமை வந்தால் அவை ஒன்றோடொன்று இடைவிடாது தொடர்ச்சியுடையவாகப் புணர்த்துக் கடைக்கண் பொருளை வெளிப்படையாகக் கூட்டி முடிப்பது. (காரி. மாற. 101) |
| **மான்றலை (நா)** | பெருவிரலும் சிறுவிரலும் ஒழிந்த மூன்றும் தம்மில் ஒத்து ஒன்றி முன்னே இறைஞ்சி நிற்பது. (அடி. சிலம்பு. 3:18) |
| **மானம்** | எக்காலத்திலும் தமது நிலைமையில் திரியாமை: இது மூன்று வகைப்படும். தமது தன்மை குன்றுவன செய்யாமையும், இகழ்வார் மாட்டுச் செல்லாமையும், இளிவரவு பெறாமையும் என. (மணக். திருக். அதி. முன்.) |

எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழா மையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம். (பரிமே. திரு. அதி. 97)

## மி

| | |
|---|---|
| மிகுதல் | மிகுதல் என்பது பெருகுதல். அஃது ஒன்று பன்னாளும் வருதலும், பல மயங்கி வருதலும், முறையாற் றோன்றி வருதலும். (இறை. 16) |
| மிகைஎண் நிரல்நிறை | இரண்டு பொருள் நிறுவிப் பின் ஒருவழி மூனறு பொருள் நிறுவுதல். (யாப். 95) |
| மிடற்றுப் பாடல் (இ) | மூலாதாரம் தொடங்கிய மூச்சைக் காலாற் கிளப்பிக் கருத்தாலியக்கி ஒன்றெனத் தாக்கி இரண்டெனப் பகுத்துப் பண்ணீர்மைகளைப் பிறப்பிக்கப்பட்ட பாடலியலுக்கு அமைந்த மிடற்றுப் பாடல். (அரும். சிலம்பு. 3:36) |
| மின் | மின்னென்பது மின்னுதற் றொழிலும் மின்னு நிமிர்ந்தன்னவென மின்னெனப் படுவதோர் பொருளுமுணர்த்தும். (நச். தொல். எழு. 345) |

## மீ

| | |
|---|---|
| மீளிமை | கொங்கையின் வலி. (நச். சீவ. 1486) |
| மீனராசி | பூரட்டாதியின் நாலாங்காலும் உத்திரட்டாதியும் இரேவதியும் மீனராசியாகும். (நச். சீவ. 590) |

## மு

| | |
|---|---|
| முக்குடை | சந்திராதித்தம், நித்திய வினோதம், சகல பாசனம் என்பன. (அடி. சிலம்பு. 11:1) |
| முகச்சார்த்து (நா) | மூன்றடி முதல் ஆறடி ஈறாக வரும்; இடை நான்கடியானும் ஐந்தடியானும் வரும். (அடி. சிலம்பு. 7:19) |
| முகம் (நா) | முகமாவது எழுவகைப்பட்ட உழவினாற் சமைக்கப்பட்ட பூமியிலிட்ட வித்து |

பருவஞ் செய்து முளைத்து முடிவது போல்வது(அடி. சிலம்பு. 3:13)

உழுப்புப் புத்தியினின்று முளைத்தாற் போலக் கூத்தின் முகத்தினுள்ளே பொருள் தோன்றுவது. (வீர. 104)

**முகவுரை** பாயிரத்தின் இலக்கணங்களை முன் உணர்ந்தல்லது நூல்களைச் செய்தலும், அவற்றை ஏற்றலும் முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரை. (சிவ. நன். 1)

முகவுரை நூற்கு முன் சொல்லப்படுவது. (ஆறு. நன். 1)

**முகுளம் (நா)** ஐந்து விரலும் தம்மில் தலைகுவிந்து உயர்ந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3:18)

**முச்சீர்** வெண்பாவின் ஈற்றடியும் நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும் கலிவெண்பாவின் ஈற்றடியும் முச்சீரான் வரப்பெறும். (யாப். கா. 22)

**முச்செல்வம்** செல்வம் மூன்றாவன: போகமும், செல்வமும், வீரமும். (நச். சீவ. 189)

**முட்டி (நா)** முட்டி யென்பது மொழியுங் காலை
சுட்டு நடுவிரல் அநாமிகை சிறுவிரல்
இறுக முடக்கி இவற்றின்மிசைப்
பெருவிரல்
முறுகப் பிடித்த முறைமைத் தென்ப.
(அடி. சிலம்பு. 3:18)

**முடுக்கர்** நீர் குத்தின இடங்கள். (நச். மலை. 213)

**முடுகியலடி** முடுகியலோடு விராய்த் தொடர்ந்து ஒன்றாகிய வெண்பா அடி. (பேரா. தொல். பொருள். 434)

**முத்தமிழ்** சித் தசித் தீச்சுரம் மூன்றுங் கூறும் தமிழ் (காரி. மாற. 92)

**முத்தி** முத்தியாவது எங்குமொக்க வியாத்தியை யடைந்திருத்தல். (பேரா. திரு. 14:4)

**முத்தீ** ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி. (அரும். சிலம்பு. 23:18)

முத்தீயாவன: ஆகவனியம், காருக் பத்தியம், தென்றிசையங்கி.
(பழை. புறம். 2)

முதல் சினை — ஒன்றற்குச் சினை மற்றொன்றற்கு முதலாயும், ஒன்றற்கு முதல் மற்றொன்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின் இவையே முதல் இவையே சினை யென வேறறியக் கிடப்பன் இல்லை.
(சிவ நன். 316)

முதல்நிலை அளபெடைத் தொடை — முதல் நின்ற சொல்லின்கட் பின்னும் எழுத்துப் பெற்று முதலெழுத்து அளபெடுப்பது. (யாப். 41)

முதல் நூல் — குற்றங் கெடுத்து முற்ற உணர்ந்த நற்றவத்தோன் சொற்றதாகும்.
(யாப். பாயி.)
வரம்பில் அறிவன் பயந்ததாகும்.
(யாப். 1)

முதற்கருவி — செயப்படுபொருளோடு ஒற்றுமையுடையது. முதற்காரணம், ஆதிகாரணம், சமவாயிகாரணம் என்பன ஒரு பொருட் சொற்கள். (ஆறு. நன். 297.)

முதற் காரணம் — காரியத்தோ டொற்றுமையுடையது.
(நச். தொல். சொல். 74; ஆறு. நன். 58)

முதனிலைத் தொழிற் பெயர் — தொழிற்பெயர் விகுதி குன்றி முதனிலை மாத்திரை நின்று தொழிற்பெயர் பொருளைத் தருவதாம். (ஆறு. நன். 207)

முதிர்தல் — (பெண்களுக்குப்) பன்னீராண்டுஞ் சென்று முலை முதிர்தல் செய்யும்.
(நச். சீவ. 1486)

முந்நீர் — யாற்று நீரும் ஊற்று நீரும் மழைநீருமுடைமையான் கடற்கு முந்நீர் என்று பெயராயிற்று. (பழை. புறம். 9)

முச்செய்கையையுடைய நீர் முந்நீர் என்பது. முச்செய்கை யாவன மண்ணைப் படைத்தலும் மண்ணை அழித்தலும் மண்ணைக் காத்தலுமாம்.
(அடி. சிலம்பு. 17:31)

நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுடைமையின் முந்நீர் ஆகுபெயர். (நச். சிவ. 5)

**முப்பத்து மூவர்** அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம். (நச். திரு. 167)

**முயற்சி விலக்கு** முயச்சி தோன்றக் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**முரச பந்தம்** ஓரடி ஒரு வரியாக நான்கு வரி எழுதி மேலிரண்டு வரியும் தம்முள் கோமூத்திரியாகவும், கீழிரண்டு வரியும் தம்முள் கோமூத்திரியாகவும், சிறுவார் போக்கி மேல்வரி தொடங்கி இரண்டாம் வரியினும் மூன்றாம் வரியினும் நான்காம் வரியினும் கீழுற்று மீண்டு மேனோக்கவும், கீழ்வரி தொடங்கி அவ்வாறே மேலுற்று மீண்டு கீழ் நோக்கவும், பெருவார் போக்கி இந்த வார் நான்கும் நான்கு வரியாகவும் பாடுவது. (பழை. தண்டி. சொல்ல. 7)

**முரசு மூன்று** முரசு மூன்றாவன வீரமுரசு, தியாக முரசு, நியாய முரசு என்பன. (நச். கலி. 132:4)

வீரமுரசும் நியாய முரசும் தியாக முரசும் என. (பழை. புறம். 58)

**முரண்** முரண் மூன்று வகைப்படும். அவை சொல்லால் முரணுதலும், பொருளான் முரணுதலும், சொல்லும் பொருளும் தம்முள் முரணுதலும் என. (யாப். 38)

சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொ்ல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என. (பேரா. தொல். பொருள். 407; நச். தொல். செய். 95)

| | |
|---|---|
| முரண் இயைபு | முரணாய் வந்து இறுவாய் ஒப்பது. (யாப். 40) |
| முரண் தொடை | இரணத் தொடை எனினும், பகைத் தொடை எனினும், முரண் தொடை எனினும் ஒக்கும். (யாப். கா. 55) |
| முரண் தொடை (சிறப்பு) | அசையும் சீரும் தம்முள் மறுதலைப்படத் தொடுப்பது சிறப்புடைத்து. (யாப். கா. 17) |
| முரண் வினைச் சிலேடை | மாறுபட்ட வினையான் வருவது. (பழை. தண்டி. பொரு. 51) |
| முரம்பு | கல்விரவி உயர்ந்திருக்கும் நிலம். (பேரா. திரு. 16:9) |
| முருகாற்றுப்படை | முருகன்பால் வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை ஆற்றுப்படுத்துவது. (நச். தொல். பொருள். 90) |
| | வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்தது. (நச். திரு. 317) |
| முருகு | தெய்வத்தன்மை. (நச். மது. 181) |
| முல்லை | கற்பு. (நச். சீவ. 686) |
| முல்லை சூடுதல் | கற்பின் மிகுதி தோன்ற முல்லை சூடுதல் இயல்பு. (நச். சிறு. 30) |
| முழம் | சாண் இரண்டு கொண்டது. (யாப். 95) [பார்க்க : சாண்] |
| முழு அரண் | முழு அரணாவது மலையும் காடும் நீருமல்லாத அகநாட்டுட் செய்த அருமதில். (நச். தொல். பொருள். 65) |
| முற்றியலுகரம் | மெல்லெழுத்தும் இடையெழுத்தும் சார்ந்து வரும் உகரம். (யாப். 95) |
| முற்று | மற்றொரு பொருளை நோக்காது வரும். (தெய். தொல். சொல். 251) |
| | ஐம்பாலவாகிய வினை முதலைத் தரும் விகுதியுறுப்புக் குறைந்த குறைச் சொல்லாகிய எச்சங்களைப் போலாது அவ்வுறுப்போடு கூடி நிறைந்து நிற்றலின் முற்று. |

| | |
|---|---|
| | பெயரன்றி வினைச்சொல் முதலியவற்றுள் ஒன்றனையும் ஏலாதன முற்று. பெயரன்றிப் பெயர்ப்பின் வேறொன்றனையும் ஏலாதன முற்று. (சிவ. நன். 323) |
| முற்றுச்சொல் | செய்கையும் பாலும் காலமும் செயப்படு பொருளும் தோன்றி நிற்றலின் முற்றுச் சொல் என்பாரும், மற்றோர் சொல் நோக்காது முடிந்து நிற்றலின் முற்றுச் சொல் என்பாரும், எக்கால் அவைதாம் எச்சம் பெற்று நின்றன அக்கால் பின் யாதும் நோக்காவாய்ச் செப்பு முயிற்றுப் போல அமைந்து மாறுதலின் முற்றுச் சொல் என்பாரும் என இருபகுதியர் ஆசிரியர். (இளம். தொல். சொல். 421) |
| முற்று நிரல்நிறை | நான்கு சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தல். (யாப் 95) |
| முற்றுருவகம் | அவயவ அவயவிகளை ஏற்ற விடத் தோடும் பிறவற்றோடும் முற்ற உருவகஞ் செய்து உரைப்பது. (பழை. தண்டி. பொரு. 10) |
| | அவயவ அவயவிகளை யேற்ற விடத் தோடும் பிற விடத்தினோடும் முற்ற உருவகஞ் செய்வது. (காரி. மாற. 120) |
| முற்றுவமை | அவயவ அவயவிகளை ஒரு செய்யுளாகத் தொக்க உவமிப்பது. (காரி. மாற. 101) |
| முறை | அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறி. (பரிமே. திருக். 388) |
| முறைப்பெயர் | பிறப்பு முறைப் பற்றி வரும் பெயர். (தெய். தொல். சொல். 169) |
| முறைமையாற் சிறத்தல் | யாதானும் ஒரு செய்யுட்கண் முதற் பொருளும் கருப்பொருளும் உரிப் பொருளும் வரின் முதற்பொருளால் திணையாகும் என்பதூஉம், முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின் கருப் பொருளால் திணையாகும் என்பதூஉம். உரிப்பொருள் தானே வரின் அதனால் திணையாகும் என்பதூஉம் ஆம். (இளம். தொல். பொருள். 3) |

| | |
|---|---|
| **முன்தேற்று** | புறத்தின்றித் தெய்வ முதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல். (சேனா. தொல். சொல். 383) |
| **முன்பனிக்காலம்** | மார்கழித் திங்களும் தைத் திங்களும். (இளம். தொல். பொருள். 8) |
| **முன்னம்** | உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோரும் தத்தம் வகையான் ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துரைப்பச் செய்தல். (பேரா. தொல். பொருள். 313) |
| | கூறுவாரையும் கூறக் கேட்டோரையும் குறிப்பான் எல்லாரும் கருதும்படி செய்தல். (நச். தொல். செய். 1) |
| **முன்னிலைப் புறமொழி** | முன்னிலையாக நிற்பாரைக் குறித்துப் பிறனைக் கூறுமாறு போலக் கூறுதல். (இளம். தொல். பொருள். 165) |
| **முன்னிலை வினை** | முன்எதிர் முகமாய் நின்றான் தொழி லுணர்த்துவது. (சேனா. தொல். சொல். 222) |
| **முன்னுற வுணர்தல்** | இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்றை அவளது வேறுபாடு கண்டு தெய்வத் தினான் ஆயிற்றுக் கொல்லோ மற்றொரு வாற்றானாயிற்றுக் கொல்லோ என ஐயுற்று நிற்பது. (இறை. 7) |
| | பாங்கி தலைமகளது வடிவு வேறுபாடு கண்டு அதனானே கூட்டமுண்மை யறிதல். (நம்பி. 117) |
| **முனிதல்** | வெறுத்தல்; அஃது அருளுஞ் சினமும் இன்றி இடை நிகர்த்தாதல். (பேரா. தொல். பொருள். 260) |

## மூ

| | |
|---|---|
| **மூலாதாரம்** | (தன் கையால் தொண்ணூற்றாறங்குலம் சரீரத்தளவினுள்) மேலே நாற்பத்தேழரை அங்குலமும் கீழே நாற்பத்தேழரை அங் குலமும் விட்டு நடுநின்ற ஓரங்குலம் மூலாதாரம். (அடி. சிலம்பு. 3:26) *[பார்க்க: உடல் அளவு]* |

**மூவேழ்துறை (இ)** வலிவு மெலிவு சமம் என்னும் மூன்று தானத்திலும் ஒவ்வொன்றில் ஏழு தானம் முடித்துப் பாடும் பாடல் துறையை; அன்றி பேரியாழெனினும் அமையும். (பழை. புறம். 152)

**மூன்றாம் வேற்றுமை** மூன்றாம் வேற்றுமை காரண காரியத்தை வேறு உணரவும் நிற்கும்; வேறன்றி உணரவும் நிற்கும். (இறை. 1)

## மெ

**மெய்** மெய்யெனினும் உடம்பெனினும் உறுப் பெனினும் ஒற்றெனினும் புள்ளியெனினும் ஒக்கும். (யாப். கா. 4)

மெய்யென்பது பொருள்.
(இளம். தொல். சொல். 292)

மெய்யென்பது உடம்பு; அஃதாவது அசை யும் சீரும் தோற்றுதற்கிடமாகிய எழுத்து. (இளம். தொல். செய். 48)

**மெய்க்கூத்து (நா)** (இது) தேசி வடுகு சிங்களமென மூவகைப் படும். இவை மெய்த்தொழில் கூத்தா கலின் மெய்க் கூத்தாயின.
(அடி. சிலம்பு. 3:12)

மெய்க்கூத்தாவது தேசி, வடுகு, சிங்களம்; இவை மெய்த்தொழில் கூத்தாதலில் காரணப்பெயர். சாத்துவீகம், இராசதம், தாமதமென்னும் அகச்சுவை பற்றி ஆடு தலின் அகமார்க்க மெனப்படும்.
(நச். சீவ. மாலை.)

**மெய்ந்நிலை (நா)** சிறுவிரலும் பெருவிரலும் தம்முட் கூட ஒழிந்த மூன்று விரலும் விட்டு நிமிர்வது. (அடி. சிலம்பு. 3:18)

**மெய்ப்பாடு** மெய்ப்பாடு எட்டு வகைப்படும். அவை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, உவகை, அச்சம், பெருமிதம், வெகுளி எனவிவை. (இறை. 56)

மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப் பாடாயிற்று.
(இளம். தொல். பொருள். 247)

மெய்ப்பாடு எட்டாவது நகை, அழுகை, உவகை, இளிவரல், அச்சம், பெருமிதம், மருட்கை, வெகுளி.
(இளம். தொல். பொருள். 194)

புறத்துக் கண்டதோர் பொருள் காரண மாக நெஞ்சின்கண் தோன்றிய விகாரத் தின் விளைவு. (பேரா. திரு. 1:1)

சொற் கேட்டார்க்குப் பொருள் கண் கூடாதல். (பேரா. தொல். பொருள். 313)

உணர்ந்த பொருட் பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடு.
(பேரா. தொல். பொருள். 516)

மெய்ப்பாடென்பது பொருட்பாடு. அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப் படுதல். (பேரா. தொல். பொருள். 249)

உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவ தோராற்றான் வெளிப்படுதல்.
(நச். தொல். செய். 204)

மெய்ப்பாடென்றது சொற்கேட்டார்க்குப் பொருள் கட்புலனாதல்.
(நச். தொல். செய். 1)

**மெல்லின நடை** மெல்லெழுத்து மிகத் தொடுப்பது.
(யாப். 53)

**மெல்லெழுத்து** மெல்லென்று இசைத்தலானும் மெல் லென்ற மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்து எனப்பட்டது.
(இளம். தொல். எழுத்து. 20)

மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்று மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல் லெழுத்தாயிற்று.
(நச். தொல். எழுத்து. 20)

**மென்புலம்** மென்புலமாவது மருதமும் நெய்தலும்.
(பழை. புறம். 42)

மென்மை — மெல்லிய மகளிர்முன் வன்மை கூறலாகா. (இளம். தொல். செய். 186)

## மே

மேற்கதுவாய் நிரல்நிறை — இரண்டாம் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் நிரல்நிறுத்தல். (யாப். 95)

மேற்கோள் — ஆசிரிய வசனம், மேற்கோள், பழஞ் சூத்திரம் என்பவை ஒருபொருட் சொற்கள். (ஆறு. நன். 9)

மேற்செம்பாலை (இ) — தாரம் குரலாக மேற் செம்பாலை பிறக்கும். (யாப். 96)

## மை

மைகாசமானம் — நான்கடியும் முற்றக் குருவே வரினும் முற்ற லகுவே வரினும் குருவும் லகுவுமாய் முறையே வரினும் மைகாசமானம் என்று பெயராம். (வீர. 137)

மையல் — தன்னை ஆக்கினவனைக் கொல்லுதல். (நச். சீவ. 385)

செல்வச் செருக்கு. (நச். சீவ. 589)

## மொ

மொழி சிதைத்தல் — ஒற்றுமைப் பட்டிருக்கின்றதனைப் பிரித்தல். அஃதாவது புளிமா என்ற வழி நிரை நேராக அலகிடாது முதல் நின்றதனை நேரசையாக்கி புளி என்னுஞ் சொல்லைப் பிரிக்க வேண்டுதலின் நிரை யசையாகவே கோடல் வேண்டுமென்ற வாறு. இனி மொழி சிதையாக்கால் நேரசையாம். (இளம். தொல். செய். 6)

மொழி சிதைத்தலென்பது விட்டிசையாத மொழியை விட்டிசைத்து மொழிதல். (பேரா. தொல். பொருள். 319)

மொழி மாற்று — கேட்டோர் கூட்டியுணரு மாற்றான் ஈரடிக் கண்ணே வருவது. (நச். தொல். சொல். 409)

| | |
|---|---|
| மொழி மாற்றுதல் | செய்யுள் கிடந்தவாறு செய்யலாகாத வழிச் செய்வது. (இறை.3) |
| மொழி முதல் | இருபத்திரண்டு முதலாவன : பன்னீருயிரும் ஒன்பது மெய்யும் மொழி முதற் குற்றியலுகரமுமாம். (நச். தொல். எழுத்து. 103) |
| மொழி யிறுதி | இருபத்து நான்கீறாவன : பன்னீருயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக் குற்றிய லுகரமுமாம். (நச். தொல். எழுத்து. 103) |

## மோ

| | |
|---|---|
| மோகவுவமை | ஒரு பொருளின் லெலெழுந்த வேட்கை யால் அதற்கு உவமையாகக் குறிக்கப்பட்ட அதன் மேலும் வேட்கை மிகுந்ததாகக் கூறுதல். (காரி. மாற. 101) |
| மோட்டு மீன் | உடு. (நச். சீவ. 2325) |
| மோரியர் | மோரியராவார் சக்கரவாள சக்கர வர்த்திகள்; விச்சாதரரும், நாகருமென்ப. (பழை. புறம். 175) |
| மோனை இயைபு | மோனையாய் வந்து இறுவாய் ஒப்பது. (யாப். 40) |

## ய

| | |
|---|---|
| யதோத்தேசபக்கம் | வேந்தனிருந்துழி யிருந்து தன்னில முழுவதுந் தன்னாணையினடப்பச் செய்வது போல ஒரு சொன்னின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல வோத்துக்களும் தன் பொருளே நுதலிவரச் செய்வது. (சிவ. தொல். சூ. ப. 25) |

## யா

| | |
|---|---|
| யாண்டு | யாண்டு என்றது மாசித் திங்களில் தோன்றிய பங்குனிப் பிறை முதலாக மேல் வருகின்ற மாசியிற் பங்குனிப் பிறை யளவும் பன்னிரு மதியமாதல். (நச். சீவ. 489) |

யவாத்திமம் — அளவழிச் சந்தங்களில் முதலடியும் நான் காமடியும் சீர் ஒத்து ஓரெழுத்துக் குறைந்து நடு இரண்டடியும் சீர் ஒத்து ஓர் எழுத்து மிக்கது யவாத்திமம் என்றும் தோரையிடைச் செய்யுள் என்றும் வழங் கப்படும். (யாப். 95)

யாண்டு (பருவம்) — பன்னீர் யாண்டும் பதினாறியாண்டுமே பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பருவமென்பது.
(பேரா. தொல். பொருள். 273)

யாப்பானந்தம் — முன் தொடுக்கப்பட்ட சிறப்புடை மொழி யின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர் நிறீஇ அதன் பின்னே சிறப்புடை மொழி நிறீஇச் சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறு இடர்ப்படப் பாடுவது.
(யாப். 96)

யாப்பு — யாப்பு எனினும், பாட்டு எனினும், தூக்கு எனினும், செய்யுள் எனினும், தொடர்பு எனினும் ஒக்கும்.
(யாப். பாயி.) (யாப். கா. பாயி.)

சொற்பொருள் உணர்வு வண்ணங்கள் தொடர்ந்து குற்றமின்றி அவை தம்முள் தழுவும் கோள் உடையவாய் இன்பம் பெருக்கி அம்மை முதலாகிய வனப்பு அலங்காரமும் செம்மையும் செறிவும் பெறுவழிப் பெற்று இம்மை மறுமைக்கு நன்மை பயந்து எல்லார்க்கும் புலனுற நடைபெறுவது. (யாப். 54)

அடிதோறும் பொருள் பெறச் செய்வ தொரு செய்கை.
(பேரா. தொல். பொருள். 313)

அடிதோறும் பொருளேற்று நிற்பச் செய்வதோர் செய்கை.
(நச். தொல். செய். 1)

இருசீரானும் முச்சீரானும் குறித்த பொருளை முடிப்பனவும், அங்ஙனம் முடித்தொழிந்து அச்சீரை மேல் வருகின்ற

அடியோடு பொருண் முடியச்செய்வனவும் சிறுபான்மை யாப்பென்று கொள்க.
(நச். தொல். செய். 78)

யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒரு பொருட்கிளவி. (சிவ. நன். பாயி.)
(சிவ. தொல். சூ. ப. 21)

**யாப்பு (வகை)** நூல் யாக்குமிடத்து நான்கு வகையால் யாக்கப்படும். தொகுத்தும் விரித்தும், தொகை விரியாகவும், மொழி பெயர்த்தும் என. (இறை. 1)

**யாப்பு வழு** யாப்பதிகாரத்தோடு மாறு கொள்வது.
(யாப். 95)

**யாமம்** இராப்பொழுதின் நடுக்கூறு.
(இளம். தொல். பொருள். 7)

**யாழ்** யாழ் நால் வகைப்படும். அவை பேரி யாழ், மகர யாழ், சகோட யாழ், செங் கோட்டி யாழ் என்பன. இந்நால்வகை யாழிற்கும் நரம்பு கொள்ளுமிடத்துப் பேரியாழிற்கு இருபத்தொன்றும், மகர யாழிற்குப் பத்தொன்பதும், சகோட யாழிற்குப் பதினாலும், செங்கோட்டி யாழிற்கு ஏழும் கொள்ளப்படும்.
(அடி. சிலம்பு- 3:26)

**யாற்றொழுக்கு** கருதிய பொருளை வழுவாமற் சூத்திரம் ஒருங்குபடக் கிளத்தல்.
(இளம். தொல். பொருள். 656)

**யானை** யனைக்கு உத்தம இலக்கணம் ஏழு முழ வுயரம். (நச். சீவ. 775)

## யோ

**யோகநெறி** இயமம், நியமம், இருப்பு, உயர்நிலை, மன ஒழுக்கம், தாரணை, தியானம், சமாதி என எண் வகைப்படும்.
(பரிமே. திருக். 359)

**யோகம்** யோகம் எண் வகைய. அவை இயமம் நியமம் ஆசனம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதியென்பன.
(அடி. சிலம்பு. 14:11)

யோகம் செய்வார்க்குரியன: இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, பொறை நிலை, நினைதல், சமாதி என்னும் எட்டும் ஆம். (நச். தொல். பொருள். 75)

**யோனி (நா)** யோனி நான்கு வகைப்படும். உள்ளோன் தலைவனாக உள்ளதோர் பொருள்மேற் செய்தலும், இல்லோன் தலைவனாக உள்ளதோர் பொருள்மேற் செய்தலும் உள்ளோன் தலைவனாக இல்லதோர் பொருள்மேற் செய்தலும், இல்லோன் தலைவனாக இல்லதோர் பொருள்மேற் செய்தலும் என இவை.
(அடி. சிலம்பு. 3:13)

**ல**

**லகு** குற்றெழுத்து ஒற்று அடாது வருவது லகு: அது ரகர வடிவிற்று. (யாப். 96)

**வ**

**வகை** குறுந்தெரு. (நச். சீவ. 462)

**வகையுளி** முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புக்கள் நிற்புழி அறிந்து குற்றப் படாமை வண்ணம் அறுத்தல். (யா. 95)

முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புக்கள் நிற்புழி அறிந்து குற்றப் படாமல் வண்ணம் அறுத்தல்.
(யாப். கா. 58)

பொருளொடு சொல்லை அறுத்தவழித் தளையும் சீரும் சிதையின் அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழிச் சேர்த்துக.
(இளம். தொல். செய். 10)

**வசை** வசையும் இரண்டு வகைப்படும். மெய் வசையும் இருபுற வசையும் என.
(யாப். 95; யாப். கா. 58)

வெளிப்படக் கூறக் கேட்டார்க்குந் தனக்கும் இன்பம் பயத்தலிற் குறிப்

பினாதற் கூறல் வேண்டுவது வசையென்று கொள்ளப்படும்.
(இளம். தொல். செய். 172)

புகழ் போன்று வசையாதலும் வசை போன்று புகழாதலும் படவரும்.
(நச். தொல். செய். 124)

**வஞ்சி** வஞ்சி யென்றது ஒருவர் மேல் ஒருவர் சேறல். (நச். தொல். பொருள். 61)

**வஞ்சித்தாழிசை** ஒரு பொருள்மேல் மூன்றடுக்கியல்லது வாரா. (யாப். கா. 46)

குறளடி நான்கினால் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வரும்.
(இளம். தொல். செய். 175)

**வஞ்சித்துறை** குறளடி நான்கினால் தனித்து வரும். (இளம். தொல். செய். 175)

**வஞ்சிநிலைத் தாழிசை** ஒரு பொருள்மேல் மூன்றாய் அடிமறி ஆகாதே வருவன. (யாப். 91)

**வஞ்சிநிலைத்துறை** ஒரு பொருள்மேல் ஒன்றாய் அடிமறி ஆகாதே வருவன. (யாப். 91)

**வஞ்சிநிலை விருத்தம்** முச்சீர் அடி நான்காய் அடிமறி ஆகாதே வருவன. (யாப். 92)

**வஞ்சிப்பா** வஞ்சிப்பா ஆசிரியச் சுரிதகத்தால் இறுவ தல்லது வெள்ளைச் சுரிதகத்தால் இறப் பெறாது. (யாப். கா. 47)

வஞ்சிப்பா ஆவது வஞ்சியுரிச் சீரானும் ஏனைச் சீரானும் இருசீரடியானும் முச்சீரடியானும் தூங்கலோசையானும் வந்து தனிச்சொல் பெற்று, ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இப்பா இரு சீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா, என இரு வகைப்படும். ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற இரு சீரடி வஞ்சிப்பா தனிச்சொற் பெறுதல் (உண்டு).
(இளம். தொல். செய். 113)

| | |
|---|---|
| வஞ்சி மண்டிலத் தாழிசை | ஒரு பொருள் மேல் ஒன்றாய் அடிமறியாய் வருவன. (யாப். 91) |
| வஞ்சி மண்டிலத்துறை | ஒரு பொருள்மேல் ஒன்றாய் அடிமறியாய் வருவன. (யாப், 91) |
| வஞ்சி மண்டில விருத்தம் | முச்சீர் அடி நான்காய் அடிமறியாய் வருவன. (யாப். 92) |
| வஞ்சியுரிச் சீரடி | நிரையீற்று வஞ்சியுரிச்சீர் முதலசையோ டொன்றுவனவும் ஒன்றாதனவும் என இரு வகைப்படும். அவற்றுள் ஒன்றி வருவது நிரைபு நிரையு முதலாகிய சீரொடு உறழ ஐந்து வகைப்படும். ஒன்றாதது நேர்பு நேரு முதலாகிய சீரொடு உறழ ஐவகைப் படும். |
| | உரியசையீற்று வஞ்சியடியும் அவ்வாறே உறழ பத்து வகைப்படும். (இளம். தொல். செய். 48) |
| வஞ்சி விருத்தம் | முச்சீரடி நான்காகி வரும். (இளம். தொல். செய். 125) |
| வட்கர் | குற்றமெனினும் அமையும். (பழை. புறம். 100) |
| வட்டுடை | முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடை விசேடம். (நச். சீவ. 468) |
| வடகம் | அத்தவாளம்; உடை விசேடம். (நச். சீவ. 462) |
| வடசொல் | வடசொல் என்பது ஆரியச் சொற் போலுஞ் சொல். (இளம். தொல். சொல். 391) |
| வடசொல் மரபு | திரிந்த வகையாகிய சொல் மரபு. (இளம். தொல். செய். 76) |
| வடுச்செய்தல் | இளமைச் செவ்வி மிக்கவழி மகளிர்க்கு வடுப்படுத்தி நுகர்தல் இன்பம் செய்யும். (நச். சீவ. 2700) |
| வண்டு (நா) | பெருவிரலும் அணிவிரலும் வளைந்து நுனியொன்றிச் சிறுவிரல் நிமிர்ந்து சுட்டு |

விரலும் நடுவிரலும் நெகிழ வளைந்து நிற்பது. (அடி. சிலம்பு. 3:18)

**வண்ணகம்** வண்ணித்துப் புகழ்தலான் வண்ணகம் எனப்படும்.
(பேரா. தொல். பொருள். 452)

வண்ணித்து வருதலின் வண்ணகம் எனப் படும். (யாப். 84)

**வண்ணம்** ஒரு பாவின்கண் நிகழும் ஓசை விகற்பம். (பேரா. தொல். பொருள். 313)

சந்த வேறுபாடு.
(பேரா. தொல். பொருள். 525)

குணம். (நச். குறிஞ். 31)

ஒருபாவின்கண் நிகழும் ஓசை விகற்பம். (நச். தொல். செய். 1)

சந்தம். (நச். தொல். செய். 234)

**வண்ணம் (உறுப்பு)** குறிலும் நெடிலும் அளபெடை யிரண்டும் இனம் மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம்.
(பேரா. தொல். பொருள். 314)

**வணிகர்** இப்பர், கவிப்பர், பெருங்குடியரென்று மூன்று பாலார். (நச். சீவ. 1756)

**வம்பு** காலமல்லாத காலத்து மழை.
(பேரா. திரு. 14:12)

**வயிரம் (ஒளி)** நால்வகை வருணத் தொளியாவன :
அந்தணன் வெள்ளை அரசன் சிவப்பு
வந்தவைசியன் பச்சை சூத்திரன்
அந்தமில் கருமையென் றறைந்தனர்
புலவர்.
(அடி. சிலம்பு. 14:180)

**வயிரம் (குணம்)** எட்டுப் பலகையும் ஆறு கோடியும் தாரை யும் சுத்தியும், தராசமும் என இவை.
(அடி. சிலம்பு. 14:180)

**வயிரம் (பயன்)** வருணம் நான்கின் பயனாவன : மறை யோரணியின் மறையோராகிப் பிறவி

ஏழும் பிறந்து வாழ்வரே. மன்னவரணி யின் மன்னவர் சூழ இந்நிலவேந்தராவர் எழுபிறப்பும்.

வணிகரணியின் மணிபொன் மலிந்து தணிவறவடைந்து தரணியில் வாழ்வர்.

சூத்திரர் அணியில் தோகையர் கனக நெல் வாய்ப்ப மன்னி மகிழ்ந்து வாழ்கு வரே. (அடி. சிலம்பு. 14:180)

**வயிரம் (குற்றம்)** குற்றம் பன்னிரண்டாவன :
சரைமலம் கீற்று சப்படி பிளத்தல்
துளைகரி விந்து காகபாதம் இருத்து
கோடி யில்லன கோடி முரிந்தன
தாரை மழுங்கலென விவை.

காகபாதம் நாகங்கொல்லும், மலம் பிரி யாதது நிலந்தரு கிளைகெடும், விந்து சிந்தையிற் சந்தாபந்தரும், கீற்று வரலினை ஏற்றவர் மாய்வர்.
(அடி. சிலம்பு. 14:180)

**வயிரமாடகம் (இ)** நால் விரலளவான பாலிகை வடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யும் கருவி. (நச். சீவ. 722)

**வரம்** வேண்டுவகோடல். (நச். சீவ. 661)

**வரி (இ)** வரியாவது முகமுடைவரி, முகமில்வரி, படைப்பு வரியென மூன்று வகைப்படும். வரிப்பாட்டுக்கு முகமாக நிற்றலின் முக மெனப்படும். முகமில்வரியாவது முக மொழிந்து ஏனைய உறுப்புக்களான் வருவது. படைப்பு வரியாவது எல்லா வுறுப்பும் ஒன்றானும் பலவானும் வெள்ளையானும் ஆசிரியமானும் கொச் சகம் பெற்றும் பெறாதும் வேறு வேறாகி... வருவது. (அரும். சிலம்பு. 7:19)

**வரி (நா)** வரி எட்டு வகைப்படும் : கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள் வரி என. (அடி. சிலம்பு. 3:13)

அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப் பிற்கேற்ற தொழிற்றன்மையும் தோன்ற நடித்தல். அவ்வரி எட்டு வகைப்படும். கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர் வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரி என.
(அடி. சிலம்பு. 8:77; 14:150)

**வரிப்பாடல்** வரிப்பாடலாவது பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட எட்டனியல்பும் ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும் இறுதியும் கெட்டு இயல்பும் முடமுமாக முடிந்து கருதப்பட்ட சந்தியும் சார்த்தும் பெற்றும் பெறாதும் வரும். அதுதான் தெய்வஞ்சுட்டியும் மக்களைப் பழிச்சியும் வரும். (அரும். சிலம்பு. 7:19)

**வருத்தம்** தன்மாட்டும் பிறர்மாட்டும் உளதாகிய வருத்தம்.
(இளம். தொல். பொருள். 250)

**வருத்தமானம் (நா)** முகுளக் கையிற் கபோதக் கையை எதிரிட்டுச் சேர்ப்பது.
(அடி. சிலம்பு. 3:18) [பார்க்க : முகுளம், கபோதம்]

**வரைதல்** காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். (பேரா. தொல். பொருள். 260)

**வரையமிர்து** தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம் கப்பூரஞ் சாதியோ டைந்து.
(நச். சீவ. 2110)

**வரைவின் மகளிர்** முயக்கத்தில் வரைவின்மையால் வரைவின் மகளிர் என்று கூறப்பட்டது.
(மணக். திருக். அதி. முன்.)

தம் நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிர்.
(பரிமே. திருக். அதி. 92)

**வரைவு** வரைவு என்பது செய்யத்தகுவனவும் தவிரத்தகுவனவும் வரைந்து ஒழுகும் ஒழுக்கம். (இளம். தொல். பொருள். 256)

**வல்லினநடை** — வல்லெழுத்து மிகத் தொடுப்பது.
(யாப். 53)

**வல்லெழுத்து** — வல்லென்று இசைத்தலானும், வல் என்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்து எனப்பட்டது.
(இளம். தொல். எழுத்து. 19)

வல்லென்றிசைத்தலானும் வல்லென்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்தாயிற்று. (நச். தொல். எழுத்து. 19)

**வலம்புரி (நா)** — சிறு விரலும் பெருவிரலும் நிமிர்ந்து சுட்டு விரலின் அகம் வளைந்து ஒழிந்த விரண்டும் நிமிர்ந்து இறைஞ்சி நிற்பது.
(அடி. சிலம்பு. 3:18)

**வழக்காறு** — வழக்காறு இருவகைப்படும். இலக்கண வழக்கும் இலக்கணத்தொடு பொருந்தின மரூஉ வழக்கும் என. இல்முன் என்பதனை முன்றில் என்று தலைதடுமாறச் சொல்லுதல் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு.

இனிச் சோழணாடு என்பதனைச் சோணாடு என்பது மரூஉ வழக்கு.
(இளம். தொல். சொல். 17)

இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கும், மரூஉ வழக்குமென இருவகைப் படும். (கல். தொல். சொல். 17)

வழக்காறென்பது வழங்கற்பாடே மேற்கொண்டு ஒரு காரணமும் நோக்காது வாய்பாடு பகுத்துப் பயிலச் சொல்லி வருவது.

வழக்காறு வழங்குதல் பற்றி வருவது.
(கல். தொல். சொல். 17)

**வழக்கு** — வழக்கு என்பது காரணமின்றி வழங்கற்பாடே பற்றி வருவது.
(சேனா. தொல். சொல். 17)

ஒரு பொருளைத் தனித்தனியே எனது எனது என்று இருப்பார் அது காரண

மாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேல் செல்வது. அது கடன்கோடல் முதல் பதினெட்டு பதத்தது ஆம். (பரிமே. திருக். உரைப்பாயிரம்.)

ஒப்புமையின்றி உலகத்தார் பயில வழங்கப் படுவது. (தெய். தொல். சொல். 17)

வழக்கு ஆவது உலக வழக்கும் செய்யுள் வழக்கும் என இருவகைப்படும். அவற்றை வடநூலார் லௌகிகப் பிரகரியை, வைதிகப் பிரகரியை என்பர். (சுப்பி. பிரயோ. 18)

**வழி எதுகை** அனுப்பிராசம் என்னும் வடமொழியை அனு என்பது வழி எதுகை என்பதும் தமிழ் வழக்கு. (யாப். 53; யாப். கா. 56)

**வழி நூல்** (முதல் நூலோடு) ஒத்த மரபிற்றாய் ஆசிரியமத விகற்பம் படக்கிளப்பது. (இறை. 1)

முதல் நூலோடு ஒத்த முடிவிற்றாய்த் தனது ஓர் விகற்பம்படக் கிடப்பது. (யாப். பாயி)

**வழி மொழிதல்** தன் தன்மையென வேறின்றித் தன்கைப் படுத்தல். (பேரா. தொல். பொருள். 307)

**வழு** வழு என்பது குற்றம். அது நான்கு வகைப் படும். எழுத்து வழுவும், சொல் வழுவும், பொருள் வழுவும், யாப்பு வழுவும் என. (யாப். 95)

செய்ததன்கண் முடிய நில்லாது தப்பி ஒழுகுதல். (இளம். தொல். பொருள். 143)

எழுவகை வழுவாவன: திணை வழு, பால் வழு, இட வழு, கால வழு, செப்பு வழு, வினா வழு, மரபு வழு என்பன. (இளம். தொல். சொல். 1)

வழு எழுவகைப்படும். (சேனா. தொல். சொல். 11)

சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகுதல். (நச். தொல். பொருள். 145)

**வழுக்காத்தல்** வழுவற்க என்றலும் வழுவமைத்தலும் என வழுக்காத்தல் இருவகைப்படும். (சேனா. தொல். சொல். 11)

வழுவற்க என்றலும் வழு அமைத்தலும் என வழுக்காத்தல் இருவகைப்படும். குறித்த பொருளை அதற்குரிய சொல் லால் சொல்லுக என்றல் வழுவற்க என்றலாம். குறித்த பொருட்கு உரிய சொல் அன்று ஆயினும் ஓராற்றான் அப் பொருளை விளக்குதலின் அமைக என்றல் வழு அமைத்தலாம். (சுப்பி. பிரயோ. 44)

**வழுவமைத்தல்** குறித்த பொருட்குரிய சொல்லன்றா யினும் ஒருவாற்றான் அப் பொருள் விளக்குதலின் அமைக என்றல். (சேனா. தொல். சொல். 11)

**வழுவற்க என்றல்** குறித்த பொருளை அதற்குரிய சொல் லாற் சொல்லுக என்றல். (சேனா. தொல். சொல். 11)

**வள்ளி** முருகவேளைக் குறித்தது. (வீர. 104)

தண்கதிர் மண்டிலம். (நச். தொல். பொருள். 88)

**வள்ளை** உரற்பாட்டு. (நச். தொல். பொருள். 63)

**வளிநிலை (சமயம்)** உந்தியொடு புணர்ந்த இருவகை வளியும் தந்த மியக்கம் தடுப்பது வளிநிலை. (அடி. சிலம்பு. 14:11)

**வளையணிதல்** பிள்ளையைப் பெற்றால் வளையிடார் (மகளிர்). (நச். மலை. 253)

**வறுமை** போகம் துய்க்கப் பெறாத பற்றுள்ளம். (பேரா. தொல். பொருள். 253)

நல்குரவு. (இளம். தொல். பொருள். 249)

**வன்சொல்** கண்ணோட்டமின்றிச் சொல்லும் சொல். (பேரா. தொல். பொருள். 273)

வன்சொல் விலக்கு — வன்சொல் சொல்லி விலக்குவது
(பழை. தண்டி. பொரு. 12)

வன்புலம் — வன்புலம் குறிஞ்சியும் முல்லையும்.
(பழை. புறம். 42)

வன்புறை — வன்புறையென்பது வற்புறுத்துவது.
(இறை. 2)

வனப்பு — பெரும்பான்மையும் பல உறுப்புந் திரண்ட வழிப் பெறுவதோர் அழகு.
(அடி. சிலம்பு. உரைப்பாயிரம்.
பேரா. தொல். பொருள். 547)

### வா

வாக்கி — அறம் பொருள் இன்பம் வீடுகள் மேற் கேட்க வேட்கை பிணிக்கச் சொல்லும் ஆற்றல் உடைய ஆசிரியன். (யாப். 96)

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கையும், விரித்துச் சொல்லும் ஆசிரியன். (வீர. 179)

வாக்கியம் — வாக்கியமாவது பலபதங் கூடியிருப்பது.
(வீர. 155)

வாச்சியம் — வெளிப்படை. (சிவ. நன். 269)

வாதம் — சலவாதமும் விதண்டாவாதமும் முதலாகப் பல. (யாப். 96)

வாதி — மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் நாட்டி அளவை செய்து தன்கோள்நிறீஇ பிறன்கோள் மறுப்பான். (யாப். 96)

காரணமும் மேற்கோளும் எடுத்துக் காட்டிப் பிறன்கோள் மறுத்துத் தன்மத நிறுத்திப் பாடுவோன். (வீர. 179)

வாய்ச்சுவை — வாயால் நுகரப்படும் சுவை. அவை கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என ஆறும் ஆம்.
(பரிமே. திருக். 420)

வாய்மை — பொய் சொல்லாமை.
(மணக். திருக். அதி. முன்.)

மெய்யினது தன்மை.
(பரிமே. திருக். அதி. 30)

**வாயில்** — பெரிய வாசல். (நச். பட். 144)

**வாயில்களாவார்** — பார்ப்பார் பாங்கன் தோழி செவிலி பாணன் விறலி, இளையர், விருந்தினர், கூத்தர், அறிவோர் கண்டோர்.
(இளம். தொல். பொருள். 145)

**வாயுறை வாழ்த்து** — வாயுறையென்றது வாய்மை மொழி யாகிய மருந்தெனப் பண்புத்தொகை. மருந்து போறலின் மருந்தென்றார். ஒருவன் சிறப்புக்கூறி வழுத்தி அவற்குப் பயன்படக்கூறலின் வாயுறை வாழ்த் தென்றார். (நச். தொல். செய். 111)

**வாரம் (நா)** — வார மென்பது வகுக்குங் காலை நடை யினும் ஒலியினும் எழுத்தினும் நோக்கித் தொடையமைந் தொழுகும் தொன்மைத் தென்ப. (அரும். சிலம்பு. 7 : 19)

கூறிய பகுதியைப் பின்னும் பற்றிக் கூறு தலின் வாரம்.
(பேரா. தொல். பொருள். 444)

**வாரம்** — வாரமிரண்டாவன : ஒரொற்றுவாரம், ஈரொற்றுவாரம் என்னும் செய்யுள். அவை தாளத்து ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் பெற்று வரும்.
(அரும். சிலம்பு. 3 : 136)

**வாவனாற்றி** — ஓர் எழுத்துக் கொடுத்தால் அது முதலாக ஈற்றடி பாடி பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால் எருத்தடி பாடி மற்றோர் எழுத்துக் கொடுத்தால் இரண்டாமடி பாடி பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால் முதலடி பாடிப் பொருள் முடிய எதுகை வழுவாமற் பாடுவது. (யாப். 96)

**வாவன் ஞாற்று** — முந்துறக் கொடுத்த எழுத்துக்கு ஈறுபாடிப் பின்னைக் கொடுத்த எழுத்துக்கு ஈற்ற யலடி பாடி அதன்பின்பு கொடுத்த எழுத்துக்கு இரண்டாமடி பாடி அதன் பின்பு கொடுத்த எழுத்திற்பாடி முடிப்பது.
(வீர. 179)

**வாவி** யாற்றிலோடை. (நச். சீவ. 337)

**வாழ்க்கைத் துணை நலம்** வாழ்க்கைக்குத் துணையாகிய மனை யாளது பெண்மை இலக்கணம்.
(மணக். திருக். அதி. முன்.)

**வாழ்த்தப்படும் பொருள்** கடவுளும், முனிவரும், பசுவும், பார்ப் பாரும், அரசரும், மழையும், நாடு மென்பன.
(பேரா. தொல். பொருள். 421)

**வாழ்த்தியல்** வாழ்த்துங்கால் தனக்குப் பயன்படுதலும், படர்க்கைப் பொருட்குப் பயன்படுதலு மென இருவகையான் வரும் வாழ்த்தும் என்பதூஉம், முன்னிலையாகவும் படர்க்கையாகவும் வரும் வாழ்த்தும் என்பதூஉங் கொள்க.
(நச். தொல். செய். 109)

**வாழ்த்து** வாழ்த்து இருவகைப்படும். மெய் வாழ்த்தும் இருபுற வாழ்த்தும் என.
(யாப். கா. 57)

**வாழ்த்து விலக்கு** வாழ்த்தி வைத்து விலக்குவது.
(பழை. தண்டி. பொரு. 12)

## வி

**விகற்பக் குறள் வெண்பா** செந்தொடையானும் ஒழிந்த விகற்பத் தானும் வருவது. (யாப். 59)

**விகற்பம்** ஒருகால் இயல்பாயும் ஒருகால் விகார மாயும் புணர்வது. விகற்பம், உறழ்ச்சி என்பன ஒருபொருட் சொற்கள்.
(ஆறு. நன். 161)

**விகாரம்** விகாரம் ஆறு வகைப்படும் : வலித்தலும், மெலித்தலும், விரித்தலும், தொடுத்தலும், நீட்டலும், குறுக்கலும் என. (யாப். 58)

விகாரம், செயல், செயற்கை, விதி என்பன ஒருபொருட் சொற்கள். (ஆறு. நன். 151)

**விகாரவுவமை** உவமையாகிய தன்மைப் பொருள்களை விகாரம் பண்ணியதாக உவமிப்பது.
(காரி. மாற. 101)

**விகுதி** — தன்னியல்பில் நிற்கும் பகுதிப் பொருளை இடைநிலை முதலியவற்றோடு விகுதி முன்னின்று தன்னிடத்து அவாவ விகாரப் படுத்தவின் விகுதியாம். (சிவ. நன். 133)

**விசித்திரப்பா** — எங்கும் ஏழறையாகக் கீறி மேலே ஒழுங்கினுள் மொழிக்கு முதலாயின எழுத்து ஒருபொருள் பயக்க நிறுவி அவ்வெழுத்துக் களை ஒழுங்கும் கண்ணறையும் படாமே நிறுவி ஒரெழுத்துக்கு ஓரடியாகவேனும் ஒருசீராகவேனும் முற்றுப் பெறப்பாடுவது. (யாப். 96)

எங்கும் ஏழறையாகக் கீறி மேலொழுகு நுண் மொழி முதலாகிய எழுத்து ஒரு பொருள் பயக்க நிறுவி அவ்வெழுத்துக் களே எங்கும் ஒழுகும் கண்ணறையும் பாடமு நிறுவி ஒரெழுத்துக்கு ஓரடி வரப் பாடுவது. (வீர. 179)

**விசேடம்** — சூத்திரத்துள்பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல். (சிவ. நன். 21)

**விசேடித்தல்** — பல பொருட்குப் பொதுவாகிய சொல் லன்றே ஒரு பொருட்குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது. (சேனா. தொல். சொல். 18)

இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலுமென விசேடித்தல் இருவகைத்து. (சேனா. தொல். சொல். 182)

**விட்டிசைத்தல்** — விட்டிசைப்பதுதான் குறிப்பு, ஏவல், தற் சுட்டு, வினா, சுட்டு என்னும் ஐந்தன் கண்ணும் என்பதூஉம் குற்றெழுத்து விட்டிசைத்து நின்றவிடத்து மற்றோ ரெழுத்தினோடுங் கூடி நிரையசையாகா தென்பதூஉம் பெறப்படும். (யாப். கா. 52)

ஏவல், குறிப்பு, தற்சுட்டு, வினா, சுட்டு என ஐந்து பொருளின்கண் விட்டிசைத்து நேரசையாம். (நச். தொல். செய், 7)

விட்டிசைத் தொடை — விட்டிசைத்தொடை கூறுங்கால் எழுத்தி னானும் எடுத்தல் ஓசையானும் விட்டி சைத்தல் இருவகைப்படும். (பேரா. தொல். பொருள். 411)

விட்டிசை மோனை — முதலெழுத்து இரண்டும் அளவொத்து விட்டிசைப்பது. (யாப். 37)

விடியற்காலம் — தன் செல்வம் இடையறாது ஒழுகுதற்கு வேண்டுங் காரியங்களை விடியற்காலத்தே மனத்தனாராய்தல் வேண்டும். (நச். மது. 752)

வித்தாரகவி — மும்மணிக்கோவையும், பன்மணி மாலையும், மறமும் கலிவெண்பாவும், மடலூர்ச்சியும் முதலாகிய நெடும்பாட்டுக் கோவையும், பாசண்டமும் கூத்தும் விருத்தமும் கதை முதலாகிய செய்யுளும் இயல் இசை நாடகங்களோடும் கலை நூல்களோடும் பொருந்தப்பாடும் பெருங்கவி எனக் கொள்க. (யாப். 96) (பார்க்க: கவி)

விதப்பு — விதப்பாவன சிறப்பு விதி. (சிவ. நன். 165)

விதலை யாப்பு — தலையும் இடையும் கடையும் பொருள் கொள்ளது. (இறை. 56)

விதவை — குழம்பு. (நச். சீவ. 2774)

விதானம் — இரண்டு குருவும் இரண்டு இலகுவுமாய் முறையே வருவதும் இரண்டு இலகுவும் இரண்டு குருவுமாய் முறையானே வருவது மாகும். (யாப். 95)

இரண்டிலகுவும் இரண்டு குருவுமாய் முற்றவரின் விதானமாம். (வீர. 137)

விதி — செயப்படும் வினையினது நியதி. (பேரா. திரு. 1:7)

விதிச்சூத்திரம் — இன்னது ஒன்றிற்கு இதுவாம் என்று முன்னில்லதனை மொழிவதாகும். (யாப். பாயி.)

விதிமணம் — கொடுத்த பரியத்தின் இருமடங்கு மகட் கொடுப்போன் கொடுத்தல். (யாப். 96)

| | |
|---|---|
| **விதியீறு** | முன்னைய உயிரீறும் மெய்யீறும் ஒழிய உயிரீறாய் நிற்பனவும் யாதானும் ஒருயிர் பின்னர் இறுதிக்கண் தோன்றி நிற்பனவுமாம். (சிவ. நன். 165) |
| | இயல்பாக நின்ற உயிரேனும் ஒற்றேனும் போய் மற்றொரு உயிராகவேனும் ஒற்றாகவேனும் நிற்பது. (ஆறு. நன். 158) |
| **விநோதக்கூத்து (நா)** | விநோதக்கூத்து குரவை, களிநடம், குடக் கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பர். (அடி. சிலம்பு. 3:12) |
| **விபரீதவுணர்வு** | மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மை யவும் சொல்லும் மயக்க நூல் வழக்கு களை மெய்ந்நூல் வழக்கு எனத் துணிதல். |
| | மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன ஒருபொருட்கிளவி. (பரிமே. திருக். 351) |
| **விபரீதவுவமை** | மேல்தொட்டு உவமையால் வருவதனைப் பொருளாக்கிப் பொருளாய் வருவதனை உவமையாக்கி உரைப்பது. (பழை. தண்டி. பொரு. 5) |
| | முன்பு உவமையாக வந்ததனைப் பொரு ளாக்கிப் பொருளை யுவமையாக்குதல். (காரி. மாற. 101) |
| **வியங்கியம்** | வியங்கியம் என்பது குறிப்பு. (சிவ. நன் 269) |
| **வியங்கோள்** | ஏவற்பொருட்டாய் வருவது. (சேனா. தொல். சொல். 22) |
| **வியநிலை வுருவகம்** | ஒன்றன் அங்கம் பலவற்றினுள் சிலவற்றை உருவகஞ் செய்தும் சிலவற்றை உருவகஞ் செய்யாதும் உரைத்து அங்கியை உரு வகஞ் செய்து உரைப்பது. (பழை. தண்டி. பொரு. 10) |
| | ஒன்றின் அங்கம் பலவற்றையும் ஒரு செய்யுளகத்துக் கூறி அவற்றுட் சில |

| | |
|---|---|
| | உருவகஞ் செய்து சிலவற்றை உருவகஞ் செய்யாது அவயவியை உருவகஞ் செய்வது. (காரி. மாற. 120) |
| **வியப்பு** | மேம்பாடு. (நச். குறிஞ். 15) |
| **வியர்த்தல்** | வியர்த்தல் என்பது தன் மனத்தின் வெருட்சி தோன்றியவழிப் பிறப்பதோர் புழுக்கம். (இளம். தொல். பொருள். 256) |
| | பொறாமை முதலியன பற்றி மனம் புழுங்குதல். (பேரா. தொல். பொருள். 260) |
| **வியான வாயு** | வியான வாயு போக்குவரவு செய்து இயங்கப் பண்ணும். (அடி. சிலம்பு. 3: 26) |
| **வியூகம்** | படைவகுப்பு. அஃது எழுவகை உறுப்பிற்றாய் வகையான் நான்காய் விரியான் முப்பதாம். (பரிமே. திருக். 767) |
| **வியூகம் (வகை)** | வகை நான்காவன: தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் எனவிவை. (பரிமே. திருக். 767) |
| **வியூகம் (விரி)** | விரி முப்பதாவன: தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்தும் என இவை. (பரிமே. திருக். 767) |
| **வியோகம் (நா)** | வியோகமாவது தலைமக்கள் ஒருவரைத் தான் பலரைத்தான் உடைத்தாய்ச் சந்தியைந்து முடைத்தாய்த் தலைமைக் கண்டம் ஒரு கண்டம் பெறும். (வீர. 104) |
| **விரல் அளவை** | பிரத்தார விருத்தங்களை இரட்டித்து ஒன்று களைய விரல் அளவையாம். (யாப். 95) |
| **விரலளவு** | அணு எட்டுக் கொண்டது தேர்த்துகள்; தேர்த்துகள் எட்டுக் கொண்டது இம்மி; இம்மி எட்டுக் கொண்டது எள்ளு; எள்ளு எட்டுக் கொண்டது நெல்லு; நெல்லு எட்டுக் கொண்டது பெருவிரலெனக் கொள்க. (அடி. சிலம்பு. 3:100) |

**விரவியல் வஞ்சிப்பா** வேற்றடி விரவி வந்த வஞ்சிப் பாக்கள் விரவியல் வஞ்சிப்பா எனப்படும். (யாப். 10)

**விராட்டு** அளவழிச் சந்தங்களிற் சீர் ஒத்து ஓர் அடியுள் இரண்டெழுத்துக் குறைந்து வருவது. (யாப். 95)

**விரியுவமை** பண்பு முதலியன விரிந்து நிற்பது. (பழை. தண்டி. பொரு. 5)

**விருத்தம்** ஒருபுடையால் தத்தம் பாவினோடு ஒத்த ஒழுக்கத்தானும், எல்லா அடியும் ஒத்து நடத்தலானும், புராணம் முதலாகிய விருத்தம் உரைத்தலானும் விருத்தம் என்பதூஉம் காரணக்குறி.

இது வடமொழித் திரிசொல் எனக் கொள்க. (யாப். 56)

**விருத்தவுருவகம்** ஒரு பொருட்குக் கூடாதன பலவுங் கூட்டி யுருவகஞ் செய்வது. (காரி. மாற. 120)

**விருத்தி** விருத்தி நான்கு வகைப்படும். அவை சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி யெனவிவை. (அடி. சிலம்பு. 3:13)

**விருந்து** புதியவாயினவற்றின் மேற்று. அவை இப்பொழுது உள்ளாரைப் பாடும் பாட்டு. (யாப். 95)

விருந்து என்பது புதியவற்றின் மேற்று. அஃது இப்பொழுதுள்ளாரைப் பாடுவது. (யாப். கா. 58)

**விருபக வுருவகம்** ஒரு பொருட்குக் கூடாத தன்மை பலவுங் கூட்டி உருவகஞ் செய்வது. (பழை. தண்டி. பொரு. 10)

**விரை** விரையாவன :

கொட்டந் துருக்கந் தகர மகிலாரம்
ஒட்டிய ஐந்தும் விரை
(அரும். சிலம்பு. 5:14. அடி. சிலம்பு. 5:14)

நேர்கட்டி செந்தேன் இரியாசம் பச்சிலை
ஆரம் அகிலுற்போ டாறு.
(அடி. சிலம்பு. 5:14)

சந்தனம் அகிலொடு கருப்பூரங் கத்தூரி
குங்குமம் என்றிவை ஐந்தும் விரையே.
(நச். சீவ. 623)

**விரைவு** இயற்கை வகையான் அன்றி ஒருபொருட் கண் விரைவு தொழில்பட உள்ள நிகழுங் கருத்து. (பேரா. தொல். பொருள். 260)

ஒரு பொருளைச் செய்ய நினைத்தான் அது தாழ்க்கில் அப்பயன் எய்தான்; கடிதின் முடித்தல் வேண்டுமெனக் குறித்த மனநிகழ்ச்சி.
(இளம். தொல். பொருள். 256)

**விரோதச் சிலேடை** சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதிப் பச் சிலேடிப்பது விரோதச் சிலேடை.
(வீர. 170)

முன்னர் சிலேடித்தவற்றைப் பின்னர் விரோதிப்பச் சிலேடிப்பது.
(பழை. தண்டி. பொரு. 51)

**விலக்கியற் சூத்திரம்** பொதுவகையான் விதிக்கப்பட்டதனை அவ்வகை ஆகாது என்பது. (யாப். பாயி.)

**விலக்குறுப்பு** பொருள், யோனி, விருத்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவிநயம், சொல், சொல்லின் கூறுபாடு, வண்ணம், வரி, சேதமென இவை பதினாலுமாம். (அரும். சிலம்பு. 3:13. அடி. சிலம்பு. 3:13)

தலைவன் செலுத்துகின்ற கதையை விலக்கியும் அக்கதையை நடாத்தியும் முன்பு செய்த கதைக்கே உறுப்பாகுவது. (அடி. சிலம்பு. 3:13)

**விலங்கு நடைச்செல்வு** இழிகுலத்தோனாதலின் உயர்ந்தோர் வந்த விடமெங்கும் விலங்கி நடத்தல்.
(அரும். சிலம்பு. 16;107)

மேன்மக்களைக் கண்டு ஒதுங்கி நடத்தல்.
(அடி. சிலம்பு. 16:107)

**விளித்தல்** தன்னை நோக்குவித்துக் கொள்ளும் பொருட்டாகும். (வீர. 36)

**விளி வேற்றுமை** ஈறு திரிந்து உருபேற்றல் விளி வேற்றுமை யது இலக்கணம்.
(இளம். தொல். சொல். 66)

விளி வேற்றுமையாவது திரிந்தும் இயல் பாயும் நிற்கும் பெயரிறுதி.
(சேனா. தொல். சொல். 63)

**விளையாட்டு (இ)** பாடநினைத்த வண்ணத்தில் சந்தத்தை விடுதல். (நச். சீவ. 657)

**விளைவு (நா)** விளைவாவது கருப்பம் முதலாய் விரிந்து கதிர் திரண்டிட்டுக் காய்தாழ்ந்து முற்றி வளைந்து முடிவது போல்வது.
(அடி. சிலம்பு. 3:13)

**விற்பூட்டு** தலையும் கடையும் பொருள் கொள்வது.
(இறை. 56)

**விறல்** விறலெனினும் சத்துவமெனினும் ஒக்கும்.
(பேரா. தொல். பொருள். 249)

**விறலி** விறல்பட ஆடுபவள்.
(பேரா. தொல். பொருள். 502)

**வினா** வினா ஐந்து வகைப்படும். அறியான் வினாதல், அறிவொப்புக் காண்டல், ஐய மறுத்தல், அவனறிவு தான் கோடல், மெய்யவற்குக் காட்டல் என.
(இளம். தொல். சொல். 13; நேமி. 35)

வினாவாவது அறியுறவு வெளிப்படுப்பது. அது மூவகைப்படும். அறியான் வினாவும், ஐயவினாவும், அறிபொருள் வினாவுமென.
(சேனா. தொல். சொல். 13)

**வினா வழு** வினாவப்படாத பொருளைப் பற்றி வரும்.
(சேனா. தொல். சொல். 11)

**வினாவுத்தரம்** வினாவினதொரு சொற்றொடரைப் பிரித்து அப்பதந்தொறும் வினாயதற்கு உத்தரமாகப் பதப்பொருளுரைத்துக் கடைக்கால் அவ்வினாயதற்கு உத்தர மான அச்சொற்றொடர் முழுவதும் ஒரு பொருளாக்கி யுரைப்பது.
(பழை. தண்டி. சொல். 7)

வினாவினுக்குச் சொன்ன உத்தரமெல்லாம் ஒன்றாகத் தொகுப்ப ஒரு பொருள் பயப்பது. (வீர. 179)

**வினை** தெரிநிலை வினையும் குறிப்பு வினையுமென வினை இருவகைத்து.
(நச். தொல். எழுத்து. 108)

**வினைக்குறிப்பு** குறிப்பால் காலம் விளக்குவன வினைக் குறிப்பு. (சேனா. தொல். சொல். 213)

வினைக்குறிப்புச் சொல்லெல்லாம் தெரிநிலை வினைபோல முதல்நிலையில் பொருள் சிறந்து நிற்கும். (சிவ. நன். 132)

**வினைக்குறிப்புப் பெயர்** வினைக்குறிப்புப் பெயர்ச்சொல். அவ்வாறன்றி (முதல் நிலையில் அன்றி) விகுதியில் பொருள் சிறந்து நிற்கும்.
(சிவ. நன். 132)

**வினைச்சொல்** பொருட்புடை பெயர்ச்சியாகிய தொழிற் பண்பின் காரியத்தை உணர்த்துஞ் சொல் வினைச்சொல். (சிவ. தொல். சூ. ப. 51)

**வினைத்தொகை** வினைத்தொகை காலங் கரந்த பெயரெச்சம். (சிவ. நன். 356)

**வினைமுதல்** கருவிமுதலாயின கரணங்களைத் தொழிற் படுத்துவது. (சேனா. தொல். சொல். 73)

கருத்தா நின்று தன்னை யொழிந்த கருவி முதலிய கரணங்களேழனையும் காரியத் தின்கண் நிகழ்த்துதலின் அதனை வினை முதலென்றார்.

இயற்றும் வினை முதலும் ஏவும் வினை முதலும் என இருவகைப்படும்.
(நச். தொல். சொல். 74)

தனித்தனியே இயற்றும் வினைமுதலும், ஏவும் வினைமுதலும் என இருவகைப் படும். அவற்றுள் இயற்றும் வினை முதலாவது கருவியைத் தொழிற் படுத்து வது. ஏவும் வினை முதலாவது அவ் வியற்றும் வினை முதலினது தொழிலை

உண்டாக்குந் தொழிலுடையது. (ஆறு. நன். 297)

**வினைமுதற் பொருள்** ஒரு தொழிலின் நிகழ்ச்சியிலே தன்வயத்த தாகக் குறிக்கப்படும் பொருளாம். வினை முதல், செய்பவன், கருத்தா என்பன ஒரு பொருட் சொற்கள். (ஆறு. நன். 295)

**வினைமுற்று** பிறிதோர் சொல்லோடியையாது தாமே தொடராதற் கேற்கும் வினைச்சொல் முற்றாம். (சேனா. தொல். சொல். 235)

**வினையடி** வினையடி நான்காவன: இயல்பாகிய வினையடி ஒன்றும், ஏனைப்பெயர் இடை உரியடியாகப் பிறந்த வினையடி மூன்றும் ஆம். (சிவ. நன். 167)

**வினையெச்சம்** வினையை ஒழிந்து வருவது. (வீர. 94)

ஒரு வினைச்சொல் எஞ்சி நிற்பது. (தெய். தொல் சொல். 422)

வினையெஞ்ச நிற்றலான் வினையெச்ச மென்றார். (மயிலை. நன். 341)

**வினையெஞ்சு கிளவி** வினையை ஒழிபாகவுடைய வினை. (சேனா. தொல். சொல். 222)

## வீ

**வீடு** வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின் துறவறம் ஆகிய காரண வகையான் கூறப்படுவதல்லது இலக்கணவகையான் கூறப்படாது. (பரிமே. திருக். உரைப்பாயிரம்.)

**வீடு பெறல்** அவலக் கவலைக் கையாற்றின் நீங்கிப் புண்ணிய பாவ மென்னும் இரண் டினையுஞ் சாராமற் சாதலும் பிறத்தலு மில்லாததொரு தன்மையை யெய்துதல். (மணக். திருக். 4)

**வீணை (இ)** தாளத்தோடே கண்டத்திலும் கருவி யிலும் பிறக்கும் பாட்டு. (நச். சீவ. 411)

**வீரம் (நா)** அங்கம் இரண்டு முதலா ஆறிரண்டும் எய்தப்பெற்றுச் சந்தியைந்தும் உடைத்

தாய் வாரங் கண்டம் பெற்றும் பெறாதும் தலைமகன் ஒருவனாவது. (வீர. 104)

**வீழிணி (நா)** — வீழிணியாவது கூத்தன் தலைமகனாய்த் தன் மடந்தைக்கு விடாக்கண்டவாறும் மன்னகரங் கண்டவாறுஞ் சொல்லுதலாய் அங்கம் ஒன்றாய் ஐவகைச் சந்தியுள்ளும் கடைச்சந்தி அணையுமாறு சொல்லுவது. (வீர. 104)

**வீறு** — வேறொன்றற்கில்லா அழகு. (நச். சீவ. 489)

## வெ

**வெஃகாமை** — பிறர் பொருளை விரும்பாமை. (மணக். திருக். அதி. முன்; இளம். தொல். பொருள். 74)

பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை. (பரிமே. திருக். அதி. 18)

**வெகுளாமை** — சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன் மாட்டு உளதாய இடத்தும் அதனைச் செய்யாமை. (பரிமே. திருக். அதி. 31)

**வெகுளி** — உருத்திரம். (பேரா. தொல். பொருள். 251)

வெகுளி வெறுக்கத் தக்கனவற்றாற் பிறப்பது. (இளம். தொல். பொருள். 247)

**வெகுளி விலக்கு** — வெகுளி தோன்றக் கூறி விலக்குவது. (பழை. தண்டி. பொரு. 12)

**வெண்கலிப்பா** — ஈற்றடி கலியோசை கொண்டு வேற்றுத் தளை தட்டு முச்சீரால் இறுவது.

வெண்கலிப்பா எனினும் கலிவெண்பா எனினும் ஒக்கும்.

வெள்ளோசையல்லாத பிற ஓசைகளால் வருவது. (யாப். 85)

செப்பலோசையிற் சிறிது வழுவி வந்த பஃறொடை வெண்பாக்களை ஒருபுடையொப்புமை நோக்கி வெண்கலிப்பாற் படுத்து வழங்குவர். (யாப். கா. 26)

**வெண்சீரடி** — வெண்சீர் நேர் முதலோடு உறழ்தலும் நிரை முதலோடு உறழ்தலும் என இரு வகைப்படும். அவற்றுள் நேர்பு நேரு முதலாகிய சீர்களொடு உறழ்தல் ஐந்து வகைப்படும். நிரைபு, நிரையு முதலாகிய சீர்களொடு உறழ்தலும் ஐந்து வகைப் படும். (இளம். தொல். செய். 48)

**வெண் செந்துறை** — விழுமிய பொருளும் ஒழுகிய வோசை யுமாய் வருவது வெண் செந்துறை. (யாப். கா. 31)

**வெண்டளை** — வெண்சீர் நிற்ப வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்சீர் வெண்டளையாம். (இளம். தொல். செய். 48)

வெண்சீர் நிற்க வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது வெண்டளையாம். (இளம். தொல். செய். 55)

**வெண்டாழிசை** — மூன்றடியான் வந்து வெண்பாப் போல இறும். (இளம். தொல். செய். 175)

**வெண்டுறை** — மூன்றடிச் சிறுமையாக ஏழடிப் பெருமை யாக வந்து இறுதியடிகளில் சிலசீர் குறைந்து வரும். (இளம். தொல். செய். 175)

**வெண்பா** — பிறதளையோடு மயங்காமையானும் மிக்குங் குறைந்தும் வாராத அடியான் வருதலானும் அந்தணர் நீர்மைத்து. (இளம். தொல். செய். 101)

வெண்பாவாயிற் குறைத்த பொருளை மறைத்துக் கூறாது செப்பிக் கூற வேண்டும். (நச். தொல். செய். 153)

பெரும்பான்மை குறித்த பொருளை மறை யாமற் செப்பிக் கூறலே அதற்கு இலக் கணம் ஆயிற்று. (நச். தொல். செய். 118)

குறித்த பொருளை மறையாது செப்பிக் கூறல் வேண்டும். (நச். கலி. 6)

**வெண்பா யாப்பு** — வெண்சீரானும், இயற்சீரானும் வெண்டளையானும் செப்பலோசை

யானும் அளவடியானும் முச்சீரீற்றடி யானும் வருவது.

**வெண்பாவிற்குக் குட்டம்** வெண்பாவிற்குக் குட்டமாவது ஈற்றயலடி யேயன்றி ஏனையடியும் குறைதல். (நச். தொல். செய். 115)

**வெண்பா வீறு** வெண்பா வீற்றின்கண் வந்த குற்றுகர நேரீற்றியற்சீரைத் தேமா புளிமா என்னும் உதாரணத்தான் ஓசையூட்டிற் செப்பலோசை குன்றும். (இளம். தொல். செய். 4)

**வெண்மை** அறிவு முதிராமை. (பரிமே. திருக். 844)

**வெரூஉதல்** அஞ்ச வேண்டாதன கண்ட வழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி. (பேரா. தொல். பொருள். 260)

**வெள்ளைக் கொச்சகம்** வெண்பாக்களில் ஆசிரியத்தளை வருமேனும் அவை வெள்ளைக் கொச்சகமாமாறு முணர்க. (நச். தொல். செய். 17)

**வெள்ளொத்தாழிசை** சிந்தியல் வெண்பா ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வருவதனை வெள்ளொத் தாழிசையென்ப. (இளம். தொல். செய். 175)

**வெளிவிருத்தம்** நான்கடியானாயினும் மூன்றடியானாயினும் அடிதொறும் தனிச்சொல் பெற்று வரும். (இளம். தொல். செய். 175)

**வெறுப்பு** செறிவு. (இளம். தொல். பொருள். 243: நச். தொல். பொருள். 209)

## வே

**வேட்கை** ஒருவர் ஒருவரை இன்றியமையாமை. (இறை. 2)

யாதானும் ஒன்றைப் பெறல் வேண்டுமென்று செல்லும் மன நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 243)

பெறல் வேண்டுமென்னும் உள்ள நிகழ்ச்சி. (இளம். தொல். பொருள். 97)

காம ஒழுக்கத்தின்கண் குறிப்பினானும் இடத்தினானுமல்லது வேட்கை புலப்பட நிகழாது தலைவியிடத்து. (இளம். தொல். பொருள். 106)

பொருள் கண்மேல் தோன்றும் பற்றுள்ளம். (நச். தொல். பொருள். 247; நச். தொல். எழுத்து. 288)

கருப்பந்தாங்கி வருத்தமுற்று நுகரப்படும் பொருள் பொருண்மேற் செல்லும் வேட்கை. (நச். தொல். சொல். 371)

பெறவேண்டு மென்னும் உள்ள நிகழ்ச்சி. (நம்பி. 36)

**வேட்டல்** வேள்வி செய்தல். (இளம். தொல். பொருள். 74)

**வேண்டூட்டடிசில்** தாந்தாம் விரும்பப்படுகின்ற பொருள்களையுடைய அடிசில். (நச். சீவ. 2142)

**வேத்தியல்** அரசர்க்கு ஆடும் கூத்து. (அரும். சிலம்பு. 14:148)

**வேத்தியல் மண்டபம்** அரசிருப்பாய பேரோலக்க மண்டபம். (அரும். சிலம்பு. 28:79)

**வேதிகை** விவாகார்த்தமாக விட்ட சதுஸ்தம்ப வேதிகை. (நச். சீவ. 2463)

**வேழம்** தேரை போயிற்றென்றாற் போல்வதொரு நோய். (நச். சீவ. 1024)

வெள்ளிலுக்கு (விளாமரம்) வருவதொரு நோய். (நச். சீவ. 232)

**வேற்றுமை** எட்டு வேற்றுமையாவன. பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என்பன. (இளம். தொல். சொல். 1)

செயப்படுபொருள் முதலாயினவாகப் பெயர்ப் பொருளை வேறுபடுத்துணர்த்தலின் வேற்றுமையாயின. (சேனா. தொல். சொல். 62)

பெயர்ப் பொருளை வேறுபடுத்துணர்த் தலின் வேற்றுமை.
(நச். தொல். சொல். 63)

பொருள்களை வேற்றுமை செய்தலின் பெயர் முதலிய எட்டற்கும் வேற்றுமை யென்னும் பெயர்த்தாயிற்று.
(கல். தொல். சொல். 63)

தன்னை யேற்ற பெயர்ப் பொருளுக்கு வேற்றுமை யென்னும் காரியத்தைச் செய்யும் கருத்தாவாகிய உருபை வேற்றுமையென்றது காரியவாகுபெயர்.
(ஆறு. நன். 291)

வேறுபடுதலால் வேற்றுமை, வேறுபடுத்த லால் வேற்றுமை, வேற்றுமையை முடித்த லால் வேற்றுமை. (சுவாமி. இலக். 20)

**வேற்றுமைப் பொருட்புணர்ச்சி** வேற்றுமை யுருபின்றி அவ்வுருபினது பொருள்படப் புணரும் புணர்ச்சி.
(ஆறு. நன். 238)

**வேற்றுமை மயக்கம்** வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமை யது ஒருபொருட்கண்ணாக சில பொருட் கண்ணாக ஏனை வேற்றுமை யுருபுஞ் சேறல். (சேனா. தொல். சொல். 74)

மயக்கம் இருவகைப்படும். பொருள் மயக்கமும் உருபு மயக்கமும் என. பொருள் மயக்கமாவது தன்பொருளில் தீராது பிறிதொன்றன் பொருட்கண் சேறல். உருபு மயக்கமாவது தன் பொருளிற் றீர்ந்து சேறல்.
(சேனா. தொல். சொல். 84)

மயக்கமாவது ஒரு வேற்றுமை பிறி தொன்றன் பொருட்கண் சேறலன்றே.

ஒருபொருட்கண் இரண்டுருபு சென்ற துணையான் மயக்கமாயிற்றெனினும் அமையும். (சேனா. தொல். சொல். 92)

**வேற்றொலி வெண்டுறை** — முன்பிற் சிலவடி ஓரோசையாயும் பின் பிற் சிலவடி மற்றோரோசையாயும் வருவன ஒருசார் வேற்றொலி வெண்டுறை எனப்படும். (யாப். கா. 32)

## வை

**வைகறை** — இராப் பொழுதின் முற்கூறு. (இளம். தொல். பொருள். 9)

**வைப்பு** — தரவு தாழிசைகளிற் பொருள்களைக் கொண்டு தொகுத்து வைத்தலின் வைப் பாகும். (நச். தொல். செய். 136)

**வைரிமுகம்** (நா) — தோடு விரித்துக் கதிர் போந்தாற் போலவும் மேயது வளைந்தாற் போலவும் நாடகப்பொருள் நன்கு விளிக்கப்படுவது. விமரிசமெனினும் வைரி முகமெனினும் ஒக்கும். (வீர. 104)

## ஸ

**ஸ்தியானக் கிரந்தி** — கனவில் செய்தது நனவில் அறியாமை. (நச். சீவ. 3076)

## துணை நூற்பட்டியல்


ஆறுமுக நாவலர், நன்னூற் காண்டிகையுரை, வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை, பதினாறாம் பதிப்பு, விக்கிரம ஆண்டு.

ஆறுமுக நாவலர் (பதி.), சுவாமிநாத தேசிகர் அருளிச் செய்த இலக்கணக் கொத்து, வித்தியாநுபாலன அச்சகம், சென்னை, ஆறாம் பதிப்பு, 1956.

இளங்குமரன், இரா., (பதி.), யாப்பருங்கலம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1976.

கோபால கிருட்டிண மாசார்யர், வை. மு. (பதி.), தண்டியலங்காரம் மூலமும் பழைய வுரையும், ஆனந்த பார்வதி அச்சகம், சென்னை, 1956.

கோபாலையர், தி. வே., (பதி.), பிரயோக விவேகம் மூலமும் உரையும், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, 147, தஞ்சை, 1973.

கோவிந்தசாமிப் பிள்ளை, இராம., (பதி.), தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியருரை, தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் 93, தஞ்சை, 1962.

கோவிந்தராச முதலியார், கா. ர., (பதி.), வீரசோழியம் (பெருந்தேவனார் இயற்றிய உரையுடன்), திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1970.

சாமி ஐயா, சு., (பதி.), யாப்பருங்கலக்காரிகை (பாட நுண்பதிப்பு), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், இரண்டாம் பதிப்பு, 1975.

சாமிநாதையர், உ. வே., (பதி.), சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும், டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1978.

சாமிநாதையர், உ. வே (பதி.), சீவக சிந்தாமணி மூலமும் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஏழாம் பதிப்பு. 1969.

சாமிநாதையர், உ. வே., (பதி.), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், கேசரி அச்சுக்கூடம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1931.

சாமிநாதையர், உ. வே., (பதி.), புறநானூறு மூலமும் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஆறாம், பதிப்பு, 1963.

சாமிநாதையர், உ. வே., (பதி.), புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் சாமுண்டிதேவ நாயனாரியற்றிய உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1963.

சிவஞான சுவாமிகள், தொல்காப்பியச் சூத்திர விருத்தி இலக்கண விளக்கச் சூறாவளி, ஆறுமுகநாவலர், (பதி.), வித்தியாநுபாலன அச்சகம், சென்னை, ஆறாம் பதிப்பு, 1956.

சிவஞான சுவாமிகள், நன்னூல் விருத்தியுரை, பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1971.

சுப்பிரமணியபிள்ளை, கே., (பதி.), திருக்கோவையார் (பேராசிரியர் உரையும் பழைய வுரையும்), திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதிய வெளியீடு 24, ஸ்ரீவைகுண்டம், 1972.

,, இறையனார் அகப்பொருள், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1976.

,, கலித்தொகை நச்சினார்க்கினியருரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1981.

,, திருக்குறள் (பரிமேலழகர் உரையுடன்), அருணா பதிப்பகம், மதுரை, ஐந்தாம் பதிப்பு, 1963.

,, திருக்குறள் மூலமும் மணக்குடவருரையும், காசிமட வெளியீடு, திருப்பனந்தாள், 1973.

,, தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம் பூரணம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1977.

,, தொல்காப்பியம் எழுத்ததிகாரம், நச்சி னார்க்கினியம், திருநெல்வேலித் தென் னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1923.

,, தொல்காப்பியம், சொல்லதிகாரம், இளம் பூரணம் (சு. சுந்தரமூர்த்தி குறிப்புரை யுடன்), திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1973.

சுப்பிரமணியபிள்ளை, கே., (பதி.), தொல்காப்பியம் சொல்லதிகாரம், கல்லாடனார் உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1981.

" தொல்காப்பியம் சொல்லதிகாரம், சேனாவரையம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1946.

" தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச்சிலையார் உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1979.

" தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1969.

" தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் நச்சினார்க்கினியருரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1965.

" தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியருரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1977.

" தொல்காப்பியம் பொருளதிகாரம் பேராசிரியம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1966.

" நம்பியகப்பொருள் (கா. ர. கோவிந்தராச முதலியார் குறிப்புரையுடன்), திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1969.

" நேமிநாதம் உரையுடன், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1973.

" மாறனலங்காரம் மூலமும் உரையும், செந்தமிழ்ப் பிரசுரம், தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, இரண்டாம் பதிப்பு, 1929.


KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA

ச. மெய்யப்பன்
அறக்கட்டளை




# மணிவாசகர் பதிப்பகத்தின் திறனாய்வு நூல்கள்

| | |
|---|---|
| உலக மொழிகள் | — டாக்டர் ச. அகத்தியலிங்கம் |
| தொல்காப்பியத் திறன் | — டாக்டர் வ. சுப மாணிக்கம் |
| பாட்டியல் திறனாய்வு | — டாக்டர் ந. வீ. செயராமன் |
| திறனாய்வு நெறி | — டாக்டர் மா. இராமலிங்கம் |
| தமிழ் மொழி வரலாறு | — டாக்டர் சு. சக்திவேல் |
| நாட்டுப்புற இயல் ஆய்வு | — டாக்டர் சு. சக்திவேல் |
| நடையியல் | — டாக்டர் ஜெ. நீதிவாணன் |
| உரைச்சொற் களஞ்சியம் | — டாக்டர் சா. கிருஷ்ணமூர்த்தி |
| உலகப் பெருங்கவிஞர் கம்பர் | — இரா. வ. கமலக்கண்ணன் |
| உலகப் பெருங்கவிஞர்கள் | — ப. கோதண்டராமன் |
| உரையாசிரியர்கள் | — ஞ. வை. அரவிந்தன் |

Wrapper Printed at : Eskay Art Printers, Madras-5. Ph, 841478
Designed by : P. N. Anandan